உ
சிவமயம்.

# தத்துவப் பிரகாசிகை.

# தத்துவ சங்கிரகம்.

# தத்துவத்திரய நிர்ணயம்.

இவற்றின் மூலமும் விரிவுரையும்.
(தமிழ் மொழி பெயர்ப்பு.)

இவை

சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்து

சமஸ்கிருத பண்டிதர்

நா. கிருஷ்ண சாஸ்திரிகளால்

தமிழில் மொழி பெயர்த்து

ஷை சங்கத்துச் சித்தாந்த சாத்திர போதகர்
பொ. முத்தைய பிள்ளை அவர்களால்
பரிசோதிக்கப் பெற்று

தேவகோட்டை
சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தாரால்

காரைக்குடி
தனவைசிய ஊழியன் அச்சுக்கூடத்தில்
அச்சிடப் பெற்றன.

இரக்தாக்ஷி—1925.




சிவமயம்.

# முகவுரை.

ஆன்மாக்க ளுய்தற்பொருட்டுச் சிவபெருமான் அருளிச் செய்தநூல் வேதம் சிவாகமம் என்னும் இரண்டு. அவற்றுள், வேதம் இருக்கு, யசுர், சாமம், அதர்வணமென நால்வகைப் பட்டு, அவை தனித்தனி கர்மகாண்டம், ஞானகாண்டமென இரண்டு காண்டங்களை யுடையன. சிவாகமம் காமிக மு[illegible] வாதுளமிறுதியாக இருபத்தெட்டு வகைப்பட்டு மூலாகமமெ[னப்] பெயர் பெற்றும், பௌட்கரம், மிருகேந்திரம் முதலாக[ப்] திறப்பட்டு உபாகமமெனப் பெயர் பெற்றும், அவை தனித்தனி சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதம், ஞானபாத மென்னும் நான்கு பாதங்களையுடையன.

வேதம், அதிகாரிகளின் பேதம் பல வாதலின் சாதாரண அதிகாரிகளை நோக்கி ஏனைய கடவுளர்க்கும் ஏனைய போகங்களுக்கும் பரத்துவங்கூறிச் சென்று, முடிவில் உத்தம அதிகாரிகளை நொக்கிச் சிவபெருமானுக்கும் அச்சிவபெருமானோடு இரண்டறக் கலந்து நின்று அனுபவிக்கப்படுஞ் சிவானந்தமென்னுஞ் சிவபோகத்திற்கும் பரத்துவங் கூறும்.

சிவாகமம், உத்தம அதிகாரிகள் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதர மென்னும் நால்வகையினராவ ராதலின், அவர்களுள், மந்ததர முதலிய மூவரை நோக்கிச் சிவபெருமானுடைய தடத்த நிலைக்கும், சாலோகாதி பத முத்திகளுக்கும், சரியை முதலிய மூன்று பாதங்களால் பரத்துவங் கூறிச் சென்று, முடிவில் தீவிரதர அதிகாரிகளை நோக்கிச் சிவபெருமானுடைய சொரூப நிலைக்கும், அதனோடு இரண்டறக் கலந்து நின்று அனுபவிக்கப்படும் சிவானந்தமாகிய சிவபோக மென்னும் பரமுத்திக்கும் ஞான பாதத்தால் பரத்துவங் கூறும்.

சிவபெருமானுக்கும் ஏனைய கடவுளர்க்கும் பரத்துவங் கூறுதலாலும், சாதாரண அதிகாரிக்கும் உத்தம அதிகாரிக்கும் உரியன வாதலாலும் வேதம் பொது நூலெனவும், சிவபெருமான் ஒருவற்கே பரத்துவங் கூறுதலாலும், உத்தம அதிகாரிக்கே உரியனவாதலாலும், சிவாகமம் சிறப்பு நூலெனவும் வழங்கப்படும். இவ்வுண்மையினை, சிவஞான சித்தியார் எட்டாஞ் சூத்திரம் பதினேழாவது, "வேதநூல் சைவ நூல்" என்று தொடங்கிய செய்யுளில் "ஆரணநூல் பொது சைவம் அருஞ் சிறப்பு நூலாம், நீதியினால் உலகர்க்கும் சத்திநிபாதர்க்கும் நிகழ்த்தியது" என ஸ்ரீ அருணந்தி சிவாசாரியர் அருவாற்றானு முணர்ந்துகொள்க.

இத்தகைய சிறப்பு வாய்ந்த சிவாகமங்களின் ஞானபாத மூலங்களும் அவற்றின் வியாக்கியானங்களும் மிக விரிவாக வுள்ளமையின், அவற்றின் உண்மையினை எவரும் எளிதினுணரும் வண்ணம் சிவாநுபவச் செல்வராகிய பெரியார் சிலர் வடமொழியில் சுருக்கமாகச் சுலோக ரூபமாய் எட்டு நூல்கள் செய்து உதவினர். இந்த எட்டு நூல்களும் சிவாகமங்களின் ஞானபாதப் பொருள்களையே விளக்குதல்பற்றி, ஆக்கியோர் பலராயினும் அஷ்டப் பிரகரணமெனத் தொகுத்து வழங்கப்படுகின்றன.

இரண்டாவது சைவ வினாவிடையில் இந்த எட்டுப் பிரகரணங்களையுஞ் சிவாகமங்களின் சார்பு நூல் என்றனர் ஸ்ரீ ஆறுமுக நாவலரவர்களும்.

இந்த எட்டுப் பிரகரணங்களுக்கும் பலவுரைகளிருப்பினுந் தொகுதியாயிருத்தல் பற்றி இவ்வெட்டனுள் ஆறு பிரகரணங்களுக்கு ஸ்ரீ அகோர சிவாசாரியரும், இரண்டு பிரகரணங்களுக்கு ஸ்ரீராமகண்டரும், சுருக்கமாகவுந் தெளிவாகவும் உரை செய்தருளினர். இப்பிரகரணங்களாலும் இவற்றின் உரையாலும் சிவாகமங்களின் ஞானபாதப் பொருள்கள் இனிது விளங்குமென்பது திண்ணம்.

இப்பிரகரணங்களின் பெயர் வருமாறு :—

௧. தத்துவப் பிரகாசிகை.

௨. தத்துவ சங்கிரகம்.

௩. தத்துவத்திரய நிர்ணயம்.

௪. இரத்தினத்திரயம்.

௫. போக காரிகை.

௬. நாத காரிகை.

௭. மோக்ஷ காரிகை

௮. பரமோக்ஷ நிராச காரிகை என்பன.

இவற்றுள், முன்னைய ஆறுக்கும் ஸ்ரீ அகோர சிவாசாரியரும், பின்னைய இரண்டிற்கும் ஸ்ரீராம கண்டரும் உரை செய்தருளினர்.

இவற்றுள், ஸ்ரீ அகோர சிவாசாரியருரையுடன் தத்துவப் பிரகாசிகை முதலிய மூன்றும் ஒரு புத்தகமாகவும், இருவருரையுடனும் இரத்தினத்திரய முதலியவைந்தும் ஒரு புத்தகமாகவும், நாகரலிபியில் இச்சங்கத்திலிருந்து அச்சிட்டிருக்கின்றமையால், அம்முறையே மூன்று பிரகரணங்களும் தமிழில் மொழிபெயர்த்து அச்சிட்டு வெளியிட்டிருக்கின்றோம். அவற்றுள்,

## தத்துவப் பிரகாசிகை.

முப்பத்தாறு தத்துவங்களின் பெயரும், அவை தோன்றியொடுங்கு முறையும், பதியின் பேதமும், பசுக்களின் பேதங்களும் ஆகியயிவற்றை நன்கு விளக்குவது. இந்நூலாசிரியர் ஸ்ரீ போஜதேவரென்னும் அரசர். இவர் சரித்திரம் நன்கு புலப்படவில்லை. ஆயினும், ஸ்ரீ அகோர சிவாசாரியாராலியற்றப் பெற்ற பத்ததியிலுள்ள உத்ஸவ விதியில் கோத்திரவிதி நிர்ணயமென்

னும் படலத்தில், "ததோ பூஸ் லாட" "சர்வ வித்யாதிபேர யஸ்ய" என்னும் வாக்கியங்களை முதலாகவுடைய இரண்டு சுலோகங்களா லிந்நூலாசிரியருக்கு ஆசிரியர் உக்துங்க சிவாசாரியரெனவும், அவர் தமது பெயரால் உக்துங்க சிவாசாரிய பத்ததி என ஓர் பத்ததி செய்திருக்கிறதாகவும் தெரிகிறது. இன்னும், ஸ்ரீ அகோரசிவாசாரியர் கூறிய "சர்வாகமார்த்த நிர்ணேது" என்னும் வாக்கியங்களால், இந்நூலாசிரியராகிய போததேவர் சிவாகமங்களில் மிகத் திறமை வாய்ந்தவரெனத் தெளிவாகின்றது. இதுவிற்க, சூத சம்ஹிதையின் வியாக்கியானத்தில், ஸ்ரீ வித்தியாரண்யர் இந்தத் தத்துவப் பிரகாசிகையின், சுலோகங்களைப் பலவிடங்களிலும் எடுத்தாள்கின்றனர்.

இதற்கு ஸ்ரீ குமார தேவர் ஒரு உரை செய்துள்ளார். திருவனந்தபுரம் மகாராஜா அச்சுக்கூடத்தில் அவ்வுரை அச்சாகி வெளி வந்திருக்கின்றது.

## தத்துவசங்கிரகம்.

சுவாயம்புவ ஆகமத்திற் கூறியவாறு, [illegible] ஒடுக்க முறைப்படி முப்பத்தாறு தத்துவங்களுக்குஞ் சுத்தி செய்தல் முறைமையாதலின், அம்முறைப்படி பிருதிவிமுதல் சிவதத்துவம் வரையுள்ள முப்பத்தாறு தத்துவங்களையும் நன்கு விளக்குவது. இந்நூலாசிரியர் ஸ்ரீ சத்தியோஜோதி சிவாசாரியர். இவர், ரௌரவாகமத்திற்கு சுவிருத்தி யென்னும் ஒரு உரை செய்துள்ளாரென்பது, இந்நூலினிறுதியிலுள்ள ஐம்பத்தெட்டாவது சுலோகத்தால் விளங்குகின்றது. ஸ்ரீ ரௌரவாகமத்தை அனுசரித்து இந்தத் தத்துவசங்கிரகம் செய்யப்பட்டுள்ளது. இதற்கு, பட்ட நாராயண கண்டரால் இயற்றப் பெற்ற டீகை என்னும் பெயருடைய ஒரு பெரிய உரையுமுள்ள தென்றும், அவ்வுரை மிக விரிவாகவுள்ளதெனக் கருதி, யாவரும் எளிதி லுணரும் வண்ணம் ஸ்ரீ அகோரசிவாசாரியர் லகுடீகை யென்னும் ஒருரை செய்தனரென்றும் நூலாரம்பத்தில் ஸ்ரீ அகோர சிவாசாரியர் கூறும் ஆற்றால் அறியக் கிடக்கின்றன.

## தத்துவத்திரய நிர்ணயம்.

பதி, பசு, பாசமென்னும் மூன்று பொருள்களை இனிது விளக்குவது. இந்நூலாசிரியர் தத்துவ சங்கிரகஞ் செய்த சத்தியோஜோதி சிவாசாரியரே யாவர். இவர், ரௌரவாகமத்தை அநுசரித்துத் தத்துவ சங்கிரகமும், சுவாயம்புவ ஆகமத்தை அநுசரித்துத் தத்துவத்திரய நிர்ணயமுஞ் செய்தன ரென்பது, இந்நூலினிறுதியிலுள்ள முப்பத்திரண்டாவது சுலோகத்தானும் அதனை அநுசரித்த இரண்டாவது சுலோக உரையானு மறியக் கிடக்கின்றது. இந்நூலாசிரியர் சரித்திரம் புலப்படவில்லை.

இந்த மூன்று பிரகரணக்களும் தமிழில் மொழி பெயர்த்து அச்சிட்டு வெளிவரச் செய்தவாறுபோல, ஏனைய ஐந்து பிரகரணங்களும் தமிழில் மொழி பெயர்த்து அச்சாகி விரைவில் வெளிவரும் வண்ணம் திருவருள் துணை புரிவதாக.

சிவாலயம், வழிபடுவோர் அன்பின் வழியாகச் சிவபெருமான் வெளிப்பட்டுத் தோன்றி அருள் புரிதற்கு வாயிலாகும். சிவாகமங்கள், ஆராய்வோர் அறிவின் வழியாகச் சிவபெருமான் வெளிப்பட்டுத்தோன்றி யருள் புரிதற்கு வாயிலாகும். ஆகவே சிவாலய ஜீரணோத்தாரணம் போலச் சிவாகம ஜீரணோத்தாரணமும் சிவ புண்ணியமென்பது தெளிவு. இவ்வுண்மையினை நன்குணர்ந்த இச்சங்கத்தார், சிவாகம ஜீரணோத்தாரணஞ் செய்வதென்னும் பொருள் தோன்ற, “சிவாகம சித்தாந்த பரிபாலன சங்க” மென்னும் பெயராலிச்சங்கத்தை நிறுவிச் சிவபெருமான் றிருவருட்டுணையினையும், அங்கத்தினர்களாயும் போஷகர்களாயுமுள்ள கனவான்களின் பொருட்டுணையினையுங் கொண்டு செவ்வனே நடாத்தி வருகின்றனர்.

சிவாகமங்களிருக்கும் ஆதிசைவ சிவாசாரியரில்லங்களில் மிகப் பழைய ஏடுகளைப் புதிதாக வெழுதி வைக்காமையால், பல இடங்களில் பல ஏடுகள் உருவமில்லாது போயின. உள்ள

சில ஏடுகளும் கையிலெடுக்கப் பொறுக்காத நிலையிலிருக்கின்றன. இவற்றுள், ஆங்காங்குச் சென்று சில ஏடுகள் பெழுதி வந்திருக்கின்றன. இன்னும் பெழுதி வரவேண்டியவை பலவுள்ளன. இன்னுஞ் சிலகாலம் பராமுகமாயிருந்தால் ஏடுகள் கிடைப்பது அரிதாகிவிடும்.

சிவாகம ஜீரணோத்தாரணஞ் சிவ புண்ணிய மெனத் தெளிந்து, இப்புண்ணியத்தைச் செய்ய முன் வந்திருக்கும் சங்கம் இவ்வுலகத்துள் இரண்டேயாம். அவற்றுள், ஒன்று காஸ்மீர தேசத்து மகா ராஜாசங்கம். மற்றொன்று இச்சங்கமே.

இச்சங்கத்திலிருந்து இதுவரை வெளி வந்திருக்கும் நூல்களாவன :—

| | | |
|---|---|---|
| க. | சிவார்ச்சனா சந்திரிகை | (நாகரம்) |
| உ. | அஷ்டப் பிரகரணத்துள் முதல் மூன்று பிரகரணங்கள் | (நாகரம்) |
| ௩. | பின் ஐந்து பிரகரணங்கள் | (நாகரம்) |
| ௪. | மதங்கம் ஞானபாதம் மூலம் | (நாகரம்) |
| ௫. | முதல் மூன்று பிரகரணங்கள். | (தமிழ்) |

அச்சிலிருக்கும் நூல்கள்.

| | |
|---|---|
| சம்பு பூஜா விதி | (கிரந்தம்) |
| சைவபூஷணம் | (கிரந்த மூலமுந் தமிழுரையும்) |
| சிவார்ச்சனா சந்திரிகை | (தமிழ்) |
| சைவ பரிபாஷை | (நாகர மூலமுந் தமிழுரையும்) |

இன்னும் அச்சிடுதற்குச் சேகரித்து வைத்திருக்கும் நூல்கள் பலவுள. சேகரிக்க வேண்டிய நூல்களும் பலவுள. எல்லாமினிது நிறைவேறும் வண்ணம் எல்லாம் வல்ல சிவபெருமான் திருவருள் துணைபுரிவதாக.

இங்ஙனம்,

சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தார்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

போஜ தேவர் இயற்றிய

# தத்துவப் பிரகாசிகை மூலமும்,

இதற்கு

அகோர சிவாசாரியரியற்றிய விரிவுரையும்.

(தமிழ் மொழிபெயர்ப்பு)

உரையாசிரியரால்

செய்யப்பெற்ற உரை மங்கலம்.

(1) முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அதீதராயும், சத்தியுடன்கூடினவராயும் உள்ள பரமசிவனை நமஸ்கரித்து தத்துவப் பிரகாசத்திற்குத் தெளிவாயும், இலகுவாயும் விளங்கும் வியாக்யானத்தைச் செய்கின்றேன்.

(2) சித்தாந்த சாஸ்திர ஞானமில்லாமல் *அத்வைத வாசனையுடன் கூடிய வேறு சில உரையாசிரியர்களால் வேறு வேறு விதமான உரை செய்யப்பட்டிருக்கின்றது. ஆகலால், நான் இதற்கு உரை செய்ய நேர்ந்தது.

*அத்வைத மென்றது மாயாவாதத்தை.

# நூல்.

## அவதாரிகை.

நூலாசிரியர் தாம் எடுத்துக்கொண்ட நூல் இடையூறு புகுதாமல் இனிது முடியும் பொருட்டுச் சித்தாந்த சாத்திரங் களிற் சொல்லப்படும் பொருளாயுள்ளவரும், சகல தத்துவங் களையுங் கடந்து நிற்பவரும், நிட்கள சொரூபருமாயுள்ள பரம சிவனை முதற்கண் வணங்குகின்றார். அவ்வணக்கம் வருமாறு:—

(1) ஞான சொரூபனும், ஒன்றும், வியாபகனும், நித்தியனும், நித்திய முத்தனும், பிரபுவாயும், சாந்தனும், உலகத்திற்கு நிமித்த காரணனும், அனைவருக்கும் அனுக்கிர கம் செய்கின்றவனும் உள்ள பரமசிவன் அனைத்திற்கும் மேற் பட்டவனுய் விளங்குகின்றான். *என்பதாம்.

ஞானம் என்றதனால், ஞானம் கிரியை யிரண்டுங் கொள் ளப்படும். மிருகேந்திரத்தில் இக்கருத்தேபற்றி, "சைதன்யம் ஞானக்கிரியா ரூபம்" எனக்கூறப்பட்டிருக்கின்றது. ஞான சொரூபன் என்றது ஞானமே சரீரமாக உடையவனென்பதாம். இதனால், கன்மம் காலம் முதலியவைகளைக் கடவுளாகக் கொண்ட வாதிகளுக்கு, அவை சடமாதல் போல, பரமசிவன் சடரூபமாதலில்லை யென்றவாறும். சடரூபமான பொருள்களு க்கு அறிவு ரூபமான பொருளின் சம்பந்தமின்றித் தொழிற் பாடு நிகழுமாறில்லை. ஆதலால், பரமசிவன் ஞானமே சரீர மாக உடையவன் என்பது கண்டு கொள்க.

பரமசிவனுக்குச் சுத்த மாயாசரீரம் உண்டென்று கொள் ளுதல் பொருந்தாது. எதனாலெனின், சுத்த மாயா சரீரத்தை யுடைய விஞ்ஞான கலருள் ஒருவராய் ஈசுவரத் தன்மை சித் திக்காதாகையாலென்க. அன்றியும், சுத்த மாயா சரீரத்தை

* வாழ்த்து, வணக்கம், பொருளியல்புரைத்தல் என்னும் மங்கலம் மூன்றனுள் இது பொருளியல்புரைத்தலெனவறிக.

வேறொரு கடவுள் தரக்கொண்டனரா? தானே கொண்டனரா? என, வினவுமிடத்து வேறொரு கடவுள் தரக்கொண்டாரெனில், அவர் எந்தச் சொரூபத்தோடு நின்று தந்தார்? எனவும், தானேகொண்டாரெனில், தான் எந்தச் சொரூபத்தோடு நின்று கொண்டார்? எனவும் வினாக்கள் நிகழும். அவற்றிற்கு விடையாக, சுத்த மாயா சரீரத்தைக் கொண்டு நின்று தந்தாரெனவும், கொண்டாரெனவும் கூறின், மேலும் அவ்வாறே வினாக்கள் எழும்பி வரம்பின்றிபோடல் என்னும் குற்றமாம்.

அனேக ஈசுவரர் உண்டென்பதை மறுத்தற்கு, "ஒன்றும்" என்றார். அனேக கர்த்தாக்களாற் செய்யப்படுந்தேரும், ஒரு கருத்தாவின் ஏவல்வழி நின்று செய்யப்படுதலால், கருத்தா ஒருவனே யென்பது கண்டுகொள்க.

எந்த இடத்தில் அநேகர்கள் தங்களைப் பண்டிதர்களாகவும், மகான்களாகவும் எண்ணிக்கொண்டு பிரவிர்த்திக்கிறார்களோ, அந்தப் பிரவிர்த்தியானது முடிவுபெறமாட்டாது. ஆதலால், எந்தவகையினாலும் அநேகேசுரவாதம் பொருந்தாது. இனி, ஒரே காலத்தில் அநேக ஈசுவரர் உண்டென்பது பொருந்தாதாயினும், ஒரு ஈசுவரருக்குப் பின் ஒரு ஈசுவரராக அநேக ஈசுவரர் உண்டென்று கூறும் பிரவாகேசுவர வாதம் பொருந்தும் எனின், அதுவும் பொருந்தாது. எதனாலெனின்; ஈசுவரத் தன்மையென்பது, சொரூபத்தினுடைய பிரகாச லாபமேயாதலால், அது எக்காலத்துங் கெடுதலில்லை ஆதலால் என்க.

"வியாபகன்" என்றதனால், எல்லாப் பொருள்களினிடத்தும் உள்ளீடாய் நிற்றலைக் குறிக்கும். குறிக்கவே, சரீர அளவாக இருப்பவன் என்ற சமணர்கொள்கை மறுக்கப்பட்டது. அக்கொள்கையை ஒத்துக்கொண்டால், ஒடுங்குதல் விரிதல் என்னும் தர்மத்தையுடையவனெனப்பட்டு, சடத்தன்மை உடைமையும், அநித்தியத் தன்மை உடைமையும் சம்பவிக்கும்.

"நித்தியன்" என்றதனால், தோற்றமும் ஒடுக்கமும் இல்லாதவனென்பது பெறப்படும். படவே, பவுத்தர்கள் கொள்ளும்

க்ஷணிக விஞ்ஞானவாதம் மறுக்கப்பட்டதாகும். எதனாலெனின்;- உற்பத்தியாகும் பொழுதே நசிக்குந்தன்மையுடைய பொருளுக்கு, உலகத்துக்குக் கருத்தாவாயிருக்குந் தன்மை பொருந்தாமையாலென்க.

முத்தான்மாக்களும் ஈசுவரத்தன்மை யுடையவராதலால், அவர்களும் ஈசுவரர்தாமே யென்பாரை மறுத்தற்கு "நித்திய முத்தன்" என்றார். அஃதாவது, ஈசுவரப்பிரசாதத்தால் முத்தியடைந்த ஆன்மாக்கள் போலன்றி, இயல்பாகவே முத்தன் என்பதாம். இவ்வாறு கொள்ளவில்லையானால், வரம்பின்றி யோடல் என்னும் குற்றமுண்டாகும்.

"பிரபு" என்றதனால் தான் இன்னொருவருக்கு அடிமையாயில்லாதவன் என்பது பெறப்படும். எதனாலெனின், வேறொருவனால் முத்தனாகாது, இயல்பாகவே முத்தன் என்று மேலே கூறியவாற்றானென்க. பிரபுவாயிருப்பினும் கர்த்தாவாயிருக்குந் தன்மையில்லாதவனென்று கொள்ளலாமோவெனின், உலகத்திற்குக் கருத்தாவென்று சித்தித்திருக்கின்றபடியால், அவ்வாறு கொள்ளலாகாது.

"சாந்தன்" என்றதனால். விருப்பு வெறுப்பு இல்லாதவனென்பது பெறப்படும். அவையில்லாமை எதனாலெனின்; மோகம் மதம் இராகம் துக்கம் வாடுதல் விசித்திரத்தன்மை சந்தோஷம் ஆகிய இவ்வேழுக்குங் காரணமான மலமில்லாமையினாலென்க.

இத்தகைய ஈசுவரன் உண்டென்பதில் பிரமாணம் யாது? எனில், உலகத்துக்கு நிமித்தகாரணர் உண்டு என்று உணரும் அநுமானமே பிரமாணமாம். அவ்வநுமானம் வருமாறு:— உலகம், அவன் அவள் அது என்னும் அவயவப் பகுப்பாய்க் காணப்படுதலால் செய்யப்படுந் தன்மையுடையது. எனவே, அவ்வாறு செய்விக்கும் ஈசுவர ரூபமான நிமித்தகாரணன் ஒருவன் உண்டென்பது பெறப்படும். இந்த ஆராய்ச்சியில்,

அநுமானம் செய்யுமுறை எவ்வாறெனின்; எது எது அவயவப் பகுப்புடையதோ, அவையனைத்துங் காரியம் (செயப்படு பொருள்) எது காரியமோ, அது கர்த்தாவையுடையது. கடமாகிய காரியம் குலாலனுகிய கர்த்தாவையுடையது போல என்க. இவ்வாறே, சில ஆகமங்களில் வியவகாரத்திற்கு முன்னிலையாயிருக்கிற உலகமானது, அவ்வுலகத்தையறிந்து செய்யும் கருத்தாவையுடையது; காரியமா யிருத்தலினுல்; பிரத்தியக்ஷத்திற் காணப்படுங் கடாதிகள் போல. என்று கூறப்படுகிறது. மதங்காகமத்திலும் "நிமித்தகாரணன் ஈசன்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த ஈசுவர வாதமானது நம்மால் மிருகேந்த்ர விருத்தி தீபிகையில் விரிவாய்ச் சொல்லப் பட்டிருக்கின்றமையால், விரிவனைத்தும் ஆண்டுக்காண்க.

"அனைவருக்கும் அனுக்கிரகம் செய்கிறவர்" என்றதில், அனுக்கிரகம் என்பது * உபலக்ஷணத்தால் சிருட்டி முதலிய நான் கினையுந்தழுவும். எனவே,; சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்னும் ஐந்து கிருத்தியங் களினுல் எல்லா வுயிர்களுக்கும் போகமோக்ஷங்களைக் கொடுக் கிறவரென்பது கருத்து.

இதுவரையுஞ் செய்த ஆராய்ச்சியால், ஈசுவரன் அனைத் துக்குங் கருத்தாவா யிருக்கின்றுனென்பது பெறப்பட்டது. படவே, அனைத்தையும் அறிந்தவனுகவு மாகின்றுன். எதனு லெனின்; எதனை ஒருவன் அறியவில்லையோ அதனை அவன் செய்ய முடியாதாகையா லென்க. இக்கருத்துப்பற்றியே, "சாதனம் அங்கம் பலம் ஆகிய இவற்றுடன் சர்வகர்த்தாவா யிருக்கின்றமையால் சர்வஞ்ஞன்" என்றுர் பிறரும். எவன் எதை அறிகின்றுனே, அவனே அதைச் செய்கின்றுன் என்ற பிரத்தியக்ஷமும் இக்கருத்தை வலியுறுத்தும். இத்தகைய ஏதுக்களால், பரமசிவன் அனைத்திற்கும் மேம்பட்டவனுய் விளங்குகின்றுனென்பது சித்தித்தது. (1)

---

* உபலக்ஷணமாவது, சிறந்தவொன்றால் ஏனைபதழுவுதல். ("ஒரு மொழியொழி தன்னினங் கொளற்குரித்தே" என்பது நன்னூல்.)

## அவதாரிகை.

இவ்வாறு ஞானம் முதலிய தர்மங்களை உடையவரான பரமசிவனைத் தோத்திரஞ் செய்து, பின்னர், சத்திரூபமான சிவ சாமார்த்தியத்தின் லயாவஸ்தை இதுவென்று சத்தியைத் தோத்திரஞ் செய்யு முறைமையிற் காட்டுகின்றார்.

(2) யாதொன்று உண்டாகிறதில்லையோ, நாசமடைகிற தில்லையோ, ஒழிவை யடைகிறதில்லையோ, சுகத்தைக்கொடுக்க வுஞ்செய்கிறதோ, அத்தகைய ஞானக்கிரியா ரூபமான சிவனுடைய *பிரகாசமானது அனைத்திற்கும் மேலாயிருக்கின்றது என்பதாம்.

உற்பத்தி நாசம் இல்லையென்றதனால், அவற்றுடன் கூடிய பவுத்த ஞானத்தினும், சைதன்னிய ரூபமான சிவஞானத்தின் விசேடம் அறிவிக்கப்பட்டது. அவ்வாறாயின், "ஞானக் கிரியா ரூபமான சேதனத் தன்மை ஆன்மாவினிடத்தில் எக் காலத்தும் உள்ளது" என்னும் சுருதியால் ஆன்மாவும் ஞானக் கிரியைகளையுடையது என்பதுபெறப்படும். படவே, ஆன்மா வினது ஞானக்கிரியைகளினும், சிவனது ஞானக்கிரியைகளுக்கு விசேடமென்னை? என, ஆசங்கை நிகழும். அவ்வாசங்கையை நீக்குதற்கு "ஒழிவை யடையாமலும், சுகத்தைக் கொடுப்ப தாயும் இருப்பது என்றார். எனவே, பிறிதொரு சைதன்னி யத்தால் தான் மலத்தினின்றும் விடுதலையடையாமல், மலத் தோடு கூடியிருக்கும் ஆன்மாக்களுக்கு அம்மலத்தை விடுதலை செய்வது விசேடம் என்பதாம்.

இதனால், ஞானக்கிரியா ரூபமான சிவஞானமானது, அனைத்திற்கும் மேம்பட்டதென்பது சித்தித்தது. "சித்தி னுடைய தர்மமானது சடமாகாது" என்னும் சுருதியால் ஞானமே சொரூபமாகிய சிவனுடைய தர்மமாகிய ஞானக் கிரியா ரூபமும் ஞானமயமே என்பதாம். (2)

(அ—கை) இனி, அதிகார அவஸ்தையினும், சிவனுக்குச் சத்தியே காரணமென்று கூறுகின்றார்.

---

* பிரகாசம் என்றது சத்தியை.

(3) அந்தப் பரமசிவன் இந்த ஆன்ம வர்க்கங்களுக்குப் போக மோக்ஷங்களைக் கொடுப்பதில் எந்தச் சத்தியால் சமர்த்தராகின்றாரோ, ஒன்றாயும், ஞானரூபமாயும், சமவேதமாயும் இருக்கிற அந்தச் சத்தியை, எல்லாவிதத்தினாலும் நமஸ்கரித்தவனாக ஆகிறேன் என்பதாம்.

சத்தி ரூபமான காரணத்தினாலேயே ஆன்மாக்களுக்குப் போக மோக்ஷம் சித்தித்தற் பொருட்டுப் பரமசிவன் பஞ்ச கிருத்தியஞ் செய்வதில் சமர்த்தனாக ஆகிறார். சத்தி ரூபமான காரணத்தைத் தவிர, வேறு காரணம் கிடையாது. அவ்வாறாயின், தேகேந்திரியமில்லாத ஒருவனுக்கு உலகத்தில் செய்யுந் தன்மை காணப்படுவதில்லையாதலால், அவையில்லாத சிவனுக்குச் செய்யுந்தன்மை யுண்டென்பது எப்படிச் சித்திக்கும்? எனின், தேகேந்திரியத்திற்கு வேறான ஆன்மாவிற்குத் தனது சத்திமாத்திரத்தினாலேயே தன்னுடைய தேகத்தின் தொழிற்பாடு விஷயத்தில் செய்யுந் தன்மையான சாமர்த்தியம் காணப்படுகின்றமையால், அவ்வாறே, சத்திமாத்திரத்தினால் பஞ்ச கிருத்தியஞ் செய்வதில் சிவன் சமர்த்தனாகிறான் எனவறிந்து கொள்க*. இன்னும், சத்தியின் வேறாகக் காரணமில்லையென்று நூல்களிற் கூறப்பட்டிருப்பதையும் நோக்குக.

இந்தச் சத்தி ஒன்று என்றமையால், இச்சை முதலிய பேதங்களும், வாமை முதலிய பேதங்களும் ஞானசத்திக்கு விஷயமாகின்ற அறியப்படும்பொருள்பற்றியும், கிரியாசத்திக்கு விஷயமாகின்ற செயப்படுபொருள்பற்றியும் உண்டாகும் தொழில் வேறுபாடுகளால் உபசாரமேயன்றி உண்மையிலில்லையென்பது தெரிவிக்கப்பட்டது. ஒரு சிவசத்தியே தொழில் வேறுபாட்டால் அநேகமென்று சுருதியுங் கூறுகின்றது.

---

* இதனால் சிவனுக்கு அனைத்துந் திருமேனியாதல் கண்டு கொள்க. இதுபற்றியே "உலகமே உருவமாக" என்றார் அருணந்தி சிவாசாரியர்.

ஞானரூபம் தொழில் வேறுபாட்டால் பலவாறாயினும், பரிணாமமில்லை. எதனாலெனின், பரிணாமமென்பது சடத்தின் றன்மையாதலா லென்க.

" சமவேதம் " என்று சொன்னபடியால், பரமசிவனுக்கு இந்த அபின்ன சத்தியின் வேறாகச் சுத்தமாயை, அசுத்த மாயை யென்னும் பின்னமான பரிக்கிரகசத்தி ‡ இரண்டு உண் டென்று அறிவிக்கப்படுகிறது.

முதற்காரண மில்லாமல் உலக உற்பத்தி கூடாதாகையால், பரிக்கிரகமான அவ்விரண்டு சத்திகளும் உண்டென்பது கண்டு கொள்க. கர்த்தாவில்லாமல் காரியம் உண்டாகாததுபோல், முதற்காரணங்களாகிய இவை இல்லாமலும் காரியம் உண்டாகா தென்று பின்னர்க் காட்டுகின்றார். (3)

(அ—கை) இந்தப்பிரகரணத்தில் சொல்லப்படும் விஷயம் இதுவென்று கூறுகின்றார்.

(4) உயிர்களிடத்து வைத்த அனுக்கிரகத்தின் பொருட் டுக் கருணை நிறைந்த மனதையுடைய நம்மால் தத்துவங்களைப் பிரகாசிப்பிக்கின்ற தத்துவப்பிரகாசம் என்னும் இந்த நூலா னது சுருக்கமாகச் செய்யப்படுகிறது என்பதாம்.

தத்துவப் பிரகாசம் என்னும் மொழியால், பிருதிவி தத் துவ முதல் சிவதத்துவம் இறுதியான தத்துவங்களையும், அத் தத்துவங்களைத் தோற்றுவிக்கும் கர்த்தாவான பரமசிவனையும், தத்துவங்களால் உபகாரத்தைப்பெறும் ஆன்மாக்களையும் விளக் கஞ் செய்கின்றாரென்பது கருத்து. (4)

(அ—கை) இந்தப் பிரகரணத்தில் தத்துவமென்றதனாற் சொல்லப்படும் பொருள்களைப் பெயர் மாத்திரையாக எடுத்துக் கூறுகின்றார்.

---

‡ பரிக்கிரக சத்தி என்பது வைப்புச் சத்தி.

(5) சிவாகமங்களில், பதார்த்தங்கள் எனப்படுவனவற்றுள், பதி பசு பாசங்கள் என்று முறையாக மூன்று பதார்த்தங்கள் முக்கியமாகக் கூறப்படும். அம்மூன்றனுள், பதியாவது—பரமசிவன்; பசுக்களாவன—ஆன்மாக்கள்; பாசங்களாவன—ஐந்துபொருள்கள்; என்பதாம். "பதார்த்தங்கள் எனப்படுவனவற்றுள்" என்பது மூலத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டது.

மகாதந்திரம் என்பது சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்குபாதங்களுடன் பதி பசு பாசம் என்னும் மூன்று பதார்த்தங்களை அறிவிக்கக்கூடியது என்று தந்திர லக்ஷணத்திற் சொல்லப்பட்டிருக்கின்றமையால், அந்த மூன்று பதார்த்தங்களுக்குள், ஏனைய பதார்த்தங்களும் அடங்குகின்றன என்று இலக்கணத்துடன் கூறப்படுகின்றது. எவ்வாறெனின்; சிவத்தின் றன்மையைத் தெரிவிக்கின்ற சிவன் என்னும் ஒருமையால் சிவத்தன்மையுடன் கூடிய மந்திர மந்திரேசுவரர், மந்திரமகேசுவரர், முத்தான்மாக்கள், சத்தி, சிவன் இவர்களும், இவர்களைத் தெரிவிக்கும் வாசகங்களும், சிவத்தன்மையை அடையச்செய்வதற்கு உபாயமான தீக்ஷை முதலிய சாதன சமூகங்களும் கொள்ளப்படும்.

ஆன்மாக்களாவன ஏவப்படுவதற்குரிமையுடையன. இந்த ஆன்மா என்னும் மொழியால் பசுத்தன்மையுடன் கூடிய விஞ்ஞானகலர், பிரளயாகலர் சகலர் ஆகிய பாசத்தொடக்குறும் ஆன்மாக்கள் அனைத்தும் கொள்ளப்படும்.

பாசம் ஐந்து என்று சொன்னபடியால், ஆணவம், திரோதானசத்தி, கன்மம், அசுத்தமாயை, சுத்தமாயை என்னும் இவை கொள்ளப்படும். இவ்வைந்துங் கொள்வதனால் சுத்தமாயை அசுத்தமாயைகளின் காரியங்களாயுள்ள தனு கரண புவன போகங்களுங் கொள்ளப்படும்.

சிவசத்தி, பதி பதார்த்தத்துள் அடங்கும் என்று சொல்லிவிட்டுப் பாச பதார்த்தத்திலும் திரோதான சத்தியை வைத்து எண்ணியது எவ்வாறுகூடும் எனின்; நன்று வினவினாய்; உண்மையில் சத்தி, பதி பதார்த்தத்துட்டான் அடங்கும். ஆயினும், பாசமாகிய ஆணவமலத்தின் தர்மங்களை, அம்மலத்தை நிலைக்களமாகக்கொண்டு நின்று தோற்றுவிக்கின்றபடியால், உபசாரமாகப் பாசத்துள் வைத்தெண்ணப்பட்டது. இக்கருத்தேபற்றி, மிருகேந்திரத்தில் "அனைத்துயிர்க்கும் அனுக்கிரகம் செய்பவளாயும், சிவரூபமாயும் இருக்கும் சிவசத்தியானது, பாசங்களினுடைய காரியங்களைத் தோற்றுவிக்கிறபடியால், உபசாரமாய்ப் பாசமென்று சொல்லப்படுகிறது" என்று கூறப்பட்டிருத்தல் காண்க. (5)

(அ—கை.) அங்ஙனமாயினும், முத்தான்மாக்களுக்குப் பாச சம்பந்தம் இல்லாமையினால் சிவத்துவம் (சிவத்தன்மை) இருத்தல் கூடும். வித்தியேசுவரர் முதலானவர்களுக்கோவெனின்; சுத்த மாயா காரிய சரீரமிருத்தலால் சிவத்துவமுடையாரோடு வைத்தெண்ணப்படும் பசுத்துவமில்லாமை எப்படிச் சித்திக்கும்? என்னும் சங்கைக்குச் சமாதானம் கூறுகின்றார்.

6. முத்தான்மாக்களும் சிவத்துவமுடையவர்கள். ஆனால் இவர்கள் அந்தப் பரமசிவனுடைய பிரசாதத்தால் முத்தியடைந்தவர்கள். அந்தப் பரமசிவன் அநாதியாகவே முத்தன்; ஒருவன்; பஞ்சமந்திரங்களைத் திருமேனியாக உடையவன் என அறியத் தகுந்தவன் என்பதாம்.

முத்தான்மாக்கள் என்பவர்கள் மலமில்லாமையினால் சிவனோடு சமத்தன்மை யடைந்தவர்கள். முத்தான்மாக்களும் என்ற உம்மையினால், வித்தியேசுரர் முதலியோர்களும் சிவனோடு சமத்தன்மை யடைந்தவர்களென்பது கருத்து. எதனாலெனின்; இவர்களுக்குப் பசுத்துவரூப மலமில்லாமையாலெனக. பசுத்துவத்தைச் செய்யும் மலமுடையவர்தான் பசுத்துவமுடையவராவர். "பசுத்தன்மையைச் செய்யும் மலத்தின் சேர்க்கை

யால் பசுக்கள்" எனக்கூறும் சுருதியும் இதற்குப் பிரமாணமாகும். இதனால் இவர்களுக்குப் பசுத்துவமில்லாது சர்வஞ்ஞத்துவம் முதலான சிவத்துவம் இருக்கிறபடியால், இவர்கள் சிவமேயாவர் என்பது கருத்து. ஆயினும், சுத்தமாயா காரியசரீர சம்பந்தம் இருக்கிறதே எனின்; அது அதிகார மல சேடத்தாலுண்டான அதிகாரங் காரணமாக உள்ளதாகும். ஆதலினாற்றான், "மாயையைக் கடந்திருப்பதனாலும், மலமில்லாமையினாலும் வித்தியா வித்தியேசுரத் தன்மையானது அபர முத்தி" என்று கூறப்படுகிறது. இவர்களுக்குக் கலை முதலிய தத்துவங்களின் சம்பந்தம் இருக்கிறபடியால் சிவத்துவம் உண்டென்றல் எவ்வாறு கூடும்? எனில் சிவபெருமானால் நேரே அனுக்கிரகிக்கப் பெற்றுச் சர்வஞ்ஞத்துவம் முதலான குணங்களை உடையவர்களாயிருத்தலினாலும், மலமில்லாமையினாலும் சிவத்துவமுடையரென்பது பொருந்துமென்க. கலை முதலிய தத்துவங்களின் சம்பந்தமும் அதிகார மலங் காரணமாகவே ஏற்பட்டது. அதிகாரத்திற்குக் கலை முதலிய தத்துவங்களின் சம்பந்தம் இன்றியமையாதது. அக்கலாதி தத்துவங்களுக்குப் பசுத்துவமுடைய ஜீவர்கள் வசியமாவது* போல், இவர்கள் வசியரல்லர். அவ்வாறாயின், சிவனுக்கும் இவர்களுக்கும் சிவத்துவம் சமமாயிருக்கிறபடியால், இவர்களினின்றும் சிவனுக்கு விசேடம் என்னை? எனின், இவர்கள் சிவப் பிரசாதத்தினால் ஆதி முத்தர்கள். சிவனோ அநாதி முத்தன். அஃதாவது, இயல்பாகவே சித்தித்துள்ள நித்ய நிர்மல நிரதிசய சர்வஞ்ஞத்துவ சர்வ கர்த்திருத்துவமுடையவன்; என்பதாம். இதுவே விசேடமென்க.

சிவனும் ஐந்து முகத்தையும் பதினைந்து கண்களையுமுடையவனென்று ஆகமங்களிற் சொல்லப்படுகிறதே, ஆதலால், கலை முதலான தத்துவங்களின் சம்பந்தம் இல்லாதவன் என்பது எப்படிச் சித்திக்கும்? எனில், பஞ்ச மந்திரங்களே திருமேனியா

*வசியம்—வசப்படுதல்

யிருத்தலால் சித்திக்குமென்க. இதன் கருத்தென்னேயோவெ னின், சரீரமில்லாதவனிடத்தில் தியான பூசை செய்யமுடியாது ஆதலால், ஆன்மாக்களின் தியானத்தின் பொருட்டுச் சிவனுக் குப் பஞ்ச மந்திர தேகம் சொல்லப்பட்டதென்க. இவ்வாறே, பௌட்கரத்திலும், "தேகமுடையவனுயிருக்கும் நீதான் உபா சிக்கத் தகுந்தவன்" புத்தியானது தேகமில்லாதவனைக் கிரஹிக் காது, பூஜகனுடைய லக்ஷியத்திற்காக அவனுக்கு ரூபம் சொல் லப்பட்டிருக்கிறது என்று கூறப்பட்டிருத்தல் காண்க. இன் னும், மிருகேந்திரத்திலும் "அவன் சரீரமிருப்பதுபற்றி எந்த எந்தக்காரியத்தைச் செய்கின்றானே, அந்த அந்தக் காரியத்தில் அவனுடைய சரீரமானது அந்தக் காரியத்திற்குக் கர்த்தாவாந் தன்மையினையுடையதாயிருக்கிறது" என்று கூறப்பட்டிருத்த லையும் நோக்குக. ஆதலால், பஞ்சமந்திர ரூபங்களாயுள்ள, சிருட்டி திதி சங்கார திரோபவ அனுக்கிரக ரூபங்களான பஞ்ச கிருத்தியங்களுக்கும் உபயோகமாயிருக்கும் ஈசானம் தத்புரு டம் அகோரம் வாமதேவம் சத்யோஜாதம் என்னும் சத்திகளே சரீர காரியத்தைச் செய்கின்றன எனக்கொண்டு அவை சரீர மென உபசாரமாய்ச் சொல்லப்படுகிறதென்க. (6)

(அ—கை) பஞ்சமந்திர தேகத்தால் நிகழும் பஞ்ச கிருத் தியம் இதுவென்று கூறுகின்றார்.

7. நித்திய பரிபூரணனை இந்தப் பரமசிவனுடைய மேலான கிருத்தியமானது சிருட்டி, திதி, சங்காரம், திரோப வங்களென்றும், அனுக்கிரகஞ் செய்தலென்றும் இவ்வாறு ஐந்து விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது என்பதாம்.

இந்த ஐந்து விதமான தொழில்களும் சுத்த மாயாகாரிய விஷயத்தில், நேரே சிவனைக் கர்த்தாவாக வுடையது. அசுத்த மாயா காரிய விஷயத்தில் அனந்தேசுவரர் முதலியோர் வாயி லாகப் பரமசிவனைக் கர்த்தாவாகவுடையதென்று சொல்லப்பட் டிருக்கின்றது. இவ்வாறே கிரணாகமத்தில், "சுத்தாத்துவா விஷயத்தில் சிவன் கருத்தா; அசுத்தாத்துவா விஷயத்தில் அனந்தேசர் கருத்தா" என்று சொல்லப்பட்டிருத்தல் காண்க.

சிவபெருமான் நேரே செய்யும் சிருட்டியாவது, சுத்த மாயையை முதற் காரணமாகக்கொண்டு சுத்த தத்துவ புவன போகங்களையும், அந்தப் புவன வாசிகளான வித்தியா வித்தியேசுவரர்களுக்குச் சுத்த மாயா காரியமான சரீரங்களையும் தோற்றுவித்தலும், நாத மாத்திரையான சூக்குமை முதலிய வாக்குக்களால் வேதாகமங்களைத் தோற்றுவித்தலுமாம். அனந்தேசுவரர் வாயிலாகச் செய்யும் சிருட்டியாவது, அசுத்த மாயையை முதற்காரணமாகக்கொண்டு அசுத்த தத்துவ புவன போகங்களை உண்டு பண்ணி, அப்புவன வாசிகளான உயிர் வருக்கங்களுக்குச் சூக்குமமான தத்துவ சரீரத்தையும், அவ்வுயிர்களின் கன்மத்தை யநுசரித்து அப்புவனத்திற்குரிய தூலமான சரீரத்தையும் மந்திர மந்திரேசுரருக்கு அதிகாரங் காரணமான சரீரத்தையும் உண்டு பண்ணுதலாம்.

திதியாவது, தனது சத்தியால் தோற்றுவிக்கப்பட்ட எல்லா உலகங்களையும் அதனதன் விஷயத்தில் நிலைக்கச் செய்தல்.

சங்காரமாவது, சுத்தமாயா காரியங்களைச் சுத்த மாயையிலும், அசுத்த மாயா காரியங்களை அசுத்த மாயையிலும் ஒடுக்குதல்.

திரோபவமாவது, உயிர்களின் பாச நீக்கங் காரணமாக அவ்வுயிர்களை அவரவர்க்குரிய போகங்களில் அழுந்தி அனுபவிக்கச் செய்தல்.

அனுக்கிரகமாவது, ஆன்மாக்களுக்குப் பாசத்தை நீக்கி மேலாகிய மோக்ஷத்தைக் கொடுத்தல்.

சுத்த மாயா புவனவாசிகளான வித்தியா வித்தியேசுவரர்களுக்கும் சிருட்டி முதலிய பஞ்ச கிருத்தியம் உண்டென்று ரௌரவாகமத்திற் சொல்லுகிறபடியால், சுத்தமாயையில் சிவனுக்கே பஞ்ச கிருத்தியம் உண்டென்றல் எவ்வாறு கூடும்? எனில், சிவப்பிரசாதத்தினுல் அவர்களுக்குப் பஞ்சகிருத்தியமே யன்றிச் சுதந்திரமாய் இல்லையாகலாற் கூடும் என்க. (ரு

(அ—கை). இவ்வாறு பதிப்பொருளின் பேதங்களைச் சொல்லிவிட்டுப் பசுப்பொருளின் பேதத்தைச் சொல்லுகிருர்.

8. பசுக்களாவார், விஞ்ஞான கேவலர், பிரளய கேவலர் என்றும், சகலர் என்றும் மூன்று வகையினராக அறியத் தகுந் தவராவர். அவருள், முதலாவதான விஞ்ஞான கேவலர் ஆண வமலம் மாத்திரமுடையவர். இரண்டாவதான பிரளய கேவ லர் ஆணவம் கன்மம் என்னும் இருமலமுடையவராக ஆகிறார்; என்பதாம்.

விஞ்ஞான கேவலர் என்பது :—விஞ்ஞானம், யோகம், சந் நியாசம் அநுபவம் ஆகிய இவற்றால் கன்மமல நாசமும், கன்ம மில்லாமையால் கன்மத்தின் பயனை அநுபவித்தற்குக் கருவியா யிருக்கிற கலை முதலிய மாயா காரியங்களின் நாசமும் உண்மை யால், கன்மமலம் மாயா மலமின்றி ஆணவமலம் மாத்திரம் உடையர் என்னும் பொருள் தோன்ற நின்றது.

பிரளய கேவலர் என்பது :—பிரளயத்திலே கலை முதலிய மாயா காரியங்களுக்கு நாசம் உண்டாகின்றமையால், மாயாமலம் இன்றி ஆணவமலம் கன்மமலம் என்னும் இரண்டும் உடையர் என்னும் பொருள் தோன்ற நின்றது. (8)

(அ—கை) இதுவுமது.

9. சகலரானவர் ஆணவமலம் கன்மமலம் மாயாமலம் மூன்றும் உடையவர். அம்மூவர்களுள், முதலாவதான விஞ் ஞான கேவலர் இரண்டுவிதமாகிறார். அவ்விருவருள், முதலா வதாயுள்ளவர் சத்தி தேய்ந்த மலத்தை உடையவர்; இரண்டா வதாயுள்ளவர் சத்தி தேயப்படாத மலத்தை உடையவர்; என் பதாம்.

சகலருக்கு மாயாமல சம்பந்தம் நேரே கிடையாதாயினும், மாயாமல காரியங்களான கலை முதலிய தத்துவங்களின் சம்பந் தம் இருக்கிறபடியால், அச்சம்பந்தத்தை அநுசரித்து மும்மலம் உடையரென்று சொல்லப்பட்டார். கலையாதிகளுடன் கூடியிருத் தலினாற்றான் அப்பொருள்தோன்ற, 'சகலர்' என்றபெயர் சம்ப வித்தது. ஆதலினாற்றான், விஞ்ஞானத்தால் சஞ்சித கர்மத்

தின் நாசம் ஏற்பட்டுப் பிராரத்த வாசனாவசத்தால், சரீரத்தை உடைய சகலர், ஆணவமலம் மாயாமலம் உடையர் எனினும் அவர்களையும் மும்மலமுடைய சகலர் என்று நூல்களிற் கூறப் படுகின்றது. இதுபற்றியே, சாங்கிய காரிகையிலும் "ஞானத்தி னால் தர்மாதர்ம ரூபமான கன்மம் நசித்து வாசனையின் வலிமை யால், சரீரத்துடன் கூடிச் சுழற்றிவிடப்பட்ட சக்கரம் சிறிது நேரம் சுற்றுமாறுபோல், போக்குவரத்துச் செய்கிறான்" எனக் கூறப்பட்டிருத்தல் காண்க.

சத்தி தேய்ந்த மலமுடையவராவார், பக்குவ மலமுடை யவர்.

சத்தி தேயாத மலமுடையவராவார், அபக்குவ மல முடையவர்.

மலத்திற்குப் பக்குவம் சம்பவிக்குமோ? எனின்; அது, திரவியமாயும் சடமாயும் இருத்தலால், கண்ணிலுள்ள படலத் திற்குப் பக்குவம் சம்பவிப்பதுபோல், சம்பவிக்குமென்க. (9)

(அ—கை.) இதுவுமது.

(10) பரமசிவன், பக்குவமலர் அபக்குவமலர்களுள், முத லாவதான பக்குவ மலர்களுக்கு அனுக்கிரகம் செய்து அவருள் அதிக மலபாகமுள்ள எண்மர்களை வித்தியேச பதத்தில் நிய மிக்கின்றார். ஏனையோரை மந்திரேசுவரர்களாகவும் செய்கின் றார். அந்த மந்திரேசுவரர்களும் எழுகோடிகளாகச் சொல்லப் படுகிறார்கள்; என்பதாம்.

பக்குவமலர்களுக்கு அனுக்கிரகம் செய்தலாவது, அவர்க ளுடைய மலபாகத்துக்கு ஒத்த அதிகாரத்தையும், சர்வஞ்ஞத் துவாதிகளையும், சுத்தமாயா காரிய சரீரத்தையும் கொடுத்தல். அவர்களுள் மிகுந்த மலபாகம் உடையவர்களை அனந்தர், சூக்கு மர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, சீகண்டர், சிகண்டி என்னும் பெயருடையவர்க ளாகவும்,

பஞ்சகிருத்தியத்திற் கதிகாரிகளாகவும் சுத்தாத்துவாவுக்குக் கர்த்தாக்களாகவும், ஈசுவர தத்துவவாசிகளாகவும் செய்கின்றார். ஏனையோரை ஏழுகோடி மகா மந்திரேசுவரர்களாகவும், வித்தியாதத்துவ வாசிகளாகவும் செய்கின்றார்.

ஏழுகோடி மகாமந்திரேசுவரர்களுள், பிற்பாதியாயுள்ளார், சகலரில் அனுக்கிரகம் செய்யத்தகுந்தவர்களுக்கு அனுக்கிரகிக்கும் வண்ணம் ஆசிரிய வடிவத்தை ஆதாரமாகக்கொண்டு, அனுக்கிரகம் செய்வதாகிய தன் அதிகாரத்தை நிறைவேற்றி மகாப்பிரளயத்தில் மோக்ஷத்தை அடைகின்றனர்.

ஏனைய முற்பாதியாயுள்ளார், நிராதாரமான சிவனுக்கு விஞ்ஞானகேவலர் விஷயத்திலும், மந்திரேசுவரர் மாயாகற்பாதிகாரி விஷயத்திலும் காரணமாயிருக்குந் தன்மையை அடைந்து, அதிகார வைராக்கியத்தால் சிருட்டிக்குப்பின் முத்தியை அடைகின்றனர். இவ்வாறே மிருகேந்திரத்தில் சொல்லப்பட்டிருத்தல் காண்க.

"எவர்கள் அதிகமான மல பாகத்துடன் அதிகாரத்தை விரும்பாமல் இருக்கிறார்களோ, அவர்களைப் பரபதரூபமான மோக்ஷத்திற் சேர்க்கின்றார். எவர்கள் அபக்குவ மலர்களோ, அவர்கள் மலபாகம் வரும்வரை விஞ்ஞானகலர்களாகவே இருக்கின்றார்கள்" என்று இரௌரவத்தில் சொல்லப்பட்டிருத்தலையும் காண்க. (10)

(அ—கை). இதுவுமது.

11. பிரளயாகலர்களுள் எவர்களுடைய மலகன்மங்கள் பக்குவமாயிருக்கின்றனவோ அவர்கள் (மோக்ஷத்தை) அடைகின்றனர்; அவரின் வேறான அபக்குவ மலர்கள் புரியட்டக தேகத்துடன் கூடினவர்களாய்க் கன்மவசத்தால் பலவிதமான யோநிகளிலே பிறப்பை அடைகிறார்கள்; என்பதாம்.

பிரளயாகலர்களுள் எவர்களுடைய மலம் பக்குவமாயிருக்கிறதோ அவர்களுக்கு அந்த மல பாகத்தாற் பலவிதமாயுள்ள கன்மமும் பக்குவமாயிருக்கின்றமையால் அவர்கள் மோக்ஷத்தை அடைகின்றார்கள். மோக்ஷத்தை என்பது, மூலத்திலில்லை. ஆயினும், சேர்த்துக் கொள்ளப்பட்டது.

மல பாகத்தால் மோக்ஷம் என்பதற்கு, மல பாகத்தால் சத்திநிபாதம்வந்து அதனால்மோக்ஷம்என்பதுபொருளாகக்கொள்க. இவ்வாறே மிருகேந்திரத்தில், "மலத்தினுடைய அதிகாரமாகிய நீசத்தன்மையும் *திரோதான சத்தியினுடைய அதிகாரமாகிய மறைப்பும் நீங்குதலால் அந்த மல சத்திகள் நீங்கும் சமயத்தில் அனைத்துயிர்க்கும் பந்துவானபரமசிவன் அந்த ஆன்மாவிற்கு எவற்றையும் அறியுந் தன்மையினையும் எவற்றையும் கர்த்தாவாயிருந்து செய்யுந் தன்மையினையும் தோன்றும்படி செய்கின்றார்; என்று கூறி இருத்தல் காண்க. இன்னும், சுவாயம்புவத்திலும் "அந்த மலமானது ஞானத்தினால் நாசமாகும் சமயத்தில் சத்தியானது மோக்ஷத்தின் பொருட்டுத் தோன்றுகிறது" எனக் கூறியிருத்தல் காண்க.

பிரளயாகலருள், ஏனைய அபக்குவ மலர்கள் புரியட்டக தேகத்துடன் கூடினவர்களாய்க் கன்மத்தின் வசப்பட்டு அக்கன்மத்தை அநுபவித்தற் பொருட்டுப் பலவிதமான புவனங்களுக்குரிய சரீர ரூபங்களான யோநிகளிலே பிறப்பை அடைகின்றார்கள்.

சில பாடபேதத்தால் அபக்குவ மலர்களாயுள்ள பிரளயாகலர்கள் புரியட்டக தேகத்தை உடையவர்களாய்ப் பிறவிகளை அடைகிறார்கள் என்று பொருள் கொள்ளக்கிடக்கும். அவ்வாறாயின், மிருகேந்திரம் முதலிய ஆகமங்களோடு முரணுதலும், பக்குவமலர்களுக்கும் புரியட்டகதேகம் இருக்கின்றமையால்,

*நீசத்தன்மையாவது; அறிவாயும், வியாபகமாயும் விளங்கும் ஆன்மாவை அறியாமையாயும், அணுவாயும் ஆக்குதல்.

சம்சார சம்பந்தத்தால் மோக்ஷமில்லாமையும் சித்திக்கும். ஆதலால், அந்தப் பாடம் பொருந்தாமை காண்க. (11)

(அ-கை) புரியட்டகம் இது எனக்கூறுகின்றார்.

(12) அந்தக்கரணமும், புத்திவியாபாரங்களும், இந்திரியங்களும் புரியட்டகமாக நிச்சயிக்கப்படுகிறது.

புரியட்டகத்துடன் கூடியவர்களுள், சிலர்களுக்கு மந்திர மகேசுவரரானவர் அநுக்கிரகம் செய்து அவர்களுக்குப் புவனங்களுக்குப் பதியாயிருக்குந் தன்மையைக் கொடுக்கின்றார் என்பதாம்.

புரியட்டக சரீரம் என்பது ஒவ்வொரு ஆன்மாக்கள் தோறும் கேவலத்தினின்றும் நீங்கி முத்தி அடையும் வரை இருக்கப்பட்ட பிருதிவிமுதல் கலைவரையுள்ள முப்பது தத்துவரூபமாயும், நிலைத்திருப்பதாயும் உள்ள சூக்கும தேகம். இவ்வாறே வேறு நூல்களிலும் "கலைமுதல் பிருதிவி வரையுள்ள தத்துவமய சூக்குமதேகம் புரியட்டகம்" எனக்கூறியிருத்தல் காண்க. தத்துவ சங்கிரகத்திலும் "பூமி முதல் கலைவரை ஒவ்வொரு புருஷர்களிடத்திலும் நிலைத்திருக்கும் தத்துவ சமூகமானது கன்ம வசத்தால் பலவிதமான புவனத்திற்குரிய சரீரங்களிலும் சுற்றுகிறது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

மனம் புத்தி அகங்காரங்களைத் தெரிவிக்கக்கூடிய அந்தக்கரணம் என்னும் சொல்லால், அவற்றின் வேறாய் ஆன்மாவினுடைய போகாநுபவத்திற்கு அந்தரங்க சாதனங்களான கலை, காலம், நியதி, வித்தை, அராகம், பிரகிருதி, குணம் என்னும் ஏழு தத்துவங்களும் கொள்ளப்படும்.

புத்தி காரியம் என்னும் சொல்லால் அதன் காரியங்களான பிருதிவி முதலான ஐந்து பூதங்களும், அவற்றின் காரணங்களான ஐந்து தன்மாத்திரைகளுங் கொள்ளப்படும்.

இந்திரியம் என்னும் சொல்லால் ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் கொள்ளப்படும்.

காலோத்தரத்தில் "சத்தம் முதலிய தன்மாத்திரைகள் ஐந்தும் மனம் புத்தி அகங்காரம் மூன்றும் புரியட்டகம்" என்று சொல்லப்படுகிறதே யெனில், அது உண்மையே. அந்த எட்டனுள் இந்த முப்பதும் அடங்கும் என்னும் கருத்துப் பற்றியே பகவானுகிய ராமகண்டர் அந்தச் சூத்திரத்திற்குக் கீழ்க்கண்டவாறு வியாக்கியானம் செய்திருக்கின்றார் அது வருமாறு:— "தன்மாத்திரை என்றதனுல் அதுவும், பஞ்ச பூதங்களும் ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும் ஆகிய நான்கு வகையும், மனே புத்தி அகங்காரம் என்றதனுல் அவ்வந்தக் கரணமும், அதற்குக் காரணமாகிய குணமும், அந்தக் குணத் திற்குக் காரணமாகிய பிரகிருதியும், அந்தப் பிரகிருதிக்குக் காரணமாகிய கலை முதலிய ஐந்தும் ஆகிய நான்கு வகையும் ஆக எட்டும் கொள்ளப்படும்" என்பதேயாம்.

அனுக்கிரகம் செய்தலாவது குஹ்யாதிகுஹ்யதர பவித்திர ஸ்தாணு முதலிய பதின்மூன்று புவன பதிகளுக்கும் அவரவர் களுடைய அதிகாரம் வரை ஞானக்கிரியாசத்திகளைக் கொடுத் தும் அணிமாதி யோக சத்திகளைக் கொடுத்தும் அதிக புண் ணியவான்களாகச் செய்தல் (12).

(அ-கை) பிரளயாகலருள் ஏனேயோரைப் பற்றிக் கூறு கின்றார்.

(13) பிரளயாகலருள் ஏனையோர் சிருட்டி ஆரம்பத்தில் கலாதிகளின் சேர்க்கையால் சகலர்களாக ஆகின்றனர். அவர் களுள், நூற்றுப் பதினெட்டுப் பேர்களைச் சிவன் தானுகவே மந்திரேசுவரர்களாகச் செய்கிறுர் என்பதாம்.

சிறிது பக்குவமடைந்த ஆன்மாக்கள், பக்குவத்தின் மந் தத்தினுல் மாயைக்குட்பட்ட அதிகாரத்திற்கு யோக்கியர்களா ய்ச் சிருட்டி ஆரம்பத்தில் அதிகாரத்திற்குக் காரணமான கலாதிகளின் சம்பந்தத்தால் சகலர்களாக ஆகிறுர்கள். இவர் கள் கலாசம்பந்த முடையவர்களாயிருந்தபோதிலும், மலத்தின் பக்குவத்தால், பிரளயாகலர்களோடு சேர்த்து எண்ணப்பட்டு ஏனையோரென்று சொல்லப்பட்டார்கள்.

அந்தப் பக்குவம் அடைந்தவர்கள் எத்துணைப் பேர்கள்? எவரால் அதிகாரத்தில் நியமிக்கப்பட்டார்? எனில், நூற்றுப் பதினெட்டு மந்திரேச்வரர்களாகச் சிவபெருமானால் நேரே நியமிக்கப்பட்டாரென்க. அனந்தேசுவரரால் நியமிக்கப்பட்டவரல்லர். ஆயினும், கலாதிகளின் சம்பந்தம் அனந்தேசுவரராலேயே செய்யப்பட்டது. எதனாலெனின், "அசுத்த மாயா காரியத்தில் அனந்தர் பிரபு" என்று வசனமிருத்தலாலென்க. (13)

(அ—கை) அந்த நூற்றுப் பதினெண்மர் பெறும் பெயர்களைப் பிரித்துக் கூறுகின்றார்.

(14) அந்த நூற்றுப் பதினெண்மருள் மண்டலிகள் என்பவர் எண்மர். க்ரோதாதிகளும் அவர்களைப்போல் எண்மர்களே. வீரபத்திரர், ஸ்ரீகண்டபரமேசுவரர், நூறு ருத்திரர்கள் ஆக நூற்றுப் பதினெண்மர் என்பதாம்.

மண்டலிகளாவார் கலையினுடைய மத்தகத்தில் வாசஞ்செய்யக்கூடிய கௌஹநேசர் முதலியோர். க்ரோதாதிகளாவார் குணதத்துவத்தின் மத்தகத்தில் வாசஞ்செய்பவர். வீரபத்திரராவார் நூறு ருத்திரர்களையும் நியமனம் செய்பவர். ஸ்ரீகண்டராவார் குணதத்துவத்தை இடமாகக்கொண்டு அதற்குக் கீழ்ப்பட்ட புவனங்கட்குக் கருத்தாவாயுள்ளவர். நூறு ருத்திரர்கள் பிரமாண்டங்களுக்கு ஆதாரமாயுள்ளவர். (14)

(அ—கை) சகலரைப்பற்றிக் கூறுகின்றார்.

(15) மலநாசத்திற்குக் காரணமான சத்திநிபாதத்தால் அதிகமான மலபாகத்தை அடைந்திருக்கும் சகலர்களை அந்தப் பரமசிவன் ஆசிரிய வடிவத்தை அதிட்டித்து நின்று சிவசாமிய ரூப மோக்ஷத்தில் சேர்த்துவைக்கின்றான் என்பதாம்.

மும்மலமுடைய சகலருள் மல பரிபாகம் மிகுதியுமுடைய சகலர்களைத் திரோதன சத்தியின் நீக்கமான அனுக்கிரக சத்தியினால் பாச நீக்கஞ்செய்து, குருவை அதிட்டித்துச் செய்யுங்

தீக்ஷையினால் சிவசாமிய ரூபமான மோக்ஷத்தில் சேர்க்கின்றார். மந்தமான மலபாகம் உடையவர்களை மந்ததர சத்திநிபாதத்தால் வித்தியேசுவராதி பதங்களிற் சேர்க்கின்றார். இவ்வாறே, "திதி காலத்தில் குருவை யதிட்டித்து எவர்களுக்குப் பரமசிவன் அனுக்கிரகம் செய்கின்றாரோ அவர்கள் உருத்திர மகேசுவராதி பதங்களை அடைகிறார்கள்" என நூல்களிற் சொல்லப்பட்டிருத்தல் காண்க.

சகலருக்குக் குருவை யதிட்டித்து நின்று அனுக்கிரகம் செய்கின்றார் என்றதனால், விஞ்ஞானகேவலர், பிரளயகேவலர்களுக்கு நிராதாரமாய் நின்று அனுக்கிரகம் செய்கின்றார் என்பது பெறப்படும். மலம் கண்ணினுடைய படல கோப்போல திரவியமாகையால் தீக்ஷாரூபமான ஈஸ்வர வியாபாரத்தினாலேயே அதற்கு நாசமன்றி, ஞானமாத்திரத்தினால் இல்லையென அறிந்துகொள்க. (15).

(அ—கை) இதுவுமது.

(16) மும்மலங்களால் கட்டுப்பட்டவர்களாயும், மேலே கூறப்பட்டவ ரல்லாதவர்களாயும், பக்குவமில்லாத மலத்தை யுடையவர்களாயுமுள்ள புருஷர்களை அவரவர்க்குரிய சன்மங்களை அநுசரித்துப் போகங்களை அநுபவித்தற் பொருட்டுப் பரமசிவன் ஏவுகிறார். இந்தப் பிரகாரம் டசுக்களின் பிரிவு சொல்லப்பட்டது என்பதாம். (16)

(அ—கை) இனிப் பாசங்களின் பிரிவைச் சொல்லுகின்றார்.

(17) புருஷனுக்குப் பாசங்களானவை நான்குவிதங்களாகும். அவற்றுள், முன் இரண்டு ஆணவமலம், கன்மமலம் என்னும் இவற்றின் காரியங்கள். ஏனைய மூன்றும் நான்கும் மாயாகாரியமும், திரோதான காரியம் ஆகிய சிவசத்தியின் காரியமும் என்னும் இவை என்பதாம்.

முன் பாசம் ஐந்து என்று சொல்லி, இவ்விடத்து நான்கு என்றது விரோதமாகாதோ? எனின், ஆகாது. எதனாலெனின், மகாமாயா ரூபமான சுத்த மாயைக்குப் பரமுத்தி

யை நோக்கப் பாசத்துவம் இருந்தபோதிலும், வித்தியா வித்தி யேசுவரர்களுடைய பதமாகிய அபரமுக்திக்கு சுத்த மாயா காரிய சரீரம் காரணமாய் இருக்கிறபடியால் அதற்குப் பாசத் துவம் கூடாது ஆகலின் என்க. ஆதலினாற்றான், புருடத் தன்மை என்னும் மலத்தை உடைய சகல வர்க்கத்துப் புருடர்க ளுக்கு நான்கு மலம் என்று இங்கே சொல்லப்பட்டது. ஆத லால், சுத்தாத்துவ வாசிகளான அனந்தாதிகளுக்குச் சுத்த மாயையும் திரோதான சத்தியுமாகிய இரண்டு பாசங்கள் தான் உள்ளன. அவையும் அசுத்த மாயைபோல் மோகத்தை உண்டு பண்ணுகிறதில்லை; ஞானத்தையே உண்டுபண்ணுகின் றன என்று கூறப்படுகிறது.

நாதம் என்று சொல்லப்படும் சுத்த மாயாகாரியம் எல்லா உயிர்களிடத்தும் இருக்கிறது என்று ஆகமங்கள் சொல்லுகிற படியால், சகலருக்கும் சுத்தமாயா காரிய சம்பந்தம் இருக் கிறதே எனில், அஃதுண்மையே. ஆயினும், வித்தியா வித் தியேசுவரர்களுக்குச் சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவ மூத லிய சுத்தமாயா காரிய சம்பந்தம் இருப்பதுபோல், சகலர்க ளுக்கு இல்லை என்று இவ்வாறு வேற்றுமை கூறப்பட்டிருத்தல் காண்க.

மல கன்மங்களையே அவற்றின் காரியங்கள் என்று சுலோ கத்திற் சொன்னது காரிய காரணங்களின் ஒற்றுமைபற்றி உப சாரமாய்ச் சொல்லியவாறும்.

ஏதனாலெனின், அடுத்த சூத்திரத்தில் மல கன்மங்க ளுக்கே இலக்கணஞ் சொல்லுகின்றமையால் என்க. ஆயினும், உபசாரமாகவாவது சொன்ன கருத்து என்னையெனில், மல கன்மங்களின் காரியங்களான மறைப்பும், போக நுகர்ச்சியு மாகிய இவை பயன் வடிவமாகையால், இவையும் பாசங்களே என்று கூறப்பட்டிருத்தல்பற்றி யென்க. இதுபோலவே, மாயா காரியத்திலும், திரோதானசத்தி காரியத்திலுங் கொள்க. ஆணவமலம், கன்மமலம் என்னும் இவை அநாதியே சித்தித்

துள்ளன. அவற்றுள், ஆணவமலம் புருடனுக்கு அநாதியாக வே ஞானக்கிரியைகளை மறைப்பது. கன்மமும் பிரவாகாநாதியாய் வித்தும் முளையும்போல் உள்ளது. எதனாலெனில், கன்மத்தினால் உண்டாகும் சரீரபரம்பரை அநாதியாதலால் என்க. மாயா காரியமான கலாதிகள் கன்மசங்காரணமாக உண்டாகிறபடியால் இடையே வந்து கூடினவையாகும். மாயாகாரியம் இல்லாத பிரளயாகலருக்கு மல கன்மம் மட்டும் இருக்கின்றபடியால், சகலருக்கு மாயாகாரியம் இடையே வந்து கூடினதென்றது பொருந்துமாறு காண்க. ஆணவமலத்தை அதிட்டித்து நின்று காரியப்படுத்துதல்பற்றித் திரோதான சத்திக்குப் பாசத்துவம் உபசாரமாய்க் கூறப்பட்டது. பின்னரும், இது விஷயமாய்க் கூறப்படும். (17)

(அ—கை) நான்கு பாசங்களுள் முதன்மையான ஆணவமலத்திற்கு இலக்கணங் கூறுகின்றார்.

(18) ஆணவ மலமானது ஒன்றாயும், அனேக சத்திகளை உடையதாயும், புருடனுடைய ஞானக்கிரியா சத்திகளை மறைப்பதாயும் உள்ளது. அது, நெல்லுக்கு உமிபோலவும், செம்பைப்பற்றி யிருக்கும் களிம்புபோலவும் அறியத்தகுந்தது என்பதாம்.

சடமாயும், நித்தியமாயும் இருத்தலால் ஆணவமலம் ஒன்றேயாம். அநேகம் என்று சொல்லின், சடமாயும் அநேகமாயும் உள்ள கடம் முதலியவைகளுக்கு அநித்தியத் தன்மை காணப்படுமாறுபோல, ஆணவமலத்திற்கு அநித்தியத்தன்மை சம்பவிக்கும்; ஆதலால், அது பொருந்தாது. அங்ஙனம் மலம் ஒன்றாயிருக்குமாயின், மல நிவர்த்தி யென்னும் முத்தி ஒருவனுக் குண்டாகும்பொழுது அனைவருக்கும் உண்டாக வேண்டுமேயெனில், மலம் ஒன்றாயிருந்தாலும் அநேக ஆன்மாக்களை மறைக்கக்கூடிய அநேக சத்திகளை யுடையதாகையால் எந்த மல சத்திக்குப் பரிபாகம் உண்டாகின்றதோ அந்த மல சத்தியால் மறைக்கப்பட்டிருந்த ஆன்மாவிற்கு மட்டும் முத்தியேயன்றி ஏனையோருக்கு இல்லை என்க.

அரிசியிலும் செம்பிலும், அநாதியே கூடியிருக்கிற உமி யும் களிம்பும் பாகத்தினாலும், ரசசக்தியினாலும் எப்படி நிவிர்த்தியடைகின்றனவோ, அதுபோல அநாதியே மறைத் துக்கொண்டிருக்கின்ற ஆணவ மலமானது, தீக்ஷையினால் நிவிர்த்திக்கப்படுகிறது. இங்கே கூறப்பட்ட இரண்டு திருட் டாந்தங்களுள், முதலாவது திருட்டாந்தத்தினால் உமி நெல் லின் உற்பத்திக்குக் காரணமாதல்போல, சரீர உற்பத்திக்கு மலம் காரணமென்பதும், இரண்டாவது திருட்டாந்தத்தினால் களிம்பின் நிவிர்த்திக்கு ரசம் காரணமாதல்போல, மல நிவிர்த் திக்குத் தீக்ஷை காரணமென்பதும் பொருளாகக் கொள்க. (18)

(அ—கை) கன்மமல மாயாமலங்களின் இலக்கணங் கூறு கின்றார்.

(19) தர்ம அதர்ம ரூபமாயும், வேறுபாடுடையதாயும் உள்ள கன்மமானது, அநாதி எனச் சொல்லப்பட்டிருக்கிறது. மாயையும் பொருள்வடிவாயுள்ளது. காலம் முதலான சாதா ரண உலகத்திற்கு முதற்காரணமாகும். அது நித்தியமா யுளளது என்பதாம்.

கர்மத்தினுடைய அநாதித் தன்மையானது பிரவாகநாதி* ரூபமாகும். கன்மத்திறகு வேறுபாடாவது, சாதன வேறு பாட்டாலென்க. சாதனமாவது, செய்கிறவன், செயப்படு பொருள், கருவி முதலாயின. இன்னும், கன்மம் அநேகம் என்பதற்கு அதன பலன்களாகிய போகங்கள் பலவாறுதலும் ஏதுவாகும்.

மாயையானது வேதாந்திகள் கூறுவதுபோல் அசத்திய மன்று. மற்றென்னையோ எனில், சத்தியமான பொருள் வடிவமாயுள்ளது. உலகம் என்பது காலம் முதலிய பொது

* பிரவாகநாதியாவது, இடையறாதோடும் நீர்ப்பெருக்குப்போலத் தொடர்ச்சியாய்த் தொன்றுதொட்டு வருதல்.

உலகமும், சூக்கும தேகம் முதலிய சிறப்பு உலகமும், தூல தேகமாகிய பொதுச்சிறப்பு உலகமும் என முத்திறப்படும். இவையனைத்துங் காரியரூபம். முதற்காரணம் இன்றிக் காரியப் பிரபஞ்சம் உண்டாகாதாகையால், மாயை முதற் காரணமாகும். அந்த மாயையானது பரமகாரணமாகையால் நித்தியமாயுள்ளது. அநித்தியம் என்று கொண்டால் அதற்குக் காரணம் வேண்டுமென்றாகி அதுவும் அநித்தியம் எனப்பட்டு வரம்பின்றியோடும். நித்தியமாதலால், ஒன்றாயிருக்கவேண்டும். இந்த நியாயத்தைச் சுத்த தத்துவ புவனங்களுக்கு முதற் காரணமான சுத்த மாயையினிடத்திலுங் கொள்க.

முன் பாசதநின் பெயரைச் சொன்ன சூத்திரத்தில் மாயா காரியம் பாசமாகச் சொல்லப்பட்டிருக்க, இவ்விடத்து மாயைக்கு இலக்கணம் சொல்வது எப்படிப் பொருந்தும்? எனில், மாயைக்கு இப்பாகப் பந்திக்குந் தன்மை இல்லாதபடியால், அதன் காரியம் அங்கே சொல்லப்பட்டது. காரணமின்றிக் காரியம் உண்டாகாதாகையால், இங்கே காரணத்திற்கு இலக்கணம் சொல்லப்பட்டது. காரியம் விரிவானமையால அதற்கு இலக்கணம் மேலே சொல்லப்படுகிறது. (19)

(அ—கை) இவ்வாறு மூன்று விதமான பாசங்களைச் சொல்லிவிட்டு நான்காவது பாசமாகிய திரோதான சத்திக்குப் பாசத்தன்மை உபசாரமென்று கூறிப் பாசவிஷயத்தைப்பூர்த்தி செய்கின்றார்.

(20) புருஷர்களை மறைக்கக்கூடிய சிவனுடைய திரோதான சத்தியானது பாசத்தைத் தொடர்ந்து நின்று காரியப்படுத்துகிறபடியால், பாசம் என்று சொல்லப்பட்டது.

இந்தப் பிரகாரம் பாசங்கள் நான்கு பிரிவுகளாகக் கூறப்பட்டன எனபதாம். (20)

(அ—கை) இவ்வாறு சகலர்களைப் பந்திக்கக்கூடிய மும்மலங்களையும், விஞ்ஞானகலர், பிரளயாகலர்களைப் பந்திக்கச்

கூடிய திரோதான சத்தியையும் சொல்லிவிட்டு சுத்தமாயை யைக் கடந்தவர்களுடைய சுத்த தத்துவ ரூபமான பாசத்தைச் சொல்லுகின்றார்

(21) சுத்தங்களான தத்துவங்கள் ஐந்து. அவற்றுள், சிவதத்துவத்தை முதற்காரணமாகச் சொல்லுகிறார்கள். சத்தி தத்துவம், சதாசிவ தத்துவம் ஆகிய இவற்றையும், ஈசுவர தத்துவம், வித்தியா தத்துவம் ஆகிய இவற்றையும், சிவ தத் துவமாகச் சொல்லுகிறார்கள் என்பதாம்

சுத்தமாகிய சிவதத்துவங்கள் நித்தியமா? அல்லது அநித் தியமா? நித்தியம் எனில், இவற்றிற்கு உற்பத்தி கூடாது. அநித்தியம் எனில், இவற்றின் உற்பத்திக்கு முதற்காரணம் எது? என்று ஆசங்கை நிகழும். நிகழவே, அவ்வைந்து தத் துவங்களுள், சிவதத்துவமானது முதற்காரணம் ஆகுமென்று சொல்லுகின்றார். இந்தச் சிவதத்துவம் முதற்காரண மாத லால், மாயைபோல் நித்தியமாயுள்ளது. இது காரணமாகவே ஏனைய சத்தி தத்துவம், சதாசிவ தத்துவம், ஈசுவரதத்துவம், வித்தியா தத்துவம் ஆகிய நான்கும் இதன் காரியங்களாம்.

மாயைக்குமேல் மகாமாயை ஒன்று உண்டென்று நூல்க ளிற் கூறப்பட்டிருக்கின்றது இவ்விடத்தில் கவனிக்கத் தக்கது என்னையெனில், *வித்தை முதலிய தத்துவங்கள் வெவ் வேறான உலக அமைப்புக்களுடன் கூடியிருப்பதாகப் பிரமாண நூல்களிற் சொல்லுகிறபடியால், அவை அவசியம் காரியங்க ளாக இருப்பதனாலும், அத்தத்துவங்களில் வசிக்கக்கூடியவர்க ளுக்குச் சரீரசம்பந்தம் இருப்பதனாலும், அவற்றிற்குக் காரண மாய் மகாமாயை ஒன்றுண்டென்று சுத்தமாயை சித்தித்தது என்பதாம். இவ்வாறே, வித்தியா வித்தியேசுவரர்களின் சரீ ரங்களுக்கு முதற்காரணம் மகாமாயை என்று சொல்லப்பட் டிருத்தலுங் காண்க. இன்னும், நாதம் முதலியவற்றை வழி

* ஈண்டுக்கூறிய வித்தை, சுத்தவித்தை எனப்படும். அசுத்த மாயையின் காரியமான வித்தை வேறு; இது வேறு.

யாகக்கொண்டு மந்திர தந்திரங்களின் காரணத்துவமும் இந்த மகாமாயைக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. எவ்வாறெனில், சத்தியிலிருந்து நாதமும், அதிலிருந்து விந்துவும், அதிலிருந்து *மாதிருகாக்கரங்களும் தோன்றுமாறுபற்றி யென்க. இவ்வாறு, விந்து ரூபமான சிவதத்துவத்தைச் சொல்லிவிட்டு அதன் காரியங்களை சத்திதத்துவம், சதாசிவ தத்துவம் எனத் தொடங்கிப் பிற்பாதியாற் சொன்னார். (21)

(அ—கை) இவ்வாறு சுத்த தத்துவங்களை எண்ணிக்கையினாலும் பெயரினாலும் சொல்லிவிட்டு, இனி அசுத்த தத்துவங்களையும் அவ்வாறே சொல்லுகின்றார்.

(22) பந்தத்தையுடைய ஆன்மாக்களுக்கு அறியாமையுடைமையா யிருக்குந் தன்மை, கர்த்தாவா யிருக்குந் தன்மை ஆகிய இவை சித்திப்பதற்காக மாயையிலிருந்து நேராகவும், ஒன்றன்பின் ஒன்றாகவும், காலமும், நியதியும், அவ்வாறே கலையும், வித்தையும், அராகமும் ஆகிய ஐந்து தத்துவங்கள் தோன்றுகின்றன என்பதாம்.

இந்த ஐந்துவிதமான தத்துவங்களென்னும் சட்டையைத் தரித்த ஆன்மாவே, போகத்தை யநுபவித்தற்குரியதாகும்; ஆதலால், புருடத்தன்மை யென்னும் மலத்தின் சம்பந்தத்துடன் புருடதத்துவம் என்னும் பெயரை அவ்வான்மா அடைகிறது. இவ்வாறே பின்னர்ச் சொல்லுகின்றார். (22)

(அ—கை) இதுவுமது.

(23) மாயையிலிருந்து பிரகிருதியும், குணத்துவமும், பின்னர் புத்தி, அகங்காரம் என்னும் இவையும், சித்தமும், கண் காது மூக்கு நாக்கு துவக்கு என்னும் ஞானேந்திரியங்களும், வாக்கு கை கால் ஆசனம் குறி என்னும் கன்மேந்திரியங்களும், சத்தம் பரிசம் ரூபம் இரசம் கந்தம் என்னும் தன்மாத்திரைகளும், இவற்றை யநுசரித்து ஐந்து பூதங்களும், ஆக இருபத்தைந்து தத்துவங்களும் தோன்றுகின்றன என்பதாம்.

* மாதிருகாக்கரம்:—அச்சு அல் என்னுமிருவகை யக்கரம்.

ஆசிரியர் இவற்றிற்கு இலக்கணம் பின்னர்க் கூறும் பொழுது, இவை மாயையிலிருந்து ஒன்றன்பின் ஒன்றாய் உண்டானவை என்று கூறுகின்றார். (23)

(அ—கை) இறுவுமது.

(24) புருஷனுடைய போகத்திற்காக இருபத்து மூன்று தத்துவங்கள் பிரகிருதியிலிருந்து தோன்றும். எந்தக் காரணத்தால் பிரகிருதிக்கும் குணதத்துவத்திற்கும் உண்மையில் அதிகமான பேதம் இல்லையோ (அதனால், இருபத்து மூன்று எனப்பட்டன) என்பதாம்.

இத்தத்துவங்கள் அனைத்திற்கும் எந்த எந்த இடத்தில் உபயோகம் என்றும், பிரகிருதியிலிருந்து நேரே உண்டானவை எவை? தொடர்ச்சியாய் ஒன்றன்பின் ஒன்றாக உண்டானவை எவை? என்றும் இவையனைத்தும் பின்னர்க் காட்டுகிறோம்.

மாயையிலிருந்து பிரகிருதி தோன்றுகின்றது என்னும் பொருளுடைய மூன் சுலோக வாக்கியத்தால் மாயையிலிருந்து பிரகிருதிக்குக் கீழ் இருபத்து நான்கு தத்துவங்கள் தோற்றுகின்றன என்று கிடைக்கிறபடியால், இருபத்து மூன்று தத்துவங்கள் என்று சொன்னது எவ்வாறு பொருந்தும்? எனில், பிரகிருதிக்கும், குணதத்துவத்திற்கும் குணங்கள் அடங்கியிருத்தலும், வெளிப்பட்டுத் தோன்றலுமாகிய பேதமேயன்றி வேறு பேதம் இன்மையால் பொருந்துமென்க. சாங்கியனால் குணங்களே பிரகிருதி என்று கொள்ளப்பட்டிருக்கின்றதே எனில், அது பொருந்தாது. எதனாலெனின், சடமாயும், அநேகமாயும் இருக்கும் கடம் முதலியவற்றிற்கு ஏகமாயிருக்குங் காரணத்தைக் காண்கின்றமையால், அதுபோல சடமாயும் அநேகமாயும் இருக்கும் குணங்களுக்குப் பிரகிருதியே காரணமாகும் ஆதலாலென்க. ஆதலால், காரிய காரணங்களின் அபேதத்தைக் கருதிக் குணத்தைப் பிரகிருதியில் அடக்கி இருபத்து மூன்றெனக் கூறியவாறும். (24)

(அ—கை) இனி, இதுவரை கூறப்பட்ட தத்துவங்களுள், முதலாவதாகக் கூறப்பட்ட சிவதத்துவத்திற்கு இலக்கணங் கூறுகின்றார்.

(25) விந்து ரூபமான சிவதத்துவத்தை வியாபகமாகவும், ஒன்றாகவும், நித்தியமாகவும், எல்லாத் தத்துவ வருக்கங்களுக்கும் காரணமாகவும், ஞானக்கிரியா சுபாவமாகவும் ஆசிரியர் சொல்லுகின்றனர் என்பதாம்.

சுத்த அத்துவாக்களுக்கு முதற்காரணமாக யாதொரு விந்து என்னும் சிவதத்துவம் முன் சாதிக்கப்பட்டதோ, அந்தச் சிவதத்துவம் வியாபகம். அஃதாவது, சுத்தம் அசுத்தமான ஜகத்துக்கு வியாபக மென்றபடியாம். எவ்வாறெனில், தன்னுடைய பரிணும ரூபங்களான நிவிர்த்தி முதலிய கலைகளினுல் உலகத்தை வியாபிப்பது என்பதாம். இக்கருத்துப்பற்றியே, கலைகளை நிலையாகக்கொண்டு தத்துவங்கள் இருக்கின்றன. தத்துவங்களில் புவன சமூகங்கள் இருக்கின்றன என்று பெரியோர்கள் கூறுகின்றனர். அந்தச் சிவதத்துவம் மேலான காரணமாய் இருப்பதனுல், ஒன்றேயாம். பல எனில், பலவாயும், சடமாயும் இருக்கும் கடம் முதலியனபோலக் காரியமாதல் கூடும். ஒன்றுதலால், நித்தியமாய் உள்ளதாகும். அநித்தியம் எனில், மேலான காரணம் ஆகாமையுடன் வேறு முதற்காரணத்தை விரும்பும்; விரும்பவே, அதற்கு வேறொரு காரணம் வேண்டப்பட்டு வரம்பின்றியோடுதல் என்னும் குற்றமாகும் என்க. இந்தச் சிவதத்துவம் எல்லாச் சுத்த தத்துவங்கட்கு முதற்காரணமேயன்றி, அசுத்த தத்துவங்கட்கு முதற்காரணமாதலில்லை. எதனுலெனின்? அசுத்தமாயையிலிருந்து அசுத்த தத்துவங்கள் உண்டாகின்றன வாதலால், அவ்வசுத்த தத்துவங்களுக்குச் சுத்தமான சிவதத்துவம் காரணமாதல் செல்லாமையால் என்க.

ஆன்மாக்களுக்குத் தன்னிடமிருக்கும் ஞானக்கிரியைகளை விளக்குகிறபடியால், இச்சிவதத்துவம் ஞானக்கிரியா சுபாவ-

மொளப்பட்டது. அஃதாவது, அந்த அந்தப் புவனபதிகளின் ஆராதனத்தினாலாவது, தீக்ஷையினாலாவது தன்னுடைய காரியங்களான சுத்தாத்துவ புவனங்களை படைந்த ஆன்மாக்களுக்கு ஞானக்கிரியைகளை விளங்கும்படி செய்தல் எனபதாம். இவ்வாறே, மதங்கத்திலும், ஜீவத்தன்மையுடைய ஆன்மாக்கள் யாதொரு சிவதத்துவத்தால் விளங்கப்பட்ட ஞானக்கிரியா சாமர்த்தியம் உடையவர்களாய் ஆகின்றார்களோ, அந்தச் சிவதத்துவமானது சாங்கியதிதமாய், நாசமில்லாததாய் இருக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலாற்றான், இந்தச் சிவதத்துவத்தை மோகத்தைச்செய்விக்கிறது என்றுசொல்லாமல் ஞானத்தைப் பிரகாசிப்பிக்கிறது என்று சொல்லுகிறோம்.

அசுத்த மாயையும் கலை முதலிய தத்துவங்களின் வழியாய் ஆன்மாக்களின் ஞானக்கிரியைகளைப் பிரகாசம் செய்வதாகவும், சுத்த மாயை மாத்திரம் ஆன்மாக்களின் ஞானக்கிரியைகளைப் பிரகாசிப்பிக்கிறது என்றல் எவ்வாறு பொருந்தும்? எனின், அஃதுண்மையே. ஆயினும், அசுத்த மாயையினால் உண்டாகும் ஞானம் * ஏகதேச ஞானமே ஆகலானும், ஆன்மாவல்லாத பொருள்களில் ஆன்ம பாவனையை உண்டுபண்ணுவதனாலும், அந்த அசுத்தமாயை மோகத்தையே உண்டுபண்ணுகிறது. இந்த மகா மாயையினாலுண்டாகும் ஞானமோ எனின், எல்லாப்பொருள்களையும் ஒருசேர அறியும் வியாபக ஞானமாதலாலும், சிவன் முதலிய சுத்தப் பொருள்களை, நூல்களால் சித்திக்கப்பட்ட ஞானத்தின் வழியால் அறியச் செய்வதனாலும், சுத்தமான ஞானத்தையே உண்டுபண்ணுகின்றது. ஆதலால், உன்னுடைய ஆசங்கை பொருந்தாதென்க. ஞானக்கிரியா சொரூபம் என்பதற்கு, இதுகாறுங் கூறிய பொருளேயன்றி சுவம் என்பதற்கு வடமொழியில் தனம் என்று பொருள்

* ஏகதேசஞானமாவது, ஒன்றினை யறியுங்கால் பிறிதொன்றினை யறியாமை.

கிடைக்கும் ஆதலால், ஞானக்கிரியா ரூபமான தன்னுடைய தனத்தை ஆன்மாக்களுக்கு விளங்கும்படி செய்கிறதென்பதும் பொருளாகக் கொள்க.

இன்னும் ஞானக்கிரியை அசுபாவ என்று பிரித்து, ஞானக் கிரியைகள் இதற்குச் சுப்ரவமாக இல்லை எனப் பொருள் கொண்டு இந்தச் சிவதத்துவத்தைச் சடம் என்றும், ஞான ரூபம் இல்லை என்றும் பொருள் கூறலாம். சிவத்த்துவம் ஞான ரூபமாயின் இது முதற்காரணமாதல் கூடாது. கடம் முதலிய காரியங்களுக்கு முதற்காரணமான மண் சடப்பொருளாதல் காண்கின்றமையால், ஞானரூபம் முதற்காரண மென்றல் கூடா தென்க. இவ்வாறே பராக்கியம் என்னும் நூலில், "சட ரூப மான காரியங்களுககு ஈஸ்வரன் நிமித்தகாரணன்; விந்து முதற்காரணம்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. வேறு நூல் களிலும் "அந்தப் பரமசிவனுடைய குண்டலினி என்னும் சத்தி யானது சடரூபம்" என்றுசொல்லப்பட்டிருக்கின்றது. முதற் காரணமான மகாமாயையை ஆசிரியர்கள் இவ்வாறு கருதுகின் றனர். இந்தச் சுலோகத்திற்குப் பரமசிவனையாவது, சிவ னுடைய சமவேத சத்தியையாவது விஷயமாகக் கொள்வோம் எனில், சிவம் முதல் பிருதிவி ஈறுன தத்துவங்களுக்கு இலக்க ணம் சொல்லும் இவ்விடத்தில் தத்துவங்களைக் கடந்து நிற்கும் பரமசிவன், சிவ சமவேத சத்தி ஆகிய இவர்களைப்பற்றிப் பேசுதற் கிடமின்மையால், அவ்வாறு கொள்ளுதல் கூடா தென்க. அந்தப் பரமசிவன், சிவ சமவேத சத்தி ஆகிய இவர்களையே சிவ தத்துவமாகக்கொண்டு, சுத்தாத்துவாவுக்கு இவர்களையே முதற் காரணமாகக் கொள்ளலாமோ எனில், அங்ஙனங் கொள்ளின், இவர்களுக்குப் பரிணமம் உண்டு எனப்பட்டு, அந்தப்பரிணமத்தால் சடத்தன்மை முதலிய குற் றங்கள் உண்டு எனப்படும் என்க.

சத்தினுடைய பரிணமமாகக் கொள்ளாமல், விவர்த்தன மாகக் கொள்வோம் எனில், அது பொருந்தாது. எதனுலெனின்

விவர்த்தனமாகிய காரியம் அசத்தியமாகும்; ஆதலின் எல்லாப் பிரமாணங்களினாலும் சத்தியமெனச் சித்தித்த உலகம் அசத்தியமாய்விடும் ஆகலாலென்க. இன்னும், சிவதத்துவம் என்று பெயருடைய விந்து ரூபமான குண்டலினி சத்தியைச் சித்தினுடைய சமவேதமென்று கூறாமல் பரிக்கிரகசத்தியாய்க் கூறப்பட்டிருப்பதனாலும், சிவதத்துவம் என்பதற்குச் சிவனை யாவது, சத்தியையாவது பொருளாகக் கொள்ளக்கூடாதென்று கீழே கம்மாற் செய்யப்பட்ட விருத்தியே சரியானதாகும். இன்னும், பரமசிவன் சித்தரூபன் ஆகையால் எப்படி உலகத்திற்கு முதற்காரணம் ஆதலில்லையோ, அப்படியே சிற்சத்தியும் முதற்காரணம் ஆதலில்லை; பரிணாமம் சடத்திற்குக் கூறப்பட்டதேயன்றிச் சேதனனுக்குக் கூறப்படவில்லை; சித்தினுடைய * விவர்த்தனமாகக் கொண்டால், காரியமான ஜகத்துக்குச் சூனியத்தன்மை சித்திக்கும். எல்லாப் பிரமாணங்களினாலும் சத்தியமெனச் சித்தித்த உலகம் எப்படி அசத்தியமான சூனியமாகும்? இனி, சுத்தாத்துவாவுக்குச் சிவனும சிற்சத்தியும் முதற்காரணமாதல் செல்லாதவாறுபோலவே, அசுத்தமாயையும் முதற்காரணமாதல் செல்லாது. எதனாலெனின், அவ்வசுத்த மாயை தன் காரியத்திற்கு மோகத்தை உண்டு பண்ணுமேயன்றி, ஞானத்தை யுண்டுபண்ணாது ஆதலாலென்க. அந்தக் குண்டலினி யென்னும் சுத்தமான சடரூப சிவசத்தியானது பரமசிவனுடன் தாதான்மியமாயிராது; பரிக்கிரக சத்தியாய் இருக்கின்றது. ஆதலால், குயவனான கர்த்தாவினிடத்துக் கடத்திற்கு முதற்காரணமாய் மண் இருப்பதுபோல, பரமசிவனான கர்த்தாவினிடத்து உலகமாகிய காரியத்திற்கு முதற்காரணமாய் விந்து என்னும் குண்டலினி சத்தி இருக்கின்றது என்று பௌட்கரம் முதலிய கிரந்தங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றது.

---

* விவர்த்தனம் என்பது கயிற்றினிடத்து மயக்கங் காரணமாக அரவு தோன்றல். அந்த அரவு உண்மையில் இன்மையால் சூனியத்தன்மை சித்திக்கும் எனப்பட்டது.

சத்தமே பிரமம் என்று சொல்லக்கூடிய வையாகரண மதத்தில் ஆன்மா நாதம் முதலிய முறையில் அநேகமாய் இருக்க்கும் என்றல் பொருந்தாது. எவ்வாறெனில், ஆன்மாவும், ஆன்மசத்தியும் விகாரமற்றவை யானபடியால், அநேகமாய்ப் பரிணமித்துப் பிரிந்திருத்தற்கு உரியன வல்ல ஆதலாலென்க. இவ்வாறு நாதகாரிகையிற் சொல்லப்பட் டிருக்கின்றது.

ஆதலால், சப்தத்தைத்தோற்றுவிப்பதனாலும், மகாமாயை முதற்காரணமாகச் சிந்தித்தது. இவ்விஷயம் மிருகேந்திர விருத்தி தீபிகையில் விரிவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றமையால், ஆண்டுக்காண்க. (25)

(அ—கை) இதனையே வற்புறுத்துகின்றார்.

(26) பலவிதமான இச்சை முதலிய சிவசத்திகள், முதற்காரணமான இந்த விந்துவினிடத்தில் அதிட்டித்து நின்று தன்னுடைய காரியத்தைச் செய்கின்றன ; ஆதலால், அவ்விதமான இந்தச் சிவதத்துவத்தை எல்லாப் பொருள்களுக்கும் அநுக்கிரகம் செய்கிறதாகச் சொல்லுகிறார்கள் என்பதாம்.

இச்சை முதலிய சிவசத்திகள், முதற்காரணமான இந்த விந்துவை யதிட்டித்துத்தான் அநுக்கிரகம் செய்தற்குரியவற்றிற்கு அநுக்கிரகத்தைச் செய்தும், அவ்வநுக்கிரகத்திற்கு அங்கமான சிருட்டி முதலிய காரியங்களையும் செய்கின்றன. ஆதலால், இந்த மகாமாயையும் சிவசத்தி வழியாய் அனைத்திற்கும் அநுக்கிரகம் செய்கிறதாகப் பெரியோர்கள் சொல்லுகின்றனர். அசேதனமானது சேதனத்தால் அதிட்டிக்கப்பட்டாலன்றிக் காரியத்தைத் தோற்றுவிக்காது ; ஆதலால், விந்துவானது சத்தியால் அதிட்டிக்கப்பட்டுக் காரியங்களைத் தோற்றுவிக்கின்றது என்க. (26)

(அ—கை.) இவ்வாறு சிவதத்துவத்தைச் சாதித்து அதன் காரியமான சத்தி தத்துவத்தைச் சொல்லுகின்றார்.

(27) சிருட்டிக்க வேண்டுமென்னும் இச்சையுடைய பரமசிவனுக்கு, சித்தான ஆன்மாக்களுக்கும், சடமான பாசங்களுக்கும் அநுக்கிரகம் செய்தற்குக் காரணமான இந்த மகாமாயையினுடைய முதலாவதான யாதொரு பரிணாமமுண்டோ அது சத்தி தத்துவமாகச் சொல்லப்படும். இந்த மகா மாயையே நிரவயவமாயுள்ளது என்பதாம்.

பரமசிவன் சித்துக்களுக்கு அநுக்கிரகஞ் செய்தலாவது, ஆன்மாக்களுக்கு அநுக்கிரகமான மோக்ஷத்தைச் செய்ய இச்சையுள்ளவராய், அந்த ஆன்மாக்களுக்கு மல பாகத்தின் பொருட்டும், கன்மாநுபவத்தின் பொருட்டும், சிருட்டி முதலியவற்றைச் செய்தல். சடங்களான பாசங்களுக்கு அநுக்கிரகஞ் செய்தலாவது, தத்தம் வியாபாரத்தில் சாமர்த்தியம் உண்டுபண்ணுதல். இவ்விடத்தில் பாசங்களுக்கு அநுக்கிரகம் சாதிப்பதில முதற்காரணமாயுள்ளது விந்து வாதலால் அது சாதனமென்று சொல்லப்பட்டது. ஆதலால், நிச்சயமாகக் கிடைத்த பொருள் என்னையெனில், சித்து, சடம் என்னும் இவற்றிற்கு அநுக்கிரகம் செய்தற்குச் சாதனமான, சிருட்டிக்க இச்சையுடைய பரமசிவனது விந்துவினுடைய சாந்தியாதி புவனரூபமாயும், நாதரூபமாயுள்ள முதலாவதான பரிணாமமே சத்தி தத்துவம் என்று சொல்லப்படுகிறது என்பதாம். இந்தச் சத்தி தத்துவமானது, விந்து முதலியனபோல் அவயவம் இல்லாததா? அல்லது, அவயவம் உடையதா? எனில், எவற்றால் பதார்த்தங்கள் ஒன்றுக்கொன்று பிரிக்கப்படுகின்றனவோ, அவை அவயவங்கள். அந்த அவயவங்கள் அற்றது நிரவயவம். பரிக்கிரக சத்தி ரூபமாயுள்ள விந்துவே பரம காரணமாதலின், அதுவே நிரவயவமாகும். சத்தி முதலிய காரியரூபமான தத்துவங்களோவெனில், நேராகவே புவனங்களுக்கு ஆதாரமாய் இருத்தலினால் அவயவங்களை யுடையனவேயாம். ஆயின், சிவதத்துவத்திலும் புவனங்கள் உண்டென்று சொல்லப்படுகின்றமையால் அஃதெங்ஙனம் நிரவயவமாகும்? எனின், அஃது உண்மையே ஆயினும், சிவதத்துவத்தில் புவனங்கள் நேராக இருக்கவில்லை.

அசுத்த மாயா புவனங்கள் கலாதத்துவத்தின் சிரசில் இருப்பது போல, சிவதத்துவத்திற் சொல்லப்படும் புவனங்கள் சாந்திகலையின் சிரசிற்றான் இருக்கின்றன. ஆதலால், முரணின்மையறிக. (27)

(அ-கை.) இனி சதாசிவதத்துவத்தைச் சொல்லுகின்றார்

(28) ஞானசத்தி, கிரியா சத்திகளாகிய இவை குறையாமலும், ஏறாமலும் நிகழும் யாதொரு பரிணாமமுண்டோ, அதனை வித்துவான்கள் சதாசிவம் என்னும் பெயரையுடைய தத்துவமாகச் சொல்லுகின்றனர் என்பதாம்.

சிருட்டிக்க இச்சையுடைய முன் சொல்லப்பட்ட பரமசிவனது ஞானக்கிரியா சத்திகள் சமமாய் அதிட்டிக்க முதற்காரணமாய்க் கூறப்பட்ட விந்துவினுடைய இரண்டாவது பரிணாமம் சத்தி தத்துவத்திற்குப் பின் உண்டாகின்றது. அந்த இரண்டாவது பரிணாமத்தையே சதாசிவ தத்துவமாக வித்துவான்கள் சொல்லுகின்றனர். (28)

(அ-கை.) இனி, ஈசுவர தத்துவத்தைச் சொல்லுகின்றார்.

(29) எதனிடத்தில் ஞானசத்தியானது குறைவை யடைகிறதோ, கிரியா சத்தியானது அதிகத் தன்மையை யடைகிறதோ, அது ஈசுவர தத்துவமாகச் சொல்லப்படுகிறது. எப்பொழுதும் எல்லாப் பொருள்களுக்கும் கர்த்தாவாகவும் சொல்லப்படுகிறது என்பதாம்.

எதனிடத்தில் உலகத்திற்குக் கர்த்தாக்களான அனந்தர் முதலானவர்களை யதிட்டித்துக் கிரியா சத்திக்கு அதிக வியாபாரம் உண்டாகின்றதோ, அந்தக் கிரியா சத்தியின் பரிணாமத்தைச் சதாசிவதத்துவத்திற்குக் கீழுள்ள ஈஸ்வர தத்துவமாகச் சொல்லுகின்றனர். அந்த ஈஸ்வர தத்துவத்திற்கு எல்லா வஸ்துக்களுக்குங் கர்த்தாவாயிருக்குந் தன்மையானது, கிரியாசத்தி

யதிட்டித்தலினாலும், எல்லாப் பொருள்களுக்குங் கர்த்தாக்களான அனந்தேசுவரர் முதலானவர்களுக்கும் இந்த ஈஸ்வர தத்துவத்திலேயே அடக்கம் என்று மேலே சொல்லப்போகிறபடியாலும் உண்டாகின்றது. (29)

(அ—கை.) இனி, வித்தியா தத்துவத்தைக் கூறுகின்றார்.

(30) எதன் இடத்தில் கிரியா சத்தியானது குறைவை யடைகிறதோ, ஞானரூபமான சத்தியானது அதிகத்தை யடைகிறதோ அதை வித்தியா தத்துவமாகச் சொல்லுகின்றனர். ஞானரூபம் ஆதலால், பிரகாசத்தைச் செய்கிறதாகவும் சொல்லுகின்றனர் என்பதாம்.

யாதொரு ஈஸ்வர தத்துவத்திற்குக் கீழ்ப்பட்ட விந்து பரிணாம ரூபமான தத்துவத்தில், சப்தகோடி மகா மந்திரர்களை அதிட்டித்து ஞானசத்திக்கு அதிகமான தன்மை உண்டாகிறதோ, அந்தத் தத்துவத்தில் வசிப்பவர்களுக்கு அனைத்தையும் அறியுந்தன்மையை அது உண்டு பண்ணுகிறபடியால், அந்த வித்தியா தத்துவம் பிரகாச மெனப்படும். (30)

(அ—கை.) இவ்வாறு சுத்த தத்துவங்களைச் சொல்லி விட்டு, அவற்றுள், வேறு பொருள்களும் அடங்கி யிருக்கின்றன என்று கூறுகின்றார்.

(31) சகல ரூபமான விந்துவும், நாதமும் சதாசிவ தத்துவத்தைச் சேர்ந்திருப்பனவாகச் சொல்லப்படுகின்றன. வித்தியேசுவரர்களோ எனில், ஈஸ்வர தத்துவத்திலும், சத்தகோடி மகா மந்திரேசுவரர்களும் காமிகம் முதலிய ஆகமங்களும் வித்தை என்னுந் தததுவத்திலும் அடங்குகின்றன என்பதாம்.

பரவிந்துவானது சிவதத்துவ ரூபமானபடியால், அதன் காரியமான சூக்கும நாதத்திற்குச் சத்தி தத்துவத்தில் அடக்கம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால், இவ்விடத்தில் சகலவிந்து என்பது அக்ஷர ரூபமான விந்து என்றும், நாதம் என்பது தூல

நாதம் என்றுங் கொள்க. இவ்விரண்டும், சதாசிவ தத்துவத்தில் அடங்குகின்றன. வித்தியேசுவரரான அனந்தேசுவரர் முதலி யோர், ஈஸ்வர தத்துவத்தில் அடங்குகின்றனர். சத்தகோடி மந்திரேசுவரர்களும், வியோம வியாபி முதலிய * வாசிகமான மந்திர சப்தங்களும், காமிகம் முதலிய இருபத்தெட்டு ஆகம மாகிய ஞான சாதனங்களும் வித்தியா தத்துவத்தில் அடங்கு கின்றன. (31)

(32) இந்த ஐந்து தத்துவங்களுக்குங் காலமில்லாமை யால், (அதுபற்றி) முற்பிற்பாடு இல்லை. வியாபார வசத்தால் அல்லவோ முற்பிற்பாடு நூல்களில் விதிக்கப்பட்டிருக்கின்றன என்பதாம்.

இந்தச் சுலோகம் சில புத்தகங்களிற் காணப்படுகின்றது; அவ்வாறு கூறுதல் பொருந்தாது, எதனாலெனின், சுத்தாசுத்த அத்துவாக்களிலும் தோன்றுமுறை, ஒடுங்குமுறை என்னும் இவற்றை அறிவிக்கின்றனவாயும், அந்த அந்தப் புவனவாசிக ளுக்கு இடபேதத்தை அறிவிக்கின்றனவாயும், சுத்தாத்துவா வினையும் சுத்தகாலம் இருப்பதாக அறிவிக்கின்றனவாயுமுள்ள வாக்கியங்களுடன் முரணும் ஆதலாலென்க. இந்தச் சுலோ கம் இந்த நூல்களை அறியாதவர்களால் சேர்க்கப்பட்டதாதலின் நாம் இதற்கு வியாக்கியானம் செய்யவில்லை.o (32)

---

* வாசிகம் என்பது வாயினாற் சொல்லப்படுவது.

o சுத்தாத்துவாவில் உள்ள சுத்தகாலம் இந்த ஐந்து தத்துவங்கள் தோன்றிய பின்னர்த் தோன்றுதலால், அந்தக்காலம் உண்டென்றது கொண்டு இத்தத்துவங்களுக்கு முற்பிற்பாடு கூடுமென்றல் பொருந்தாது. மற்றென்னையோவெனில், காலம் தோன்றுவதற்கு முன்னரே தோன் றுகின்ற இந்த ஐந்து தத்துவத்தின் முற்பிற்பாட்டிற்குக் கலையித்திரி எனப் பெயர் பெற்றுக் காலத்தானமாய் நிற்கும் சிவசத்தியே காரணம் என்க. [இது, சிவஞான சித்தியாருக்குச் சிவஞான சுவாமிகள் அருளிய உரையிற் கண்டது.]

(அ—கை.) சிவனுக்கும் சதாசிவன் முதலிய பேதம் நூல்களில் சொல்லப்படுகின்றமையால், அஃதுண்மையோ, அன்றோ? என்னும் வினவிற்கு விடை கூறுகின்றார்.

(33) விசித்திரமான அனேகவித சத்திகளுடன்கூடியிருக்கப்பட்ட சிவம்:என்னும் தத்துவமானது உண்மையில் ஒன்றேயாம். சத்தி வியாபார பேதத்தால் அந்தச் சிவனுக்கு இந்தச் சதாசிவம் முதலிய பேதங்கள் சொல்லப்படுகின்றன என்பதாம்.

அதிட்டித்துக்கொண்டு நிற்கும் பரமசிவம் என்னும் பெயர் கொண்ட தத்துவம் உண்மையில் ஒன்றே. அது, கர்த்தாவாகையால், அவசியம் சேதனமாகவே இருத்தல் வேண்டும். சேதனத்தன்மை உடையது, விகாரமற்றதா யிருக்கவேண்டுமென்று மேலே சொல்லியிருக்கிறோம். அந்தச் சிவம் என்னும் தத்துவம் அநேக விதமான அநேக சத்திகளுடன் கூடியிருப்பது. அஃதாவது, சத்தி ஒன்றாயினும் அறியப்படும் பொருள்பற்றிய காரியங்கள் அநேகமாதலால், அந்த உபாதி பேதத்தால் அநேகமான சத்திகளுடன் நித்தியமான சேர்க்கையுடையது சிவம் என்பது பொருள் என்க. ஆதலால், சத்திகளின் வியாபார பேதத்தால் சிவனுக்குச் சதாசிவம் முதலிய பேதங்கள் உபசாரமாகக் கூறப்பட்டனவேயன்றி, உண்மையில் இல்லை. அதிட்டிக்கப்படுதற்கு உரிமையான விந்துவுககோ எனில், சிவதத்துவம் முதலிய அவஸ்தையின் பேதமானது உண்மையென்றே சொல்லியிருக்கின்றோம. அப்படியே நூல்களிலும் சொல்லப்படுகிறது. நூல்களிற் கூறப்பட்ட சிவபேதமானது சத்தி பேதத்தினாலேயாம். சத்திபேதமானது அதன காரிய பேதத்தினாலேயாம். சிவனுக்கு யாதொரு உபாதியில் இலயம் முதலிய பேதமானது சொல்லப்பட்டிருக்கின்றதோ, அந்த உபாதி விந்து வென்றும் குண்டலினி சத்தி யென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலினாற்றான் பரமசிவனுக்குச் சதாசிவம் முதலிய உருவம் சொல்லப்படுதல், தியானத்திற்காகவேயன்றி உண்மையிலில்லை என்னும் இக்கருத்தேபற்றி, பௌட்காரத்தில், "சாதகனுடைய

லக்ஷியத்தின் பொருட்டு அவனுக்கு ரூபம் சொல்லப்பட்டிருக்கிறது" எனறும், மிருகேந்திரத்தில், "சரீரமிருத்தலால் அவன் எந்த எந்தக் காரியத்தைச் செய்கின்றானோ, அதுவதற்குக் கர்த்தாவாயிருந்து அந்த அந்தக் காரியத்தை அவன் சரீரம் அனுசரிக்கிறது" என்றும் கூறப்பட்டிருத்தல் காண்க. (33)

(அ—கை.) இவ்விஷயத்தையே இன்னுங் கூறுகின்றார்.

(34) அந்தப்பிரபுவான பரமசிவன் சித்துக்கும் சடத்துக்கும் அநுக்கிரகம் செய்வதற்காக, இந்தச் சதாசிவம் முதலிய ரூபங்களைச்செய்து அநாதியான ஆணவ மலத்தால், மறைக்கப்பட்ட சத்திகளை உடைய ஆன்மாக்களுக்கு அநுக்கிரகத்தைச் செய்கின்றார் என்பதாம்.

பரமசிவன் ஆன்மாக்களின் அநுக்கிரகத்திற்காகத் தியானிக்கப்படுதற்குத் தகுந்தவையான சதாசிவம் முதலிய சரீரங்களை அதிட்டிக்கின்றார். ஆதலால், அவற்றை அதிட்டித்துச் செய்யும் சடப்பொருள்களின் அநுக்கிரகத்தால் விருத்தி செய்யப்பட்ட ஆன்மாக்களுக்கே அநுக்கிரகம் செய்கின்றார். இந்த அநுக்கிரகத்தையே சித்து, சடங்களின் அநுக்கிரகம் என்று சொல்லியிருக்கிறோம். அநாதியான மலத்தினால் தடுக்கப்பட்ட சத்தியை யுடையவர்கள் என்று ஆன்மாக்களுக்குக் கூறப்பட்ட விசேடணமானது பரமசிவன் செய்யும் அநுக்கிரகத்திற்குக் காரணமாகக் கூறப்பட்டது என்க. (34)

(அ—கை) சித்துச் சடங்களுக்கு அநுக்கிரகம் என்பது இதுவெனக் கூறுகின்றார்.

(35) அனைத்திற்கும் அநுக்கிரகம் செய்கின்ற பரமசிவன் ஆன்மாக்களுக்குப் போகத்தையும், முத்தியையும், சட சமூகத்திற்குத் தன்தன் வியாபாரத்தில் சாமர்த்தியம் உண்டாதலையும் செய்கின்றார் என்பதாம். (35)

(அ—கை.) துக்க நிவர்த்திக்குக் காரணமான மோக்ஷத்தை அநுக்கிரகம் என்று கூறியது பொருந்தும். சுக துக்காநுபவ ரூபமான போகத்தையும் அநுக்கிரகம் என்றது எவ்வாறு பொருந்தும்? என்னும் கேள்விக்குச் சமாதானங் கூறுகின்றார்.

(36) இந்தச் சித்து சடங்களுக்கு அநுக்கிரகம் என்பது சிவசமரூபமான மோக்ஷமாகும். அந்த மோக்ஷமானது கன்மத்துக்கு அநாதித் தன்மை யிருத்தலால் போகாநுபவம் அன்றிச் சித்தியை அடைவதில்லை என்பதாம்.

பாச நீக்கத்தினலும், எல்லாப் பொருள்களிடத்தும் உள்ள ஞானக் கிரியா சத்தி ரூபமான சிவத் தன்மையின் விளக்கத்தினலும், உண்டாகும் சிவசம ரூபமான மோக்ஷமே அநுக்கிரகம் என்பது உண்மை. போகமோ எனில், "அநுபவிக்கப்படாத கன்மங்கள் அநேக கற்பகோடி காலங்கள் சென்றபோதிலும் கெடுவனவல்ல" என்னும் நியாயத்தால், போகாநுபவம் கன்ம நாசத்திற்குக் காரணமாயிருந்து கன்ம நாசம் மோக்ஷ ரூபமான அநுக்கிரகத்திற்குக் காரணமாய் இருத்தலால், இந்தப் போகமும் அநுக்கிரகம் என்று கூறப்பட்டது. ஆதலால், விரோதமில்லையென்க. (36)

(அ—கை.) இவ்வாறே பாசங்களுக்கு அநுக்கிரகம் செய்தலும் போகத்தின் வழியாய் ஆன்மாக்களுக்கு அநுக்கிரகம் செய்தற்காகவே என்று கூறுகின்றார்.

(37) ஆதலால் பரமசிவன் அந்தக் கன்மங்களின் பயனாகிய போகத்தின் பொருட்டுத் தனுகரண புவனங்களின் சிருட்டியைச் செய்கின்றார். கர்த்தா வன்றியில் காரியமானது எப்படி இல்லையோ, அப்படியே முதற்காரணமும், கரணமும் ஆகிய இவையில்லாமலும் காரியம் இல்லை என்பதாம்.

தனுகரண புவனங்கள் என்பவற்றுள், தனுகரணம் என்னும் பதத்தால், சிறப்பான சூக்கும சரீர சிருட்டியும், புவனம்

என்னும் பதத்தால் பொதுவான புவனங்களின் சிருட்டியும், பொதுவும் சிறப்புமான புவனத்திற்ரோன்றும் சரீர சிருட்டியும் சொல்லப்படுகின்றன. இந்தச் சிருட்டியை அனந்தர் வாயிலாகச் செய்கின்ருர் என்று முன்னே சொல்லப் பட்டிருக்கின்றது. இனி, கர்த்தா வன்னியில் காரியங்களுக்கு எவ்விதம் உற்பத்தி காணப்படவில்லையோ, அவ்விதமே முதற்காரணமும் கரணமும் இல்லாமல் காரியங்களின் உற்பத்தி காணப்படுகிறதில்லை. ஆதலால், அசுத்தாத்துவாவிலே தனு கரணுதிகளை அனந்தர் வாயிலாகச் சிவன் தோற்றுவிப்பதில் முதற் காரணம் எது? கரணம் எது? என்பது பூர்வபக்ஷம். (37)

(அ—கை.) மேல் நிகழ்ந்த பூர்வபக்ஷத்திற்குச் சித்தாந்தங் கூறுகின்ருர்.

(38) இந்த அசுத்தாத்துவாவில் இந்தச் சிவனுக்குச் சத்திகள் கரணமாகவும், அரூபமான மாயை முதற்காரணமாகவும் கொள்ளப்படுகின்றன. அந்த மாயையானது ஒன்ருயும், நித்தியமாயும், வியாபகமாயும், தோன்றுதல் ஒடுங்குதல் இல்லாததாயும், சிவனேடு பிரிக்க முடியாத சம்பந்தம் இல்லாததாயும் இருக்கின்றது என்பதாம்.

முன் சுத்த மாயையிற் கூறப்பட்டவாறு போல் உபாதி வேறுபாட்டால் வேறுபாடான சத்தியே இந்த அசுத்தாத்துவாவினும் சிவனுக்குக் கரணமாகும். முதற்காரணம் மாயையாகும். அந்த மாயை, சத்தி ரூபமாய் நின்று முதற் காரணமாதலால், சூக்குமமாய் உள்ளது. அஃதாவது, வடிவம் இல்லாதது என்பதாம். அத்தகைய மாயை ஒன்றேயாம். அநேகம் என்னில், அநேகமாயும் அசேதனமாயும் இருத்தல்பற்றி அநித்தியத்தன்மை உடையது என்னும் குற்றம் உண்டாகும் என்க. உற்பத்தி நாசம் இல்லாமையால் நித்தியமாய் உள்ளது. சிருட்டி சங்காரக் கிரமங்கள் நித்தியம் ஆதலால், இந்த மாயா சத்தியும் நித்தியமேயாம். நித்தியமாதலால், தன் காரியமான கலை முதலியவற்றிற்கு வியாபகமாயுள்ளதாகும். விந்து என்னும் சத்தி

போல் இந்த அசுத்த மாயையும் பரமசிவனுக்குப் பரிக்கிரக சத்தியாய் நின்று முதற் காரணமாய் இருத்தலால், இது அவனிடத்தில் * சமவேதமில்லாமல் இருக்கின்றது. (38)

(39) இந்த மாயா சத்தியானது ஆன்மாக்களுக்குப் பொதுவாயும் எல்லாப் புவனங்கட்கும் காரணமாயும், எல்லா ஜனங்களின் கன்மங்களுடன் கூடினதாயும், மோகத்தை யுண்டு பண்ணுகிறதாயும் இருக்கிறது என்பதாம்.

இந்த மாயையானது, எல்லாப் பிராணிகளினுடைய சரீர இந்திரியங்களாய்ப்பரிணமித்து, எல்லாப் புருடர்கட்கும் போக்கியமாய் இருத்தலால், ஆன்மாக்களுக்குப் பொதுவென்று கூறப்பட்டது. எல்லாப்புவனங்கட்கும் காரணம் என்று கூறியதால் உபலக்ஷணத்தால் தேகம் முதலியவற்றிற்கும் காரணம் என்பது சித்திக்கும். பிரளயகாலத்தில் புத்தி்தத்துவத்திற்கும் மாயையின் கண் ஒடுக்கம், ஆகையால் புத்தியின் குணரூபங்களான எல்லா ஆன்மாக்களினுடைய் கன்மங்களுடன் கூடினது என்று கூறப்பட்டது. உழவு முதலிய தொழில்கள் பூமியைச் சுத்தஞ் செய்வதுபோலக், கன்மமும் புத்தியைச் சுத்தஞ்செய்தலால் புத்தி குணமாகக் கொள்ளப் படுகிறது. ஆன்ம குணமாகக் கொள்ளப் படுகிறதில்லை. ஆன்மகுணம் என்னில், ஆன்மாவிற்கு வேறுபடுந்தன்மை யுண்டாகுமென்க. இந்த மாயையானது அநித்தியமாயும், அசுத்தமாயும், துக்கமாயும் காணப்படும் ஆன்மாவிற்கு வேறானபொருள்களில் நித்தியமாயும், சுத்தமாயும், சுகமாயும், உள்ள ஆன்மாவின் தோற்றத்தை உண்டுபண்ணுதலால், மோகத்தை உண்டுபண்ணுகிறது என்று சொல்லப்பட்டது. (39)

(40) பரமசிவன் கன்மங்களை யநுசரித்துத் தன்னுடைய சத்திகளால் மாயையைக் கலங்கும்படிசெய்து, (அஃதாவது,

* சமவேதம் என்பது சமவாய சம்பந்தத்தில் இருப்பது. சமவாயம் என்பது எக்காலத்தும் பிரிக்கமுடியாத கலப்பு. சிவனிடத்தில் சமவேதமாய் இருப்பது சிற்சத்தியே. மாயை பரிக்கிரகமாயிருப்பது.

உற்பத்திக்கு எதிர்முகமாகச்செய்து) ஆன்மாக்கள் தோறும் போகத்திற்காகச் சரீரங்களையும், கரணங்களையுந்தோற்றுவிக்கின்றார் என்பதாம்.

பரமசிவன் பிரளயகாலத்தில் பக்குவமடைந்த ஆன்மாக்களின் கன்மங்களையறிந்து அந்த ஆன்மாக்களின் போகத்தின் பொருட்டுத் தன்னுடைய சத்தியால், அதிட்டிக்கப்பட்ட அனந்தேசுவரருடைய சத்திகளால் மாயையை உற்பத்திக்கு எதிர்முகமாகச் செய்கின்றார். இவ்வாறே "வாமை முதலிய சத்திகளுடன் கூடினவராயும், பரமசிவனுடைய இச்சாரூபமான நியமத்தால் ஏவப்பட்டவராயும் உள்ள வித்தியா ராஜாதிராஜனென மந்திரேசுவரர், மாயையைக் கலக்கிக் கலையை உண்டுபண்ணுகிறார்" என்று ஸ்ரீமத் இரௌரவாகமத்திற் கூறப்பட்டிருக்கின்றது. அந்தமாயையை யதிட்டித்து ஆன்மாக்கள் தோறும் வெவ்வேறான தூல சரீரங்களையும் இந்திரிய சமூகங்களையும், சூக்குமசரீரங்களையும், பொதுவான புவனம் முதலியவைகளையும் தோற்றுவிக்கின்றார். (40)

(அ-கை) இனி, கலைமுதல் பிருதிவி யீறாகமுப்பது தத்துவங்கள் சூக்கும தேகத்திற்கு உபகாரிகளாயிருக்குந் தன்மையைத் தெரிவிப்பதற்காக அம்முப்பது தத்துவங்கள் தோற்றும் முறைமையைச் சொல்லுகின்றார்,

(41) அநேக சத்திரூபமான அந்தமாயையானது முதலாவதாகக் காலம் என்னும் தத்துவத்தைத் தோற்றுவிக்கின்றது. யாதொரு காரணத்தால் இந்தக் காலதத்துவமானது உலகத்தைச் சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலமாகப்பிரிக்கின்றதோ அந்தக்காரணத்தால் பிரிக்கின்ற இது காலதத்துவம் எனக் கொள்ளப்படுகிறது என்பதாம்.

"உள்ளது தோன்றும்" என்னும் சற்காரியவாதத்தைநாம் அங்கிகரிக் கின்றமையால் மகாப் பிரளயத்திலும் காரியப்

பொருள்கள் சத்தி ரூபமாய் மாயையில் இருத்தல்பற்றிச் சத்தி சமூக ரூபமான மாயையானது அனந்தேசுவரரால் கலக்கப்பட்டுக் காலதத்துவத்தைத் தோற்றுவிக்கின்றது. காரியத்தைத் தோற்றுவிக்கும் மாயையின் பரிணாமமானது பால் தயிராகப் பரிணமிப்பதுபோல முற்றும் பரிணாமமாதலில்லை. நெய் புழுவாகப் பரிணமிப்பதுபோல், ஏகதேச பரிணாமம் என்றறிக. மதங்கம் முதலிய ஆகமங்களில் கலை, வித்தை, அராகம் என்னும் இவற்றினுடைய வியாபாரத்திற்குப் பின் இந்தக் காலதத்துவத்தின் வியாபாரம் சொல்லப்படுகிறது. அங்ஙனமாகவும் இங்கே காலதத்துவத்தை முதலாவதாகச் சொல்லுதல் எவ்வாறு பொருந்தும்? எனில், கலை வித்தை அராகம் என்னும் இவற்றினுடைய தொழில் முதற்கண் நிகழும்; ஆகையால், தொழிற்படும் முறையை யநுசரித்து, அவற்றின்பின் காலதத்துவ நிரூபணம் மதங்கம் முதலியவற்றில் சொல்லப்பட்டது. இவ்விடத்தில், கால தத்துவம் முதலாவதாகத் தோற்றுவிக்கப்படுதலால், தோன்றும் முறையை அநுசரித்து முதலாவதாகச் சொல்லப்பட்டது; ஆதலாற் பொருந்தும் என்க. இந்தக் கால தத்துவமானது தார்க்கிகர் முதலிய புறச் சமயிகளால் நித்தியமாகக் கொள்ளப்படுகிறது. அது, பொருந்துமோ எனில், இக் காலமானது சென்றது, நிகழ்கின்றது, வரப் போகின்றது என மூன்று பிரிவுகளாகக் காணப்படுதலால், அசேதனமும் அநித்தியமும் ஆதல் பற்றி, நித்திய மென்றல் பொருந்தாது என்க. இந்தக் காலம் எந்தக் காரியத்தினால் சித்திக்கின்றது? எனில், தாமதம் விரைவு முதலிய ஞானரூபமான உபாதியின் வழியாக உலகத்தைப் பிரிக்கும் காரியத்தால் சித்திக்கின்றதென்க. இவ்வாறே, "காலமானது ஞானத்தாற் பிரிக்கப்படுகிறது" என்று பெரியோர்கள் கூறுகின்றார்கள். (41)

(42) நியதியானது, நியமனத்தைச் சொரூபமாக உடையது. அதுவும், கால தத்துவத்திற்குப் பின் மாயையினின்று உண்டாகின்றது. யாதொரு காரணத்தினால் எல்லா உலகத்தை

யும் நியமனம் செய்கின்றதோ, அந்தக்காரணத்தால் இது நியதி தத்துவம் என்று சொல்லப்பட்டது என்பதாம்.

இதன் கருத்தாவது, இராஜாவின் ஆணை என்னும் நியமம் இல்லாவிடில் உழவு தொழில் முதலியவற்றால் பெறக்கூடிய நெல் முதலியவற்றை உரியரல்லாத திருடர் அநுபவிப்பர். அது போல், நியதி என்னும் தத்துவம் இல்லாவிடில், ஒருவனாற் செய்யப்படும் கன்மங்களின் பலன்களான சுக துக்கங்களை மற்றொருவன் அநுபவிப்பன். ஆதலால், கன்மங்களின் நியமனத்தின் பொருட்டு நியதி என்னும் தத்துவம் சித்தித்தது என்க. கன்மமே நியதியைச் செய்யும் எனனில், அக்கன்மம் பலன்களை உண்டுபண்ணுவதிலேயே பயன்படுவதன்றி, வேறு காரியங்களுக்குக் காரணமாய் இருக்குமென்றற்குப் பிரமாணமில்லை. இன்னும், கன்மத்தை நியமனம் செய்வதென்று சொல்லில், எல்லாத் தத்துவங்களின் காரியத்திற்கும் கன்மமே ஏதுவாகி அநேக தத்துவங்களை நிர்ணயிப்பதில் அச்சம் நேரிடும். ஆதலால், நியதி தத்துவமே நியமனத்தைச் செய்யும் என்க. சிவ சத்தியே நியமனம் செய்யுமென்று கொள்வோமெனில், அது பொருந்தாது. எதனாலெனின், அச்சிவ சத்தியானது யாதானும் ஒரு தத்துவத்தின் வழியாகவே போக விஷயத்தில் காரியம் செய்யும் ஆதலாலென்க. அங்ஙனம், யாதானும் ஒரு தத்துவத்தின் வழியாகச் சிவசத்தியானது தன் காரியத்தைச் செய்யுமென்பது இல்லையாயின், சகல தத்துவங்களுமே வேண்டப்படுவன வல்ல என்று கொள்ளவரும். (42)

(43) அரன் பின்னர் மாயையிலிருந்து கலை என்னும் தத்துவமானது தோன்றுகின்றது. அந்தக் கலையானது ஆன்மாக்களுடைய மலத்தை ஏக தேசத்தில் விலக்கிக் கிரியா சத்தியை விளக்குகின்றது. ஆதலால், கலை என்று சொல்லப்பட்டது என்பதாம்.

இந்தக் கலை என்னும் தத்துவமானது, மலத்தினால் மறைக்கப்பட்டுப் போகாநுபவத்திற்கு உரிமையில்லாத ஆன்மாக்க

ளின் போகாநுபவத்தின் பொருட்டு மலத்தைச் சிறிது விலக்கித் தொழிற் செய்யும் சத்தியை விளங்கும்படி செய்கின்றது. * சத்தி ஏக மாதலால், ஞானக் கிரியா சத்தியைச் சிறிது விளங்கும்படி செய்கிறதென்று கொள்க. இந்தச் சத்தி விளக்கமென்னுங் காரியத்தினால், கலை என்னும் தத்துவம் உண்டென்பது சித்தித்தது. (43)

(44) அப்பிரதானத் தன்மையை யடைந்திருக்கும் கால தத்துவத்தினாலும், நியதி தத்துவத்தினாலும் இந்தக்கலையானது தன்னுடைய வியாபாரத்தைப் பூமிவரை செய்கின்றது என்பதாம்.

கலை என்னும் தத்துவமானது போகத்தை யநுபவிக்கும் ஆன்மாவின் சொரூபத்திற்கு உபகாரமாயிருத்தலால் அந்தரங்க சாதனமாகும். அதுபற்றிக் கலை பிரதானமாயுள்ளது. காலம் முதலியவையோ எனில், வெளிச் சாதன மாதலால் அதுபற்றி அவை அப்பிரதான மென்று சொல்லப்பட்டன. (44)

(45) கிரியா சத்தியின் விளக்கத்தை உடைய உயிருக்கு விஷயங்களை அறிவிப்பதற்காகக் கலா தத்துவமே பிரகாச ரூபமான வித்தியா தத்துவத்தைத் தோற்றுவிக்கின்றது என்பதாம்.

இவ்வாறே கலா தத்துவத்திலிருந்து அராகம், வித்தையென்னும் இரண்டு தத்துவங்களும், மூலப் பிரகிருதியும் உண்டாயின என்று இரௌரவாகமத்திற் கூறப்பட்டிருக்கின்றது. (45)

(அ—கை.) ஆன்மாக்களுக்கு விஷயங்களை அறிவிப்பதில் வித்தியா தத்துவம் காரணமாயிருப்பதென்பதை விளக்குகின்றார்.

(46) இந்த வித்தியா தத்துவமானது, தன்னுடைய வியாபாரத்தால், ஞானம் என்னும் பெயருடைய சத்திக்கு,

* ஞானத்தின் வியாபார பேதமே கிரியையாகலின் ஏகம்.

விஷயங்களை அறியாதிருந்த லென்னும் மறைப்பைக் கெடுத்து, விஷய சமூகத்தைத் தோற்றுவிக்கின்றது. இவ்விஷயத்தில் அந்த வித்தையானது ஆன்மாவிற்கு மேலான சாதனமாக இருக்கின்றது என்பதாம்.

கலை யென்னும் தத்துவத்தினால் ஆணவமலத்தின் மறைப்புச் சிறிது நீக்கப்பட்டு ஆன்மாவின் ஞான சத்திக்கு விளக்கம் உண்டாதலால், அதன்மேலும் ஞான சத்தியின் விளக்கத்தின் பொருட்டு வித்தியா தத்துவம் எற்றுக்கெனின், கலா தத்துவத்தினால், ஞான சத்திக்கு விளக்கம் உண்டான போதிலும் அந்த ஞான சத்தியானது காணம் இன்றி விஷயத்தை அறியும்படியான சாமர்த்தியம் உடையதாகாது. ஆதலால், இந்த வித்தியா தத்துவமானது ஞானசத்திக்குக் காரணமாய் நின்று தன்னுடைய வியாபாரத்தினால் ஞான சத்தியினுடைய மறைப்பை நீக்கி விஷயங்களை அறியும்படி செய்விக்கிறது.

விஷயங்களை அறிவதற்குப் புத்தி முதலிய காணங்கள் இருக்கின்றமையால், அவையே அமையாதோ? எனில், கடம் முதலியவற்றின் ஞானம் கண் முதலியன இன்றிப் புத்தி முதலியவற்றால் எப்படி உண்டாகிறதில்லையோ, அப்படியே சுக துக்கங்களின் உணர்வு காணமன்றிப் புத்தி முதலியவற்றால் உண்டாகாமைபற்றி, இந்த வித்தியா தத்துவமானது சுகதுக்கங்களின் உணர்வு விஷயத்தில் ஆன்மாவிற்குக் காணமாய் நின்று அந்தாங்க சாதனமாய் இருக்கின்றது என்க. புத்தி முதலியவை வெளிச் சாதனமாய் இருக்கின்றன. குதிரையினாலும், வழியினாலும், தீபத்தினாலும் ஒருவன் செல்கின்றான் என்றவிடத்தில் குதிரை, அந்தாங்க சாதனமும், ஏனைய பகிரங்கசாதனமும் ஆதல்போல சுகதுக்க உணர்வு விஷயத்திலும் அநேக சாதனங்கள் சேர்ந்து காரியம் முடிவை யடைந்தாலும், வித்தையே பிரதானமான சாதனம் என்றறிந்து கொள்க. (46)

(அ—கை.) இன்னும் அதனையே தெரிவிக்கின்றார்.

(47) இந்த ஆன்மாவிற்குப் புத்தியானது சுகதுக்க ரூப மான போக்கியப் பொருளாக எப்பொழுது சித்திக்கிறதோ, அப்பொழுது இவ்வாறு வித்யா தத்துவமானது கரணமாய் இருக்கின்றது. விஷயத்தை கிரஹிப்பதில் புத்தியானது கரண மாய் இருக்கின்றது என்பதாம்.

மனதினாலே செலுத்தப்பட்ட கண் முதலிய இந்திரியங்க ளால் அறியப்படும் விடயங்களைப் புத்தியானது சந்தேகமின்றி நிச்சயிக்கும். அப்புத்தியால் நிச்சயிக்கப்பட்ட விடயங்களை ஆன்மா பற்றுகின்றது. இவ்வாறே, "புத்தியினால் நிச்சயிக்கப் பட்ட விடயங்களைப் புருடன் அறிகின்றான், எனப் பெரியோர் களும் கூறியிருக்கின்றனர். ஆதலால் வித்தை எதற்காகவேண் டுமெனில், நிச்சயரூபமான புத்தியை விஷயமாகக் கொண்ட அறிவில் புத்தியே விஷயமாதலால், அப்புத்தியை அறிவதற்கு அதனையே கரணமாய்க் கொண்டு அறிய முடியா தாதலால் அதற்குக் கரணமாய்ப் புத்தியினும் வேறாய் வித்தை யென்னும் தத்துவம் வேண்டுமென்று சித்தித்திருக்கிற தென அறிந்து கொள்க.

இவ்வாறே, "புத்தியானது மகானைச் சூரியன் போல் பிரகாச ரூபமாய் இருந்தாலும் தன்னை யறியும் விஷயத்தில் தானே விஷயமா யிருக்கின்றமையால் தானே சாதனமாதல் கூடாது" என்று தத்துவ சங்கிரகத்திலும் கூறப்பட்டிருக் கின்றது. (47)

(அ=கை.) அராக தத்துவத்தின் உண்மையைக் கூறுகின் றார்.

(48) பற்றுதலைச் சொரூபமாகக் கொண்ட அராகதத்து வமானது விஷயங்களின் வேறுபாடின்றியே புருடனுடைய பிரவிர்த்திக்குக் காரணமாயிருக்கின்றது. புத்தியின் தர்மங் களைக் காட்டிலும் வேறாயுள்ளது. எல்லாப் பற்றுக்களுக்கும் பொதுவான காரணமாய் உள்ளது என்பதாம்.

பற்றுதலானது அராகதத்துவத்தின் காரியமாதலால், அந்தத் தத்துவத்திற்குச் சொரூபம் எனக் கூறப்பட்டது. அஃதாவது, பற்றுதலென்னும் காரியத்தைக்கொண்டு அராகதத்துவத்தினுண்மை சித்திக்கின்றது என்பதாம். பொருள்களின் குணங்களையே புருடனுடைய பற்றுதலுக்குக் காரணமாகக் கொள்ளலாம்; அல்லது, வைராக்கியமின்மை யென்னும் புத்தியின் தர்மத்தையாவது காரணமாகக்கொள்ளலாம்; அராகமென்னும் தத்துவம் பற்றுதற்குக் காரணமாக வேண்டாமென்னின், அது பொருந்தாது; எவ்வாறெனின், பொருள்களின் குணங்களைப் பற்றுதலுக்குக் காரணமாகக் கொண்டால், பற்றின்றி வைராக்கியம் நிறைந்தவர்களுக்கும் பொருள்களின் குணம் விளங்குகின்றமையால், அக்குணங்களைப் பற்றினவர்களாய் வைராக்கியம் நிறைந்த துறவிகள் இல்லையாய் முடியும். இனி, புத்தியின் தர்மமான வைராக்கியமின்மையும் புத்தியின வாசனு ரூபமாதலால், அதனால் புருடனுக்கு உபகாரம் உண்டாகாது. உபகாரம் உண்டென்னில், புத்தியானது அளவற்ற வாசனைகளுடன் கூடியிருப்பதால், புருடனுக்கு ஒரே காலத்தில ஒன்றுக் கொன்று மாறுபட்ட அனேக ஞானங்கள் உண்டாகிக் கெடுதல்வரும். ஆதலால், பொருள்களின் குணங்கள் புத்திதர்மமான வைராக்கியமின்மை என்னும் இவற்றினும் வேறான அராகமென்னும் தத்துவம் புருடனுடைய பற்றுதற்றொழிலுக்குக் காரணமாய்ச்சித்தித்ததென்க. இவ்விஷயம் நமமால் மிருகேந்திர விருத்தி தீபிகையில் விரிவாய்க்கூறப்பட்டிருத்தலால், அவ்விடத்துக்கண்டு கொள்க. இந்த அராகதத்துவமானது எல்லாப்பொருள்களி னிடத்தும் உண்டாகும் பொதுவான பற்றுதலுக்குக் காரணமாதலால், பொதுவான காரணமெனக் கூறப்பட்டது. (48)

(அ-கை) புருடன் சிவனைப்போல் சடப்பொருளின்றிச் சேதனப்பொருளாதலால், சடப்பொருள்களாயுள்ள தத்துவங்களினிடையே புருடதத்துவம் என வைத்தெண்ணுவதும், புருடன் வியாபகமாதலால், தத்துவங்களுக்குள் அராகதத்து

வத்திற்குப்பின் புருடதத்துவத்தை நூல்களிற் கூறுவதும் பொருந்தாதே என்னும் ஆசங்கைக்குச் சமாதானங் கூறுகின்றார்.

(49) இந்தத் தத்துவங்களால் வியாபிக்கப்பட்டு, ஆன்மாவானது, எப்பொழுது போகத்தை யநுபவிக்கும் தன்மையுடையதாயிருக்கும் நிலையை அடைகிறதோ, அப்பொழுது புருடன் என்னும் பெயருடன் கூடியிருக்குந் தன்மையையும் தத்துவங்களின் இடையே வைத்து எண்ணப்படுவதையும் அடைகின்றது என்பதாம்.

கலை, வித்தை, அராகம், காலம், நியதி என்னும் இவ்வைந்து தத்துவங்களோடு கூடிய அணுவான ஆன்மா, போகத்தை யநுபவிக்குந் தன்மை யுடையதாய்ப் புருட தத்துவமென வழங்கப்படுகிறது. இவ்வளவேயன்றி உண்மையில் புருடனுக்குத் தத்துவமாயிருக்குந் தன்மைகிடையாது. ஆதலினாற்றான், மதங்கம் முதலிய ஆகமங்களில், புருடதத்துவ புவனங்களுக்கு அராகதத்துவத்தில் இருப்புக் கூறப்பட்டுள்ளது. வியாபகமான புருடதத்துவத்தை அராகதத்துவத்தின் பின்னர் வைத்து எண்ணினமைக்குக் காரணம் என்னையெனில், தீக்ஷையில் பிரகிருதி தத்துவத்தின் சுத்தியின்பின்னர் புருடத்தன்மை என்னும் மலத்தைச் சுத்திசெய்வதன் பொருட்டு ஆதலால் என்க. (49)

(50) புருடனுடைய போகத்திற்காக கலை யென்னும் தத்துவமே, அந்த அராகதத்துவத்திற்குப்பின் அவ்வியத்தம் என்னும் பிரகிருதி தத்துவத்தைத் தோற்றுவிக்கின்றது. அந்தப் பிரகிருதியானது, வெளிப்படாத சாத்துவிக இராசத தாமதகுணங்களோடு கூடியிருத்தலால், விளக்கிச் சொல்லமுடியாத காரணத்தைக் கொண்டு அவ்வியத்தம் எனப்பட்டது என்பதாம்.

இவ்வாறு போகத்தை யநுபவிக்குந்தன்மையை அடைந்த புருடனுடைய போகத்தின் சித்திபின்பொருட்டு அப்போகத்

திற்குச் காரணமாய் அராகதத்துவத்திற்குப் பின் கலை என்னும் தத்துவமே அவ்வியத்தம் என்னும் பிரகிருதி தத்துவத்தை உண்டுபண்ணுகின்றது. போகம் என்னும் பதத்திற்குக் குணம் முதலிய தத்துவங்கள் பொருளாகும்; எதனாலெனின், இந்தத் தத்துவங்களால் போகங்கள் அநுபவிக்கப்படுகின்றன ஆதலாலென்க. அஃதாவது, குணம் முதலிய தத்துவங்கள் போகாநுபவத்திற்குச் சாதனங்கள் என்றபடியாம். எனவே, 'போகத்தின் சித்தியின் பொருட்டு' என்பதற்குக் குணம் முதலிய தத்துவங்களின் சித்தியின்பொருட்டு என்பது பொருளாகக்கொள்க. சாத்துவிகம், இராசதம், தாமத மென்னும் முக்குணங்களே அவ்வியத்தமாகும்; அதுவே புத்தி முதலியவற்றிற்குக்காரணம் என்று சாங்கியர் கூறுகின்றனர்; அது பொருந்தாது. எதனாலெனின், சத்துவ முதலிய முக்குணங்கள் சடமாயும் அநேகமாயு மிருத்தலால், அவற்றிற்குவேறான காரணம் முன் இருந்து அந்தக் காரணத்திலிருந்தே சத்துவ முதலிய குணங்கள் தோன்றவேண்டுமென்பது முறைமையாதலால், அந்தக் காரணமே அவ்வியத்தமென்று கூறப்படுமாதலாலென்க. அவ்வாறாயின், சாங்கியனால் ஒப்புக்கொள்ளப்பட்ட பிரகிருதியைப் போல் இந்த அவ்வியத்தத்தை நித்தியமெனக் கொள்ளலாமோ வெனின், ஆகாது. எதனாலெனின், பிரகிருதியானது ஒவ்வொரு புருடர்கள் தோறும் வெவ்வேறாயிருத்தல் பற்றிச் சடமாயும் அநேகமாயும் உள்ளதெனப்பட்டுக் காரியத்தன்மை சித்தித்தலாலென்க. (50)

(51) பிரகாசம், பிரவிருத்தி, நியமம் என்னும் ரூபமான சாத்துவிகம், இராசதம், தாமதமென்னும்குண தத்துவமானது அவ்வியத்தமென்னும் பிரகிருதி தத்துவத்திலிருந்து தோன்றுகின்றது. பின்னும், சுக துக்க ரூபமாகவும், மோக ரூபமாகவும் இந்தக் குணதத்துவம் விளங்குகின்றது என்பதாம்.

பிரகாசம், பிரவிருத்தி, நியமம் என்னும் மூன்று விதமான காரியங்களால், காரணமான அவ்வியத்தத்திலிருந்து

குணதத்துவம் தோன்றுகிறது என்பது சித்திக்கிறது. அந்தக் குணதத்துவம் சாத்துவிகம், இராசதம், தாமதம் என மூன்றுவகையாயிருந்து, சாத்துவிக குணம் சுகத்தையும், இராசத குணம் துக்கத்தையும், தாமத குணம் மோகத்தையும் உண்டுபண்ணுதலால், சுக துக்க மோக ரூபமென்றுங் கூறப்படுகின்றது. இந்தத் தத்துவங்களின் இலக்கியலக்கணங்களை மதங்கம் முதலிய நூல்களில் விரிவாகக் கூறப்பட்டிருத்தலால், அவ்விடங்களிற் கண்டுகொள்க. விரியுமென்றஞ்சி இவ்விடத்து விரிக்கவில்லை. (51)

(52) சத்தம் முதலிய விஷயங்களின் நிச்சய அறிவு ரூபமான புத்தி தத்துவமும், முக்குணங்களான குணதத்துவத்திலிருந்து தோன்றுகின்றது. அந்தப் புத்தி தத்துவமும் காரியத்தை யநுசரித்தும், சத்துவ முதலிய குணங்களாலும், மூன்றுவிதமாகச் சொல்லப்பட்டது என்பதாம்.

இது கடம், என்னும் நிச்சயத்தை உண்டுபண்ணுதலாகிய காரியத்தைக்கொண்டு புத்தி தத்துவம் சித்தித்தது. அந்தப் புத்தியும் புருடனுடைய காரிய ரூபத்தால் சத்துவ குணம் அதிகமானபொழுது சாத்துவிகி யென்றும், இராசத குணம் அதிகமானபொழுது இராசசி யென்றும், தாமத குணம் அதிகமானபொழுது தாமசி யென்றும் மூன்றுவிதமாக ஆகிறது. குணங்களினுடைய வியாபாரம் எல்லாவிடத்திலுங் காணப்படுகின்றமையால், புத்திதத்துவம் மூன்றுவிதமாக ஆகிறதெனக. இந்தப் புத்திக்குத் தர்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், அதர்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அநைசுவரியம் என்னும் எண் குணங்களையுடையதா யிருக்குந் தன்மையும், சித்தி முதலிய ஞானபேதமும் உளவென்பதை மதங்கம் முதலிய ஆகமங்களிற் கண்டுகொள்க. (52)

(53) அந்தப் புத்தி தத்துவத்திலிருந்து இந்த அகங்கார தத்துவமானது ஜீவனகங்காரம், சம்பிரம்பாகங்காரம், கர்வாகங்காரம் என்னும் மூன்றுவிதமாகத் தோன்றுகிறது.

சத்தான ஆன்மாவிற்கு இந்த அகங்கார தத்துவத்தினுடைய சேர்க்கையினால் விஷயமானது விபவகரிக்க யோக்கியமாகுந் தன்மையை யடைகிறது என்பதாம்.

பிரயத்தனம் என்னும் சம்பிரம்பமானது அகங்காரத்தினால் உண்டாகின்றது. இவ்வாறே "சம்பிரம்பமானது அகங்காரத்தின் வியாபாரம்" என்று பெரியோர்களும் கூறுகின்றனர். இன்னும், பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் என்னும் ஐந்து வாயுக்களின் தொழிற்பாட்டிற்கு அகங்காரம் காரணமாயிருத்தலால், ஜீவனமும் அகங்காரத்தால் உண்டானதேயாம். இவ்வாறே "சரீரத்திலுள்ள ஐந்துவாயுக்களும் எந்த அகங்காரத்தின் சேர்க்கையால் தொழிற்படுகின்றனவோ" எனப் பெரியோர்களும் கூறுகின்றனர்.

அவ்வாறே, அறிவிற்கு விடயமான பொருள்களிலுள்ள புத்தி காரியமான நிச்சயத்தைக் காட்டிலும் வேறானதாயும், நான் என்னும் அறிவின் கருத்தாவை விஷயமாகக்கொண்ட நிச்சய ரூபமாயும் உள்ள கர்வமும் அகங்காரத்தின் காரியமே. ஆதலின், இம்மூன்றினாலும் அகங்காரம் என்னும் தத்துவஞ் சித்தித்ததென்க. இந்த அகங்காரத்தினுடைய சேர்க்கையினாலேயே, "நான் கடத்தை அறிகிறேன்" என்பது முதலிய வியவஹாரங்கள் உண்டாகின்றன. அவ்விதமான அகங்காரம் புத்தி தத்துவத்தினின்றும் தோன்றிற்று. சாங்கியர்களும் "மகத் தத்துவத்திலிருந்து அகங்காரம் தோன்றுகிறது" என்று கூறுகின்றனர். (53)

(54) அந்த அகங்கார தத்துவமானது சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் பேதத்தால் மூன்றுவிதமாகத் தோன்றுகின்றது. பின்னும் அந்த அகங்கார தத்துவமே தைசதம், வைகாரிகம், பௌதிகம் என்னும் பெயர்களால் சொல்லப்படுகின்றது என்பதாம்.

சாத்துவிகாகங்காரத்திற்குத் தைசதமென்றும், இராசதாகங்காரத்திற்கு வைகாரிகமென்றும், தாமதாகங்காரத்திற்

குப் பௌதிக மென்றும் முறையே பெயர்கள் வழங்கப்படுகின்றன. (54)

(55) அந்த மூன்று அகங்காரங்களுக்குள், தைசத அகங்காரத்திலிருந்து மனமும் ஞானேந்திரியங்களும், வைகாரி காகங்காரத்திலிருந்து கன்மேந்திரியங்களும், பௌதிகாகங்காரத்திலிருந்து தன்மாத்திரைகளும் ஆகிய இந்தப் பதினாறும் இந்த அகங்காரத்திலிருந்தே தோன்றுகின்றன என்பதாம்.

தைசதம், வைகாரிகம், பௌதிகம் என்னும் மூன்றுவிதமான அகங்காரங்களுள் தைசதாகங்காரத்திலிருந்து மனதும், கண் காது மூக்கு நாக்கு தோல் என்னும் ஞானேந்திரியங்களும்; வைகாரிகாகங்காரத்திலிருந்து வாக்கு கை கால் ஆசனம் குறி என்னும கன்மேந்திரியங்களுந் தோன்றுகின்றன. பௌதிகாகங்காரத்திலிருந்து சப்தம் பரிசம் ரூபம் இரசம் கந்தம என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும் தோன்றுகின்றன. தைசதாகங்காரத்திலிருந்து மனதும், வைகாரிகாகங்காரத்திலிருந்து ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும் தோன்றுமென்க கூறலாகாதோவெனின், மூல வசனத்தோடும் யுக்தியோடும் மாறுபடுமாதலால், அவ்வாறு கூறலாகாதென்க. சாத்துவிகமான து பிரகாச ரூபமாகையால் ஞானேந்திரியத்திற்குக் காரணமாதலும், இராசதம் கிரியைக்குக் காரணமாதலால் கன்மேந்திரியத்திற்குக் காரணமாதலும் யுக்திக்குப் பொருத்தமாகும். இவ்வாறே ஸ்ரீமத் மிருகேந்திராகமத்திலும் "மனதோடு சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணங்கள் பிரகாச ரூபமாயிருத்தல்பற்றிச சத்துவ குணமுள்ளவை; தைசதம் சாத்துவிகம என்பன ஒருபொருட் சொற்கள்; வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தங்கள் செயல்களின் காரணமாதலால் இராசத குணத்தில் உண்டானவை" என்று கூறப்பட்டிருத்தல் காண்க. (55)

(அ—கை) மனம் என்னும் தத்துவத்தைப்பற்றிக் கூறுகின்றார்.

(56) மனம் என்னும் தத்துவமானது இச்சையைச் சொருபமாகவுடையது. அந்த மனதுக்குச் சங்கற்பம்என்பது தொழிலாக நிகழ்கின்றது. செவியும் துவக்கும் (தோலும்) கண்ணும் நாக்கும் நாசியும் ஞானேந்திரியங்களாகும் என்பதாம்.

சங்கற்பம் என்பது அவதானம். அஃதாவது, ஒரு பொருளைப் பற்றுந்தன்மை. அந்தச் சங்கற்பம் என்னும் தொழிலால், இச்சை என்னும் மன தத்துவம் சித்தித்ததென்பது பொருள். இதன் கருத்தாவது, தனக்கு வேறான விஷயங்களில் பற்றுள்ள ஆன்மாவினுடைய கண் முதலிய பொறிகளுக்குக் கடம் முதலிய புலன்களோடு சேர்க்கை இருந்த போதிலும், எதனுடைய நிலைக்களமில்லையாயின் பொறிகள் தொழிற்படுவதில்லையோ அந்த நிலைக்களமே மனம் என்னுந் தத்துவமென்பதாமென்க. பிற்பகுதியினால் ஞானேந்திரியங்களைக் கூறுகின்றார். (56)

(அ—கை) பின்னர் இந்த ஞானேந்திரியங்களால் அறியப்படும் விஷயங்களைக் கூறுகின்றார்.

(57) அந்தஞானேந்திரியங்களுக்கு சத்தமும் பரிசமும் ரூபமும் இரசமும் கந்தமும் அறியத்தக்கவை.

இந்தக் காரணத்தால் இந்த ஐந்து இந்திரியங்களுக்கும் ஐந்து விஷயங்களும், முறையே (அதாவது காதுக்குச் சத்தமும், தோலுக்குப் பரிசமும், கண்ணுக்கு ரூபமும், நாவுக்கு இரதமும், நாசிக்குக் கந்தமும்) விடயங்களாகச் சித்திக்கின்றன என்பதாம். (57)

(அ—கை) ஆதலால், இந்த ஐம்பொறிகளையின்றிச் சத்தம் முதலியவற்றை அறியமுடியாது; ஆதலின், அவற்றின்

அறிவின்பொருட்டு அருத்தாபத்திப் பிரமாணத்தால் இவ்வைம்பொறிகள் சித்தித்தனவென்று கூறுகின்றார்.

(58) சத்தம் முதலியவற்றை அறியும் அறிவானது இந்த ஞானேந்திரியங்களுக்கு முறையே தொழில்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. வாக்கு, பாதம், கை, ஆசனம், குறி என்னும் இவை கன்மேந்திரியங்களாகச் சித்திக்கின்றனஎன்பதாம்.

செவி முதலிய ஞானேந்திரியங்களுக்குச் சப்தம் முதலிய விஷயங்கள் இன்னதற் கிதுவென நியதமாயிருத்தலின், சப்தம் முதலிய ஐந்தும், ஆகாயம் முதலிய பூதங்களின் குணம் ஆதலால், அவ்வப் பூதகுணங்களை அறிவிக்கும் செவி முதலிய இந்திரியங்கள், அவ்வப் பூதங்களிற் றோன்றிய காரியமென்றலே பொருத்தமுடைத் தாதலின், ஞானேந்திரியங்கள் பௌதிகமேயாம்; என்னில், அது பொருந்ாது. எவ்வாறெனில், இந்திரியங்கள் பூதங்களின் காரியமாயின், கண்ணிந்திரியமானது அக்கினியின் குணமான ரூபத்தை மாத்திரம் அறியவேண்டும், அவ்வாறன்றி, அக்கினியையும் வேறு பூதங்களையும் அவற்றின் குணங்களையும், கன்மம் சாதி என்னும் இவைகளையும் அறிகின்றமையால், கண்ணிந்திரியம் அக்கினியின் காரியம் ஆகாதவாறுபோல, ஏனையவும் ஆதலின்னென்க. இக் கருத்தைப் பற்றியே சித்தகுரு என்பவரும், "நியதம்பற்றி இந்திரியங்கள் பூதகாரியம் என்று சொல்லின், கர்மம் சாமானியம் சமவாயம் என்னும் இவற்றினறிவு இந்திரியங்களால் உண்டாகக் கூடாது" எனக் கூறியிருக்கின்றனர். வாக்கு பாதம் என்னும் பிற்பாதியால் கன்மேந்திரியங்களைக் கூறுகின்றனர். (58)

(அ—கை) பின்னர் எந்தத் தொழில்களால் கன்மேந்திரியங்கள் சித்திக்கின்றன என்பதைப்பற்றிக் கூறுகின்றார்.

(59) பேசுதலும், ஏற்றலும், போதலும், மலநீக்குதலும், ஆனந்தம் அநுபவித்தலும் ஆகிய இவை இந்தக் கன்மேந்திரியங்களினுடைய தொழில்களாம். அந்தக்கரணமானது

புத்தி, அகங்காரம், சித்தம் என மூன்று விதங்களாக விளங்குகின்றது என்பதாம்.

வாக்கு முதலிய கரணங்களின்றிப் பேசுதல் முதலிய இக்காரியங்கள் சம்பவிக்காவாகையால், கன்மேந்திரியங்களை ஒத்துக்கொள்ளாத தார்க்கிகர் விலக்கப்படுகின்றனர். ஆயின், புருவங்களின் அசைதலும் தொழிலானபடியால் கன்மேந்திரியங்கள் அநேகம் எனில், அது பொருந்தாது. எதனாலெனின், ஞானேந்திரியங்களுள் தோலிந்திரியம்போல் இந்தக் கன்மேந்திரியங்களைச் சரீரமுற்றும் வியாபகமெனக் கொள்ளுதலால் புருவ நெறித்தல் முதலியன கையிந்திரியத்தின் தொழிலாகுமாதலாலென்க. அந்தக்கரணம் என்னும் பிற்பகுதியால் இவ்வித இந்திரியங்களுள் வெளியிந்திரியம் * உள்ளிந்திரியம் என்னும் இவற்றின் பிரிவைக் கூறுகின்றார். (59)

(60) வெளியிந்திரியமானது மறுபடியும் கன்மேந்திரியம், ஞானேந்திரியம் என்னும் வேறுபாட்டால் பத்துவிதமாகச் சித்திக்கிறது. தன்மாத்திரைகளிலிருந்து ஆகாயம், வாயு, அக்கினி, நீர், மண் என்னும் ஐந்து பூதங்கள் தோன்றுகின்றன என்பதாம்

சுலோகத்தின் பிற்பகுதியால் பஞ்ச பூதங்களுக்குக் காரணம் தன்மாத்திரைகள் என்றனர். (60)

(அ—கை) தன்மாத்திரைகள் இவையெனக்கூறுகின்றார்.

(61) சப்தம் முதலியவற்றினுடைய சூக்கும ரூபங்கள் ஐந்து தன்மாத்திரைகளாகக் கூறப்பட்டிருக்கின்றன. அந்தத் தன்மாத்திரைகளிலிருந்து ஒவ்வொரு குணத்தின் மிகுதியால் முன் கூறப்பட்ட ஆகாய முதலிய பஞ்ச பூதங்கள் தோன்றுகின்றன என்பதாம்.

---

* உள்ளிந்திரியமென்றது அந்தக்கரணத்தை.

சப்தம், பரிசம் முதலிய ஐந்தின் பிரகாசமற்ற விசேஷங்களையுடைய சூக்கும ரூபங்கள் ஐந்து தன்மாத்திரைகளெனக் கூறப்படும். இவ்வாறே "தன் தன் குண விசேடங்களைக் காட்டாமல் சூக்குமங்களாய்ப் பூதங்களுக்குக் காரணங்களாக மாத்திரம் இருப்பதால் தன்மாத்திரை யெனப்படும்" என்று பெரியோர்களும் கூறுகின்றனர். ஆதலால், சூக்குமங்களாய்க் காரண ரூபங்களாயிருக்கும் தன்மாத்திரைகளிலிருந்து, நம்மவர்களின் வெளி யிந்திரியங்களால் அறியப்படுங் குணங்களோடு கூடினதுபற்றித் தூலங்களெனப்படும் பஞ்சபூதங்கள் தோன்றினவென்று கூறுகின்றனர். சுலோகத்தின் பிற்பகுதியால் அந்த ஆகாயம் முதலியவை சப்தம் முதலிய ஒவ்வொரு குணங்களை யதிகமாகவுடையன என்கின்றனர். அஃதாவது, ஆகாயம் சப்தமென்னும் ஒரு குணமுடையது. வாயு, சப்தம் பரிசம் என்னும் இருகுணங்களையுடையது. அக்கினி, சப்தம் பரிசம் ரூபம் என்னும் மூன்று குணங்களையுடையது. நீர், சப்தம் பரிசம் ரூபம் இரதம் என்னும் நான்கு குணங்களுடையது. மண், சப்தம பரிசம் ரூபம் இரசம் கந்தம் என்னும் ஐந்து குணங்களையுடையது என்க. இவ்வாறே, சப்தம் முதலிய ஒவ்வொரு குணங்களை அதிகமாகவுடையதும் இடங்கொடுத்தல் முதலிய தொழில்களுடன் கூடியதும் பஞ்சபூதங்களெனப் பெரியோர்கள் கூறுகின்றனர். வைசேஷிகர்களால் சப்தம் தனக்குப் பற்றுக்கோடான பேரி முதலியவற்றின் வேறான ஆகாயத்திற் காணப்படலால், ஆகாயத்தின் விசேஷ குணமாக மாத்திரம் கொள்ளப்படுகிறதே யெனில், அது பொருந்தாது. ஏதனாலெனின், சப்தத்துக்குப் பற்றுக்கோடான ஆகாயத்தில் மாத்திரமன்றி ஏனைய பிருதிவி முதலிய பூதங்களிடத்தும் சப்தம் உணரப்படுகின்றமையா லென்க. இவ்வாறே சப்தம் ஆகாயத்தில் மட்டும்தான் இருக்குமென்றற்கு வைசேஷிகராற் கூறப்பட்ட ஏதுவானது பிரத்தியக்ஷம், ஆகமம் என்னும் இருபிரமாணங்களோடு விரோதமாயிருத்தல்

பற்றிப் பாதிதம்‡ என்னும் ஏதுப்போலியாகுமென்று பெரியோர்களும் கூறுகின்றனர். இந்தச் சப்தம் ஆகாயத்தில் எதிரொலியாயும், வாயுவில் சகசகவென்றும், அக்கினியில் தமதமவென்றும் நீரில் சலசலவென்றும், மண்ணில் கடகட வென்றும் உணரப்படுகின்றது. இவ்வாறே மிருகேந்திரத்திலும் "ஐந்து பூதங்களுள் சப்தம் ஆகாய முதலிய வைந்திலும் பரிசம் வாயு முதலிய நான்கிலும், ரூபம் அக்கினி முதலிய மூன்றிலும், இரதம் ஜலம் முதலிய விரண்டிலும், கந்தம் பிருதிவி ஒன்றிலும் விளங்குமெனவும், அவற்றுள் வாயுவிலும், பிருதிவியிலும் வெப்பமும் தட்பமுமில்லாத பரிசம்; ஜலத்தில் தட்பப்பரிசம் அக்கினியில் வெப்பப்பரிசம்; எனவும், ஜலத்தில் வெண்மைரூபம்; அக்கினியில் பிரகாசமான வெண்மை ரூபம் பிருதிவியில் வெண்மை, நீலம், மஞ்சள், இரத்தம், பச்சை, பொன்மை, சித்திரவர்ணம் என்னும் ஏழு ரூபங்கள் எனவும்; ஜலத்தில் மதுரரசம், பிருதிவியில் தித்திப்பு, புளிப்பு கைப்பு, உறைப்பு, துவர்ப்பு முதலியவை எனவும், பிருதிவியில் நல்ல வாசனை தீயவாசனை யென்னும் இரண்டுவிதமான வாசனை யெனவும் வித்துவான்களால் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன எனக் கூறப்பட்டிருத்தல் காண்க. (61)

---

‡ பாதிதமாவது, தன்னாற் சாதிக்கப்படும் பொருளினது அபாவம் மற்றோரளவையாற் துணியப்படுவது. [உ-ம்] நெருப்பு சூடில்லது; திரவியமாகலின். இங்கே சூடின்மை சாதிக்கப்பட்டபொருள். சூடின்மையின் அபாவமாகிய சூடுண்மை துவக்கிந்திரியக் காட்சியால் அறியப்படுகின்றது. இவ்வாறே சப்தம் ஆகாயத்தில் மாத்திரமிருக்கும்; பற்றுக்கோடான பேரி முதலியவற்றின வேறான ஆகாயத்திற் காணப்படுதலாலென்பர். இங்கே ஆகாயத்தில் மாத்திரமிருக்குமென்பது சாத்தியம். இதற்கு மறுதலையாக ஏனைய பூதங்களினுங் காணப்படுதலின் பாதிதமாயிற்று. எனவே, சப்தம் ஆகாயத்தில் விசேஷ குணமாகவும் ஏனையவற்றில் சாமானிய குணமாகவும் பரிசம் வாயுவில் விசேஷ குணமாகவும் ஏனையவற்றில் சாமானியமாகவும் இவ்வாறே பிறவும் விளங்குமென்பது கண்டுகொள்க.

(அ—கை) பின்னர் இப்பூதங்களின் வியாபாரத்தைக் கூறுகின்றார்.

(62) ஆகாயம் முதலிய பூதங்களுக்கு முறையே இடங்கொடுத்தலும், வேறு வேறான பொருள்களைத் திரட்டுதலும பாகஞ் செய்தலும், பொடி முதலியவற்றைத் திரட்டிக் கட்டிப் படுத்தலும், பாரங்களைத் தரித்தலும் தொழில்கள் என்பதாம்.

ஆகாயத்திற்கு இடங்கொடுப்பதும், வாயுவுக்கு பொருள்களைச் சேர்ப்பதும், அக்கினிக்குப் பாகஞ்செய்வதும், ஜலத்துக்குக் கட்டிப்படுத்துவதும், பூமிக்குத் தரிப்பதும் தொழில்கள் என்க. இவ்விஷயத்தில் இடைவெளியைக் காட்டிலும் ஆகாயம் வேறு என்பதும், அது அநித்தமென்பதும், மிருகேந்திர விருத்திதீபிகையில் நாம் விரிவாய்க்கூறியிருக்கின்றோமாதலால் அவ்விடத்துக் கண்டுகொள்க. (62)

(அ—கை) தன்மாத்திரை பூதம் என்னும் இப்பத்தினிடத்தும் காரியத்தன்மையும், இந்திரியங்களுக்கு ஆதாரமாயிருக்குந் தன்மையும் உண்டென்று கூறுகின்றார்.

(63) இந்தப் பத்துவிதமான பூதம், தன்மாத்திரை என்பன, யாதொரு காரணத்தால் காரியமாயிருக்கின்றனவோ, அதனால் இந்திரியங்களோடு சேர்ந்து தொழிற் படுகின்றன. இந்திரியங்களுக்குச் சாமர்த்தியமின்மையால் (இந்தப் பத்துக்) காரியங்களை ஆதாரமாகக் கொண்டு தொழிற் செய்கின்றன என்பதாம்.

தன் மாத்திரையாயும், பூதரூபமாயுமுள்ள காரியரூபமான தத்துவம் பத்தும் இந்திரியங்களோடு சேர்ந்து தொழிற்செய்கின்றன. அந்த இந்திரியங்களும் தானே தொழிற் செய்யும் சாமர்த்தியம் இல்லாமையினால் (இந்தப் பத்துக்) காரியங்களை நிலைக்களமாகக்கொண்டு தொழிற் செய்கின்றன. இவ்வாறே தத்துவ சங்கிரஹத்திலும் "பத்துவிதமான இந்தக்காரிய

மானது இந்திரியங்களோடு சேர்ந்து தொழிற்படுகிறது. இந்திரியங்களோ வெனில் சாமர்த்திய மிலலாமையால் இப்பத்துக்காரியங்களை நிலைக்களமாகக் கொண்டே தொழிற் படுகின்றன." என்று கூறப்பட்டிருத்தல் காண்க. வாதி, பிரதிவாதிகளால் ஏன்று கொள்ளப்பட்ட பூதங்களே இந்திரியங்களுக்கு ஆதாரமாகச் சித்திக்கட்டும். இடையே, ஐந்து தன் மாத்திரைகளால் பயனில்லை; எனின், அது பொருந்தாது. எவ்வாறெனில், அப்பத்தும் இந்திரியங்களுக்குத் தூலமாகவும், சூக்குமமாகவும் ஆதாரங்களா யிருக்கின்றன வென்று நூல்களிற் சொல்லப்படுகின்றன. மிருகேந்திரத்திலும், "கடம் போல் தன்மாத்திரைகளும், அக்கடத்தின் மேலுண்டான பூச்சுப்போல் மகாபூதங்களும்" எனக்கூறப்பட்டிருக்கின்றது. (63)

(அ—கை) இவ்வாறு தத்துவங்களின் இலக்கணத்தைக் கூறிவிட்டு மேல் எந்தத் தத்துவங்களுக்கு எவற்றினிடத்து எவ்வாறு அந்நுவயம் என்பதைப்பற்றிக் கூறுகின்றார்.

(64) முதலாவதான ஐந்து தத்துவங்களுக்கும் சித்துக்கு உபகரிக்குந் தன்மை யுண்மையால் சித்தினோடு அந்நுவயம். ஏனைய மாயை முதலான ஏழு தத்துவங்களுக்கோவெனில், இரண்டு விதமாக அந்நுவயமானது சிவ சாஸ்திரமான சிவாகமங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றன என்பதாம்.

இது பசு இது பசு வென்னும் தொடர்ந்த ஞானத்திற்குக் காரணமாயுள்ளது அந்நுவயம் எனப்படும். பசுவினுடைய உருவத்திலும் வேறான பசுத்தன்மைச் சாதியை சைவ சாஸ்திரமான சிவாகமங்களில் ஒப்புக் கொள்ளாவிடினும், எவ்விதமேனும் சமான மாத்திரத்தில் அந்நுவயம் கூறப்படும். ஆதலால், முதலாவதான சுத்த தத்துவம் ஐந்தும் சிவத்தினுடைய சர்வஞ்ஞத்துவம், சர்வகர்த்திருத்துவம் என்னும் இவற்றின் பிரகாசத்திற்குக்காரணமாய் இருத்தல்பற்றி உயிருக்கு உபகரித்தலால் சிவத்தைப்போல் சுத்தங்களாம். அவற்றைச் சேதனமெனக் கொள்ளுதல்கூடாது. அவை அசேதன மென்று

மேலே சாதிக்கப்பட்டிருத்தல் காண்க. ஏனைய அசுத்த தத்துவங்களான மாயைமுதல் புருடதத்துவம் வரையுள்ள ஏழுதத்துவங்களும், உயிரின் ஏகதேசத் தன்மையுடைய அறிவிற்குக் காரணமாய் நிற்பதுபற்றி உபிநக்குபகரிப்பதாலும், சூக்கும தேகத்தின் வழியாய்க் குண சம்பந்தத்தால் சுகம் துக்கம் மோகம் என்னும் இவற்றை புசிப்பண்ணுதலாலும், இரண்டு விதமாய்ச் சித்தினுடனும் அசித்தினுடனும் சமானமாயிருத்தலால் சித்தசித்து எனக் கொள்ளப்படும் என்க. (64)

(65) அவ்வியத்தம் முதலிய எல்லாத் தத்துவங்களுக்கும் குண சம்பந்தத்தால் சுக துக்க மோக ரூபமாயிருத்தல் பற்றி (அசுத்தத்தில்) அன்னுவயம். இறுதியிலுள்ள தன்மாத்திரை ஐந்து, பூதம் ஐந்து ஆகிய பத்தில் பின்னர்ச் சொல்லப்படுவது விசேடமாகும் என்பதாம்.

பிரகிருதி தத்துவம் முதல் பிருதிவி தத்துவம் வரையுள்ள தத்துவங்களுக்குக் குண சம்பந்தத்தால் சுக, துக்க, மோக ரூபமிருத்தல் பற்றி அவை அசுத்தத்தோடு ஒத்தலால் அசுத்தமென்க. (65)

(அ—கை) பூதங்களிடத்தும் தன் மாத்திரைகளிடத்தும் உள்ள விசேடம் இதுவென்று கூறுகின்றார்.

(66) சப்தம் முதலிய குணங்களின் ஒற்றுமையாயிருத்தலினும், காரியமென்று சொல்லப்படுவதில் ஒற்றுமையாயிருத்தலினும், பூதங்களுக்குந் தன்மாத்திரைகளுக்கும் அன்னுவயமானது அறியத்தக்கது. சில தத்துவங்களுக்கு அந்தாங்கிபாவமாக ஏற்படும் விசேஷம் சித்திக்கின்றது என்பதாம்.

தன்மாத்திரைகளுக்கும் பூதங்களுக்கும் சப்தம் முதலிய குணங்கள் ஒற்றுமையாயிருத்தல் பற்றியும், தன்மாத்திரைகளும் பூதங்களுங் காரியமென்று சொல்லப்படுவதில் ஒற்றுமையாயிருத்தல்பற்றியும் ஆகிய இரண்டு வகையில் அன்னுவயம்.

இவ்வாறு கூறப்பட்ட எல்லாத் தத்துவங்களுள்ளே விந்து மாயை முதலிய சில தத்துவங்கள் காரணமாயிருத்தல் பற்றி அங்கியாகவும், சத்தி முதலிய தத்துவங்கள் காரியமாயிருத்தல் பற்றி அங்கமாகவும் இருக்கின்ற விசேஷம் உண்டென்று சுலோகத்தின் பிற்பகுதியாற் கூறினர். (66)

(அ—கை) பின்னர் தத்துவங்களின் இலக்கணத்தை முடித்துக் காட்டுகின்றார்.

(67) எல்லாத் தத்துவங்களுக்கும் உற்பத்திக்கிரமமாக இருப்புக் கூறப்பட்டது. பரிணமிப்பதால் அங்ஙனம் பரிணமிக்குந் தத்துவங்கள் மாறுதலாக அசுத்தமாயையில் ஒடுங்குகின்றன என்பதாம்.

பிருதிவி முதலிய தத்துவக் கூட்டங்கள் தன்தன் காரணங்களில்முறையே ஒடுங்கி முடிவில்மாயையிலொடுங்குகின்றன. (67)

(68) மாயைக்கு மேற்பட்ட கலையினால்* விருத்தியடைந்த சுத்தமான அத்துவாவானது மகாமாயையில் ஒடுங்குகின்றது. அந்த மகாமாயையும் சிவன் அதிட்டானமாயிருக்கக் காரணரூபமான தான் மாத்திரமாயிருக்கின்றது என்பதாம்.

சுத்த வித்தை முதலியவற்றிற்கோவெனின், மகாமாயையென்னும் சத்தியில் ஒடுக்கம். இந்த ஒடுக்கத்தின் முறை நம்மாலே வேறு நூலில் விரிவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது. அஃதாவது கந்தத்தில் பூமியும், இரதத்தில் ஜலமும், ரூபத்தில் அக்கினியும், பரிசத்தில் வாயுவும், சப்தத்தில் ஆகாயமும், தாமதாகங்காரத்திற் றன்மாத்திரைகளும், இராசத அகங்காரத்தில் கன்மேந்திரியங்களும், சாத்துவிக அகங்காரத்தில் ஞானேந்திரியங்களோடு மனதும், புத்தியில் மூவகையான அகங்காரங்களும், குணங்களிற் புத்தியும், குண சமூகம் அவ்வியத்தமென்னும் பிரகிருதி மாயையினும் ஒடுங்குகின்றன. அராகம் வித்தை என்னும் இவை கலையினும், புருட தத்து

* கலை:—நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை.

வம் காலம் நியதி கலை என்னும் இவை மாயையிலும், அம் மாயை வித்தியேசுவரரிடத்திலும், வித்தியேசுவரர் சதாசிவரிடத்திலும், சதாசிவர் சத்தியினிடத்திலும், சத்தி சிவனிடத்திலும், சிவதத்துவம் விந்துவினிடத்திலும் ஒடுங்குகின்றன என்பதாம்.

அவ்விடத்தில் சிவதத்துவம் என்பது சாந்தி கலையின் மத்தகத்திலிருக்கும் சாந்தியதீத புவனத்தைக் குறிக்கும். மகாமாயையும் என்னும் உம்மையால், மலத்தினால் மறைக்கப்பட்ட உயிர்களினிடத்துள்ள அசுத்தமாயையும், சிவனதிட்டித்து நிற்கக் காரியரூபமான பிரிப்பின்றிக் காரணரூபமாய் நிற்கின்றது என்றுகொள்க. சிவனிடத்தில் பிரிப்பின்றி நித்தியமாயுள்ள கூட்டத்தை யடைகின்றதென்று சொல்வோமெனில், அது பொருந்தாது. எதனாலெனின்; அந்த மாலைகட்குச் சிவனுடன் பிரிக்க முடியாத சம்பந்தத்தைக் கொண்டால், பரிணாம முதலிய குற்றங்கள் சிவனுக்கு வருமாதலாலென்க. இந்த விஷயமானது மிருகேந்திரத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது. அஃதாவது, "சகலாவஸ்தையைப்போலக் கேவலாவஸ்தையிலும் மலபரிபாகத்திற்குத் தக்கபடி அறிவிக்க வேண்டியவர்களுக்கு அறிவித்தும், மறைப்புச் சத்திபாற்றடுக்க வேண்டியவரைத் தடுத்தும், கர்மிகளின் கர்மங்களைப் பக்குவமாகச் செய்தும், மாயா சத்திகளைத் தோற்றுதற்குரியதாய்ச் செய்தும், எல்லாவுயிர் வருக்கங்களையும் முறையே பார்த்துக்கொண்டும் இருக்கின்றார்" என்றும், "சம்சாரத்தினால் துன்பமடைந்த சம்சாரிகளுக்கு இளைப்பு நீக்கத்தின் பொருட்டுச் சகலவுயிர்களுக்கும் அநுக்கிரக கர்த்தாவான பரமசிவன் போகசாதனமான தநுகரணாதிகளை யொடுக்கி ஆத்மாக்களுடன்கூட மாயையி லொடுங்கச்செய்து அந்த மாயையினையும் ஆசிரயித்துக்கொண்டு இருக்கின்றார்" என்றும் கூறப்பட்டிருத்தல் காண்க. (68)

(69) மகாப்பிரளயத்தில் மாயை, ஆன்மா, சிவம் என்

னும் மூன்றும் எஞ்சி நிற்கின்றன. திரும்பவும் அவை முன் போலச் சிருட்டியிற் றொழிற்படுகின்றன என்பதாம்.

மூன்றுலகத்தை முடிவாகவுடையதாயும், குணதத்துவத்தை முடிவாகவுடையதாயும் உள்ள மத்திமப்பிரளயம் ஒன்றிருக்கின்றமையால், இங்கே கூறப்பட்ட பிரளயம் மகாப்பிரளயம் என்றறிந்து கொள்க. அஃதாவது, எல்லாப் பொருள்களினுடைய ஒடுக்கமாகுமென்பதாம். இப்பிரளயத்தில் வித்தியேசுவரர்களும் முத்தியடைகின்றனர். மாயை, ஆன்மா, சிவம் என்னும் மூன்று பொருள்கள் மாத்திரம் எஞ்சுகின்றன. மூலத்தில் மாயையென்று பொதுவாகச் சொன்னமையால் அசுத்தமாயை, சுத்தமாயை யென்னும் முதற்காரணங்கள் இரண்டுங் கொள்ளப்படும். ஆன்மாவென்று சாதி பொருமையாற் கூறினமையின், மலசம்பந்தமுடைய எல்லா ஆன்மாக்களுங் கொள்ளப்படும். சிவ என்னுஞ் சொல்லால் சமவாய சம்பந்தத்திலிருப்பதாய்ப்பிரிக்க முடியாதகாயுள்ள சிற்சத்தியோடு கூடிய சிவனும் முத்தான்மாக்களும் கொள்ளப்படுகின்றனர். திரும்பவும் சங்காரத்தின் முடிவில் அந்தச் சிவம் முதலிய பொருள்கள் சிருட்டியின் பொருட்டு முன்னர்க் கூறப்பட்டவாறுபோல் தொழிற்படுகின்றன. (69)

(அ—கை) பின்னர், இந்த மகாப்பிரளயத்திற்குப் பலன் இதுவெனக் கூறுகின்றார்.

(70–71) சம்சாரத்தில் துன்பமடைந்த அநேகமான இந்த உயிர்களுடைய இளைப்பு நீக்கத்தின் பொருட்டும், கன்மத்தின் பரிபாகத்தின் பொருட்டும், பரமசிவன், கிருபையினால் மகாப்பிரளயத்தைச் செய்கின்றனர். உயிர்களிடத்துவைத்த கருணையால் திரும்பவும் இவ்வுலகில் சிருட்டியைச்செய்து அந்த உயிர்களுடைய கன்மங்களை முதிர்வித்துப் பக்குவப்படுத்துகின்றனர் என்பதாம்.

எல்லா ஆன்மாக்களின் இளைப்பு நீக்கத்தின் பொருட்டும், கன்மங்களின் பரிபாகங்களின் பொருட்டும் என்ற உபலட்சணத்தால், இடைவிடாமல் அளவில்லாத சரீரங்களை யுண்டுபண்ணி

னமையால் சத்தி குறைந்திருக்கின்ற சுத்தமாயை, அசுத்த மாயைகளுக்குச் சத்தியை யுண்டுபண்ணுவதற்காகவும் சங்காரத்தைச் செய்கின்றாரென்பது பொருள். உயிர்களிடத்து வைத்த கருணையால் திரும்பவும் சிருட்டியைச் செய்கின்றார் என்றமையால், சிருட்டியும் முத்தியின் பொருட்டேயாம் என்பது கருத்து. ஆன்மாக்களின் கன்மங்களை முதிர்வித்துப் பாகஞ் செய்தலாவது, முன் சம்பாதிக்கப்பட்ட கன்மங்களைப் பக்குவ முறையில் அந்தக் கன்மத்தின் பொருட்டு அநுபவித்தற்கு யோக்கியமாகக் கூடும்படி செய்கின்றார் என்பதாம். (70-71)

(72) (பின்னர் முறையே மலபரிபாக முண்டானவுடன்) போகத்தால் கன்மத்தை நாசஞ்செய்து தீக்ஷையென்னும் பெயருடைய தன் சத்தியால் கருணைக்கடலா யிருக்கும் பரமசிவன் எல்லா வுயிர்களையும் (பாசத்தினின்றும்) விடுவிக்கின்றார் என்பதாம்.

தீக்ஷை யென்னுந் தனது சத்தியினால் ஒரே காலத்தில் கன்மத்தின் பக்குவத்தால் ஆணவமலத்திற்குப் பக்குவமுண்டானவுடன், ஆசிரியனிடத்து நிகழும் வியாபாரத்தில் விளங்கித் தோன்றும் தன் சத்தியினாலாவது அல்லது கேவலம் (தன்னுடைய) சத்தியினாலாவது ஒரே காலத்தில் அநேக போகங்களை யநுபவித்தலென்னும் கன்ம நாசத்தைச் செய்து மலங்களினின்றும் உயிர்களை விடுவிக்கின்றார். அவ்வாறே சிரணகபத்திலும், "அநேக பிறப்புக்களில் உயிர்களாற் சம்பாதிக்கப்பட்ட கன்மமானது, வறுக்கப்பட்ட வித்துப்போல் எதனால் றடை செய்யப்பட்டதோ" என்று கூறப்பட்டிருத்தல் காண்க. அதுபற்றியே, உடனே முத்திதரக்கூடிய சத்தியோ நிர்வாண தீக்ஷை கூடும்போது, நிகழ்ந்து கொண்டிருக்கும் சரீரத்திற்குக் காரணமாயும், பயனைத் தருவதாயுமுள்ள பிராரத்த கன்மத்திற்கும் நாசம் என்பது சித்தித்தது. தீக்ஷையினுடைய நைட்டிக முதலிய பேதம் மதங்கத்திலிருந்து அறிந்துகொள்க. (72)

(அ—கை) அவ்வாறாயின், சரீர முதலியவற்றைத் தத்துவங்களாக வைத்து ஏன் எண்ணவில்லை? என்றதற்குச் சமாதானங் கூறுகிறார்.

(73) எல்லா வுயிர்களுக்கும் போகத்தைக் கொடுத்துக் கொண்டு பிரளயகாலம் வரை யாதொன்றிருக்கின்றதோ அது தத்துவமென்று கூறப்பட்டது. அந்தக்காரணத்தால் சரீரம், கட முதலியன தத்துவமாக ஆவதில்லை என்பதாம்.

நேராகவோ, தொடர்ச்சியாகவோ யாதொன்றுஉயிர்களுக்குப் போகத்தைக் கொடுத்துக்கொண்டு பிரளயகாலம் வரையிருக்கின்றதோ அது தத்துவம் எனக்கூறப்படும். அதுபற்றியே, ஒடுக்குமுறையில் நம்மால் கீழ்க்கண்டவாறு வேறிடத்தில் தத்துவங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. எவ்வாறெனில்; "பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், கந்தம், இரதம், ரூபம், பரிசம், சப்தங்களையும், உபத்தம், ஆசனம், பாதம், கை, வாக்கு, மூக்கு, நாக்கு, கண், தோல், காது மனம் இவற்றையும், கர்வம், புத்தி, குணங்கள், அராகம், புருடன், வித்தை, நியதி, கலை, காலம், அசுத்தமாயை, சுத்தவித்தை, ஈஸ்வரன், சதாசிவன், சத்தி, சிவதத்துவம் இவற்றையுந் துதிக்கின்றேன்" என்பதாம். இவ்விடத்தில் அராகம் புருடன் என்று முறை மாறியிருத்தல்பற்றிப் புருடனுக்கு தத்துவத் தன்மையில்லை யென்பது அறிவிக்கப்பட்டது. செய்யப்படாததைச் செய்தலும், செய்ததை விருத்தி செய்தலும் புத்தியினுடைய தர்மமாகும். (73)

(74) தத்துவத்திற்குக் காரணமாகவும், பூரணஞ்செய்வதாகவும் யாதொரு தத்துவமிருக்கின்றதோ அதிலிருந்து தத்துவங்கள் தோன்றுகின்றன. எல்லாத் தத்துவங்களுக்கும் இவ்விதமான வரையறை சொல்லப்பட்டது என்பதாம். (74)

(அ—கை) எவரால் இந்நூல் கூறப்பட்ட தென்பதைப் பற்றிக் கூறுகின்றார்.

(75) தத்துவங்களினுடைய எல்லாவிதமான உண்மையும் யாதொரு கிரந்தத்தால் எளிதாகக் கூறப்பட்டதோ, அத் தகைய தத்துவப் பிரகாசம் என்னும் கிரந்தத்தைப் பிரசித்த ரான போஜ தேவ ராஜா செய்தனர் என்பதாம்.

தத்துவப் பிரகாசம் என்பதற்குத் தத்துவங்களின் பிரகா சம் அல்லது தத்துவங்களின் ஞானம் என்பது பொருள். தத்துவங்களின் ஞானம் என்பதற்குத் தத்துவங்களின் உண் மையான சொரூபத்தை அறிவிப்பது என்பது பொருள். (75)

(அ—கை) மேற்கூறியதனையே விரித்துக் கூறுகின்றார்.

(76) யாதொரு போஜ தேவருடைய மனதில் எல்லாத் தத்துவ சமூகமும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் பிரகாசித்த தோ அத்தகைய போஜதேவர் சிவாகமங்களின் சாரமான ஒப் பற்ற தத்துவப் பிரகாசம் என்னும் நூலைச் செய்தனர் என்ப தாம். (76)

நூல் முற்றுப்பெற்றது.



யாதொருவர் சிவாகமங்களுக்குப் பெரிய வியாக்கியானஞ் செய்யுந்தன்மையை யடைந்து, சாமானியமான பதங்களுக்கும் விசேடமான பொருளை நிர்ணயித்துத் தருவதில் சமர்த்தராயும் வித்துவானாயு மிருக்கிறாரோ, அத்தகைய அகோர சிவாசா ரியர், சிவபத்தர்களால் பிரார்த்திக்கப்பட்டு அச்சிவபத்தர்க ளிடத்து வைத்த அன்பின் பெருக்கால் தத்துவப் பிரகாசம் என்னும் நூலுக்குச் சுருக்கமாய் உரை செய்தனர்.

இவ்வாறு, இரண்டு லக்ஷம் கிரந்தத்திற்குக் கர்த்தாவான அகோர சிவாசாரியரா லியற்றப்பெற்ற தத்துவப் பிரகாச விருத்தியானது முற்றுப்பெற்றது.

சிவபிரான் திருவடி வாழ்க.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சத்தியோஜோதி சிவாசாரியர் இயற்றிய

# தத்துவ சங்கிரக மூலமும்,

இதற்கு

அகோர சிவாசாரிய ரியற்றிய விருத்தி உரையும்.

(தமிழ்மொழி பெயர்ப்பு.)

## உரைமங்கலம்.

எந்தப் பரமசிவனுடைய சிவத்தன்மை, நின்மலமாயும், உலகத்துக்கு வேறாயும் இருக்கின்றதோ, அத்தன்மையினை யுடைய, எவற்றையும் தாத்தக்க சிதம்பர சபாபதியான பரமே சுவரனை எப்பொழுதும் நான் நமஸ்கரிக்கின்றேன். (1)

வியாகரண சாத்திரம், தர்க்க சாத்திரங்களை அறிந்தவரா யும், என்னை ஒத்தவர்களால் அறியமுடியாத அறிவின் மகி மையை உடையவராயும் விளங்கும் சத்தியோ ஜோதி யென் னும் குரு சிரேஷ்டர், சாக்ஷாத் பரமசிவன்போல் விளங்கு கின்றார். (2)

தத்துவ சங்கிரகம் என்னும் சந்திரனுடைய பிரகாசத் துக்கு, சரற்கால இரவு போல நாராயண கண்டரால் பெரிய உரை ஒன்று செய்யப் பட்டுள்ளது. (3)

ஆயினும், விரிவான அப்பெரிய உரையில் உள்ள பொருளை அறியமுடியாது வருந்தும் சிற்றறிவுடையவரின் நன்மையின் பொருட்டு, இந்தச் சிற்றுரை என்னால் செய்யப்படுகின்றது (4)

## நூல்.

(அவதாரிகை) பூசிக்கத் தகுந்தவரான ஆசிரியர், எடுத்துக் கொண்ட நூல் இடையூறின்றி முடிதற் பொருட்டு, முன்னர்ப் பரமசிவனை நமஸ்காரஞ்செய்து பின்னர் தன்னாற் செய்யப்படும் பிரகரணம் இதுவென்று கூறுகின்றார்.

(1) சித்து ரூபமான ஆன்மாக்களையும், சடரூபங்களான விந்து, மாயைகளையும், அவற்றின் காரியங்களையும், அதிட்டிக்கின்றவராயும், உற்பத்தியில்லாதவராயும், அனைத்தையும் அறிபவராயும், சர்வஞ்ஞத் தன்மை, சருவகருத்திருத்தன்மை என்னும் சுகத்தைத் தருபவராயும் உள்ள சங்கரனை நமஸ்கரித்து சிற்றறிவுடையாருக்குப் போறி வுண்டாதற் பொருட்டுச் சுருக்கமாகத் தத்துவங்களைச் சொல்லுகின்றேன் என்பதாம்

சித்துரூபமான பெத்தான்மாக்களையும், சடரூபமான சுத்தமாயை, அசுத்தமாயைகளையும், அவற்றின் காரியங்களையும், அதிட்டிக்கிறவ ரென்றதற்கு, நேராகவும், பரம்பரையாகவும், சுத்தபுவனம், அசுத்த புவனங்களுக்கு, முதற்காரணமான சுத்த மாயை, அசுத்த மாயைகளால் ஆன்மாக்களுக்கு அவரவர் கன்மத்துக்குத் தகுந்தவாறு, சுத்தபோகம், அசுத்த போகங்களைக் கொடுக்கின்றவர் என்பது கருத்து. ஆதலால், உலகம் அவயவப் பகுப்புடன் கூடியிருத்தல்பற்றி அவசியம் காரியமாய் இருத்தல் வேண்டும். வேண்டவே, அக்காரியத்திற்குக் கருத்தாவாய் ஈசுவரன் ஒருவன் உண்டென்பது சித்தித்தது.

இதனால், பிரதானம், புருஷன், கன்மம் என்னும் இவற்றைக் கடவுளாகக் கூறும் வாதிகள் மேக்கப்பட்டார். எதனாலெனில், பிரகிருதி யென்னும் பிரதானமும், கன்மமும் சடப்பொருளாதலானும், புருஷன் மலத்தோடு கூடியிருத்தலால், சுதந்திரமில்லாதவனாதலானும் என்க.

அந்த ஈசுவரன் நித்தியனாயும், நின்மலனாயும் இருத்தலால்,

உற்பத்தியில்லாதவன். சரீர சம்பந்தரூபமான பிறவியும் இல்லாதவன். இதனால் இவன் நித்தியன் என்பது சித்தித்தது.

உலகத்துக்குக் கருத்தாவான இந்தப்பரமசிவனை அநித்தியனாகவும் உற்பத்தியுள்ளவனாகவும் கொண்டால், சடத் தன்மையும் வரம்பின்றி ஓடல் என்னும் குற்றமும் சம்பவிக்கும். அஃதன்றியும், மலமில்லாமையாலும், எல்லாப் பொருளுக்கும் கருத்தாவாயிருத்தலாலும், எல்லாம் அறிந்தவனாவன். இவ்விடத்தில் ரகசியமான கருத்து இதுவாகும். எதுவெனில், இந்தச்சிவனுடைய அறிவானது தார்க்கிகர்கள் கொள்வதுபோல மனத்தின் சேர்க்கையை விரும்பாது அவனுடைய சுபாவமாகவே உள்ளது என்பதாம்.

ஈசுவரனுடைய சுபாவமான அறிவிற்கும், அறியப்படும் பொருள்கள் செய்யப்படும் பொருள்கள் ரூபமான உபாதி வேறுபாட்டால் அநேகத்தன்மை உபசாரமாகச் சம்பவிக்கிறது. அவ்வாறே வேறு நூல்களிலும், உண்மையில் ஒன்றான சிவனறிவானது, விஷய வேறுபாட்டால் அநேகத் தன்மையை அடைகிறதென்றும், அதுபோலவே, விஷயங்களுடன் அபின்னமாயிருத்தலால் கர்த்தாவாயிருக்கும் தன்மையும் உபசாரமாய்க் கூறப்பட்டிருத்தல் காண்க.

பிறரால் ஏவப்படாத தன்மையும், எவற்றையும் அறிந்து எவற்றிற்கும் கருத்தாவாயிருக்கும் தன்மையுமாகிய தனது சமான ரூபமான சுகத்தை ஆன்மாக்களுக்குத் தருதலால், சங்கரன் * என்னும் நாமம் பூண்டவன் ஈசுவரன். இதனால், இவனுக்கு மோக்ஷத்தைத் தரும் தன்மை கூறப்பட்டது. இந்தச் சுலோகத்தில் சங்கர என்னும் பதமே விசேஷிய பதம்.

இவ்விதமான பரமசிவனை மனம் வாக்குக் காயங்களால் வணங்கி, பிருதிவி முதலிய தத்துவங்களைச் சுருக்கமாகக் கூறுகின்றேன் என்றார். இந்தப் பிரகரணத்திற் கூறப்படும் விஷயம்,

* சம் — சுகம். கரன் — செய்பவன்.

தத்துவங்களின் இலக்கணம் என்பது கருத்து. மதங்கம் முதலிய மூலாகமங்களால் தத்துவங்களின் இலக்கணம் அறியப்படுவதாயிருக்கவும், இந்தப் பிரகரணத்தின் ஆரம்பம் எதற்காக என்று ஆசங்கிப்பார்க்கு, சிற்றறிவுடையவரின் பொருட்டு என்று பிற்பகுதியாற் சமாதானம் கூறுகின்றார்.

மதங்கம் முதலியவற்றிற் கூறப்படும் தத்துவ இலக்கணமானது, மிகவும் விரிவாயிருத்தலால், அவற்றைக்கொண்டு சிற்றறிவுடையவர்கள் தத்துவங்களின் இலக்கணங்களை நிச்சயித்தல் முடியாது ஆதலின், அவர்களுக்கு அவற்றின் நிச்சயம் உண்டாதற் பொருட்டுச் சுருக்கமாக இந்நூல் செய்யப்பட்டதெனக.

இந்நூலின் பிரயோஜனம், முக்கிய புருஷார்த்தமான மோக்ஷமெனபது அறிவிக்கப்பட்டது. எதனாலெனில், தத்துவங்களின் அறிவானது, பரம்பரையாக அபரமோக்ஷம் பரமோக்ஷங்களுக்குச் சாதனமாயிருத்தலா லெனக. ஆதலால், தத்துவ ஞானமென்னும் விஷயத்திற்கும் நூலுக்கும், அறிவிக்கப்படுவது அறிவிப்பது என்னும் சம்பந்தமும், தத்துவஞானத்திற்கும் மோக்ஷத்திற்கும், அடையச் செய்வது அடையப்படுவது என்னும் சம்பந்த விசேஷமும் சித்தித்தமை காண்க.

பகவானையும் சர்வக்ஞனையும் உள்ள உக்கிர சோதி யென்பவர் எவரொருவருக்கு அனுக்கிரகஞ் செய்தாரோ என்ற ஆரம்பத்தால் குரு சம்பிரதாய ரூபமான சம்பந்தத்தையும் பின்னர்க் கூறுகின்றார். அவ்விடத்தில் அனுக்கிரக மென்னும் பதத்திற்கு உபலக்ஷணத்தால் ஸ்ரீகண்ட பரமேசுவரன் முதல் தான் வரை இடைவிடாமல், சாஸ்திர சம்பிரதாயப் பிரகாரம் சித்தாந்தத்தின் பொருள் நிச்சயிக்கப் பட்டிருக்கிற தென்பது கருத்து. (1)

(அ—கை.) இவ்வாறு தத்துவங்களின் வியாக்கியானத்தைச் செய்கிறேனென்று கூறிவிட்டு, இந்த ஆன்மா சிவனை

யடைவதற்கு, ஒடுக்க முறையில் சேர்க்கத் தகுந்தவன் என்னும் சுவாயம்புவாகமத்தால், பிருதிவி முதலிய தத்துவங்களுக்குத் தீட்சையில் ஒடுக்கக் கிரமமாகவே சுத்தி என்று அறிவிப்பாராய் ஒடுக்க முறையாகவே பஞ்ச பூதங்களைக் கூறுகின்றார்.

(2) பூமி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாயம் என்பன பூதங்களாகும். இந்தப் பூதங்களுக்கு, தரித்தலும், சங்கிரகம் செய்தலும், பக்குவம் செய்தலும், வியூகம் செய்தலும், அவகாசம் தருதலும் காரியங்களாகும் என்பதாம்.

பூமி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாயம், இவைகளே பூதங்களாகும். இந்தப் பிருதிவி முதலிய பூதங்கள் தரித்தல் முதலிய காரியங்களால் சித்திக்கின்றன. அக்காரியங்களுள், சங்கிரகமென்பது உண்டையாகச் சேர்த்தல். வியூகம் என்பது அவயவங்களைச் சேர்த்தல். இடம் தருதல் ஆகாசத்தின் காரியம். இடம் தருதல் என்னும் காரியத்தால் ஆகாயம் அவசியம் சித்திப்பதால், ஆகாயம் இல்லையெனக் கூறும் சாருவாகரும், ஆகாயத்தைப் பிரத்தியக்ஷமென்று கூறும் மீமாஞ்சகரும் நீக்கப்பட்டார். இந்த ஆகாயத்தை நையாயிகர் கொள்வது போல் நித்தியமாகக் கொள்ளக் கூடாது. ஏதனுலெனில், இந்த ஆகாயத்தைத் தன்மாத்திரையின் காரியமாய்ப் பின்னர்க் கூறப்போகின்றமையாலென்க. ஏனைய நூல்களிலும் புவனங்களுக்குப் பற்றுக்கோடாக இந்த ஆகாயத்தைக் கூறியிருத்தலால் இதனை அநித்தியமென்றே கொள்ளல்வேண்டும்.

அவயவச் சேர்க்கையென்னும் வாயுவின் காரியத்தைக் கூறினமையால், உபலக்ஷணத்தால் வாயுவினுடைய ஏனைய் காரியங்களும் கொள்ளப்படும். பெரியோர்களும், பரிசித்தல், சப்தித்தல், நிலைத்தல், அசைதல் என்னும் இவற்றைக் குறியாக உடையது வாயுவென்று கூறியிருக்கின்றனர். (2)

(அ—கை) இன்னும் பூதங்களைப்பற்றியே கூறுகின்றா

(3) * கந்தம், இரசம், உருவம், பரிசம், சத்தம் என்னும் இவை பூமியின் குணங்களாகும். ஜல முதலிய ஏனைய நான்கு பூதங்களுக்கும் முன்னர்க் கூறிய குணங்களுள், கந்த முதலாக ஒவ்வொன்று குறைந்து மற்றவை முறையே குணங்களாகுமென்பதாம்.

மிருகேந்திரத்திலும் சப்தம் ஆகாயம் முதல் ஐந்து பூதங்களினும், பரிசம் வாயு முதல நான்கிலும், உருவம் தேயுமுதல் மூன்றிலும், இரசம் ஜலம் முதல் இரண்டிலும், கந்தம் பூமி ஒன்றிலும் என்றறிக; அவற்றுள், வாயுவிலும் பூமியிலும் வெப்பமும் தட்பமுமில்லாத பரிசம். அக்கினியில் வெப்பப் பரிசம். ஜலத்தில் குளிர்ந்த பரிசம்.

ஜலத்தில் விளங்காத வெண்மை உருவம். அக்கினியில் விளங்கிய வெண்மை யுருவம். பூமியில் வெண்மை முதலிய † ஏழும் உருவம்.

ஜலத்தில் மதுர இரசம். பூமியில் தித்திப்பு, புளிப்பு, கார்ப்பு, காழ்ப்பு, கைப்பு, துவர்ப்பு, என்னும் ஆறும் இரசம்.

பூமியில் நறுநாற்றம் தீநாற்றம் என இரண்டுவித நாற்றமுண்டு எனப் பெரியோர்களால் கொள்ளப்பெற் றிருக்கின்றதென்று கூறப்பட்டிருத்தல் காண்க. ஆதலின், சப்தம் தனக்குப் பற்றுக்கோடான பேரி முதலியவற்றிற் காணப்படாமல் ஆகாயத்திற் காணப்படுதல்பற்றி அது ஆகாயத்தின் குணமாக மாத்திரம் இருக்குமென்ற வைசேஷிகர்களின் கூற்றுப் பொருந்தாது. எதனாலெனின், அவர்களாற் கூறப்படும் எது பிரத்தியக்ஷ அளவையாலும் ஆகம அளவையாலும் மறுப்புடையதாகக் காணப்படுதலால், எதுப்போலியாய் அவர்கள் கொள்கை

* இந்தச் சுலோகம் மூலத்தில் வியாக்கியானத்துடன் சேர்ந்து என்னுள் அகப்படவில்லை.

† ஏழு, வெண்மை கருமை பொன்மை செம்மை பசுமை புகைமை சித்திரம் என்பன.

யைச் சாதியாமையாலென்க. அஃதாவது, சத்தம் ஆகாயத்தில் எதிரொலி ரூபமாகவும், வாயுவில் சகசகவென்றும், அக்கினியில் தமதமவென்றும், ஜலத்தில் சலசலவென்றும், பூமியில் கடகடவென்றும், சித்தியத்தில் அறியப்படுவதாகும். அன்றியும் பேரி முதலிய பற்றுக்கோட்டினும் சப்தம் அறியப்படுகின்றது. இவ்விஷயம் நம்மால் மிருகேந்திரவிருத்தி தீபிகையில் விரிவாய்க் கூறப்பட்டிருத்தலால் விரிவை அவ்விடத்திற் காண்க (3)

(அ—ரை) இந்தப் பூதங்கள் நம்போன்றவர்களின் வெளி இந்திரியங்களான கண் முதலியவற்றால் அறியப்படும் உருவ முதலிய குணங்களையுடையதா யிருக்கின்றமையால், கடம் முதலியனபோல இவற்றிற்கும் காரணங்கள் முன்னிருத்தல் வேண்டும். அக்காரணங்களே ஐந்து தன்மாத்திரைகளாகச் சித்தித்தன என்று கூறுகின்றார்.

(4) அந்தப் பூதங்களின் குணங்களுக்குச் சமானமான குணங்களையுடையனவாயும், அப்பூதங்களுக்குக் காரணமாயும் அவற்றையே விருத்திசெய்கிறதாயும், தன்மாத்திரைகளிருக்கின்றன. தன்மாத்திரைகளைவிடப் பூதத்திற்கு விசேஷம் உண்டு. தன்மாத்திரைகள் விசேஷ மற்றன என்பதாம்.

தன்மாத்திரைகளாவன, பூதங்களின் குணங்களுக்குச் சமானமான குணங்களையுடையன. அப்பூதங்களுக்கு முதற் காரணமாயும், அவற்றை விருத்திசெய்வனவாயும் இருக்கின்றன. இருக்கின்றனவென்னும் வினைச்சொல் மூலத்திலில்லை. சேர்த்துக்கொள்ளப்பட்டது ஆவ்வாறே செய்யப்படாததைச் செய்வதும் செய்யப்பட்டதை விருத்தி செய்வதும் முதற் காரணத்தின் தொழிலென்று பெரியோர்களுங் கூறுகின்றமை காண்க. ஆதலால், கந்த முதல் ஐந்து குண ரூபமான கந்த தன்மாத்திரை பூமிக்குக் காரணம். இரச முதல் நான்கு குண ரூபமான இரச தன்மாத்திரை ஜலத்திற்குக் காரணம். இவ்வாறே ஏனையவுங் கண்டுகொள்க. இதனால் இந்தத் தன்

மாத்திரைகளைப் பரமாணு ரூபங்களென்று கூறும் தார்க்கிகர்கள் ஒதுக்கப்பட்டனர். எதனாலெனின்? அந்தப் பரமாணுக்கள் அசேதனமாயும் அநேகமாயும் வடிவுடைப் பொருளாயும் இருத்தலால், கட முதலியனபோலவும் தூளி முதலியனபோலவும் காரியத் தன்மையுடைமையில் பிறழ்ச்சியுடையாது காரியமாகவே இருத்தலாலென்க. அவர்களால் கொள்ளப்படும் பரமாணுக்கள் முதற்காரண மாகாமையினாற்றான் நாம் தன்மாத்திரை வாயிலாக மாயையே முதற் காரணமென்று சொல்லப்போகின்றோம்.†

அவ்வாறாயின் தன்மாத்திரைகளும் பூதங்களும் சமானமான குணமுடையனவா யிருத்தலால், இவ்விரண்டிற்கும் வேற்றுமை யென்னை யென்னும் கேள்விக்கு விடை சுலோகத்தின் பிற்பகுதியால் கூறுகின்றார். எவ்வாறெனின், பூமி முதலிய பூதங்களின் குணங்களான கந்த முதலியன, மேலே கூறப்பட்டவாறு வெண்மை, கருமை, நறுநாற்றம், தீநாற்றம் முதலிய பிரிவுகளுடன் கூடினதாயும், அதுபற்றி வெளிப்பட்டுத் தோன்றுவனவாயும் அறியப்படுகின்றனவோ, அவ்வாறு அப்பூதங்களுக்குக் காரணமான தன்மாத்திரைகளிடத்து அறியப்படுதலில்லை. ஆதலால் சூக்குமமான குணங்களோடு கூடியிருக்கும் சூக்குமமான தன்மாத்திரைகளைக் காட்டிலும், பூதங்களுக்கு அக்குணங்கள் தூலமாயும் வெளிப்படையாயும் காணப்படுதல் விசேஷம் என்றவாறாம். ஆதலினாற்றான் குணங்கள் வெளிப்படாமல் தன்மாத்திரமாகவே யிருத்தல்பற்றித் தன்மாத்திரையென்னும் பெயரும் வந்தது. அவ்வாறே நூல்களிலும் விசேடணத்துடன் கூடாத குணங்களை, தன்மாத்திரை

---

† பூதங்கட்கு முதற்காரணம் பரமாணுக்களென்பது தார்க்கிகர் கொள்கை. தன்மாத்திரை காரணமென்பது சித்தாந்தம். ஆதலால், தன்மாத்திரைகளைப் பரமாணு ரூபமென்றனர் தார்க்கிகர். பரமாணுக்களிடத்துக் காரியத்தன்மை காணப்படலால் முதற்காரணமாதல் பொருந்தாதென மறுக்கப்பட்டது. தன்மாத்திரையும் காரியமாதலால் இடைப்பட்ட காரணமேயன்றி முதற்காரணமாதலில்லை. மேலான முதற்காரணம் மாயையேயாம்.

யென்னும் சொல்லால் வழங்கப்படுகின்றன என்று கூறப்பட்டிருத்தல் காண்க. (4)

(அ—கை) பின்னர் இந்தப் பூதங்களும் தன்மாத்திரைகளும் காரியமென்னும் சொல்லால் சொல்லத் தகுந்தவை யென்றும் இந்திரியங்களுக்கு ஆதாரமென்றும் கூறுகின்றார்.

(5) இந்தப் பத்துக் காரியங்களான பூதங்களும் தன்மாத்திரைகளும் இந்திரியங்களுடன் சேர்ந்து தொழிற்படுகின்றன. இந்திரியங்களோவெனில், வியாபகமாயில்லாமையால், இப்பத்துக் காரியங்களை யாதாரமாகக் கொண்டு தொழிற்படுகின்றன என்பதாம்

இந்தப் பூதங்களும் தன்மாத்திரைகளும் தூலரூபமாயும் சூக்கும ரூபமாயும் இந்திரியங்களுக்கு ஆதாரங்களாயிருக்கின்றன என்று மதங்கத்திற் கூறப்பட்டிருக்கின்றது. தன் மாத்திரைகள் கடத்தைப்போலவும், பூதங்கள் அதன்மேலே பூசப்படும் பூச்சுப்போலவும் ஆகுமென்றும் மதங்கத்திற் கூறப்பட்டிருத்தல் காண்க. (5)

(அ—கை.) பின்னர்க் கன்மேந்திரியங்கள் உண்டென்று கூறுகின்றார்.

6. சொல்லுதல், வாங்குதல், மலம் நீக்குதல், இன்பமனுபவித்தல், செல்லுதல், ஆகிய இந்தத் தொழில்களில் கன்மேந்திரியங்கள் சாதனங்களாகின்றன. செவி, தோல், கண், நா, நாசி, என்னுமிவைகள் ஞானேந்திரியங்களாகும் என்பதாம்.

கன்மேந்திரியங்கள் வாய், கை, ஆசனம், குறி, கால் என்னும் பெயருடையன. வாய் முதலிய கன்மேந்திரியங்கள் சொல்லுதல் முதலிய காரியங்களில் முறையே சாதனங்களாகச் சித்தித்தனவென்பது கருத்து. ஆதலால், கன்மேந்திரியங்களின் இன்மையைக்கூறும் தார்க்கிகர் ஒதுக்கப்பட்டனர். எதனாலெனின், காரணமின்றிக் காரியமுண்டாகா தாதலினென்க.

கொடிபோன்ற புருவங்களின் அசைவுகளும் தொழிலாகை யால் அத்தொழில்களை நிகழ்த்தும் கருவிகளும் கன்மேந்திரிய மாதல்பற்றிக் கன்மேந்திரியங்கள் அனந்தமெனக் கொள்வோ மெனில், அது பொருந்தாது. எதனாலெனின், தோலிந்திரி யம்போலக் கன்மேந்திரியங்களும் உடல் முழுதும் நிறைந்தி ருப்பன வாதலின், புருவம் அசைதல் முதலியன, கை முதலிய கன்மேந்திரியங்களின் தொழிலேயாகு மாதலாலென்க. அந் தந்த இந்திரிய சத்திகள், அந்தந்தத் தானங்களில் விசேஷமாய் அதிட்டித்துத் தொழிலைச் செய்தலால், அந்தந்தத் தானங்க ளின் பெயர்கள் இந்திரியங்களுக்காயின. ஆதலால் ஒருவித மான விரோதமுமில்லை என்க.

சுலோகத்தின் பிற்பகுதியால் ஞானேந்திரியங்கள் இவை யென்று கூறுகின்றார். மூலத்தில் கூறப்பட்ட பரிசனம் என் னும் பதமும், தரிசனம் என்னும் பதமும், பரிசத்தையும், பார் வையையும் குறிக்குமேனும், எதனால் பரிசிக்கப்படுகிறதோ எதனால் பார்க்கப்படுகிறதோ என்னும் கரணார்த்தங்கொண்டு தோலிந்திரியத்தையும் கண்ணிந்திரியத்தையும் குறிக்கின்றன வென்றறிந்து கொள்க. (6)

(அ—கை.) எவ்வகைத் தொழில்களால் இந்த ஞானேந் திரியங்கள் சித்தித்தன வென்பதைப்பற்றிக் கூறுகின்றார்.

(7—8) இந்த ஞானேந்திரியங்களுக்குத் தனித்தனியே சத்தம் முதலிய விஷயங்களைக் கொள்ளுதல் தொழில். இவ் வாறு வெளியிந்திரியங்கள் பத்துவிதங்களாக அறியத் தகுந் தன. இவற்றைக் காட்டிலும் வேறாயுள்ள அந்தக்கரண மென் னும் உட்கருவியானது சித்தம், அகங்காரம், புத்தி, என்னும் மூன்றுவிதமாய்க் கூறத் தகுந்ததாயும், முறையே சங்கற்ப மென்னும் இச்சை, பிரயத்தன மென்னும் ஸம்ரம்பம், போதம், என்னுமிவற்றைத் தொழிலாகவுடையதாயு மிருக்கின்றது. அந்தக்கரணம், வெளியிந்திரியங்கள், பஞ்ச பூதங்கள், பஞ்ச தன்மாத்திரைகள் என்னுமிவை அகங்காரத்தினின்று தோன்று கின்றன என்பதாம்.

இந்தக்காது முதலிய ஞானேந்திரியங்களுக்கு முறையே சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தமென்னும் ஐந்து விஷயங்களின் அறிவு தனித்தனியே தொழிலாமெனக. இந்த ஐந்து ஞானேந்திரியங்களேயின்றிச் சத்தம் முதலிய விஷயங்களினறிவு நிகழ்தல் சம்பவியாதாகையால் என்னும் அருத்தாபத்திப் பிரமாணத்தால், இவ்வைந்தும் சித்திக்தன வென்பது கருத்து. இவ்வாறு வெளியிந்திரியம் பத்துவிதமாய் அறியத்தகுந்தது. அறியத்தகுந்தது என்னும் வினைச்சொல் மூலத்திலில்லை, சேர்த்துக் கொள்ளப்பட்டது.

இனி உட்கருவியின் சித்தியைக் கூறுகின்றார். வெளியிந்திரியங்களைக் காட்டிலும் வேறான உள்ளிந்திரியமானது மனம், புத்தி, அகங்காரம், என்னும் பெயருடன மூன்று விதமாகும். இவற்றிற்கு முறையே இச்சை, சம்சயம், போதம், தொழில்களென்று கூறுகின்றார். அவற்றுள், இச்சை யென்னும் சொல்லால் சங்கற்பம் என்னும் பெயருடையதாயும் ஒரே மனதாயிருத்தல் என்னும் மறு பெயருடையதாயுமிருக்கும் சித்தனை கூறப்படுகின்றது. அந்தச் சங்கற்பமும் ஞானக்கிரியா ரூபமாயிருத்தலால் புத்தியின் காரியமான கட முதலியவற்றின் அறிவு அகங்காரத்தின் காரியமான நானென்று தன்னை விஷயமாக உடைய அறிவு ஆகிய இவற்றைவிட வேறானது. எதனாலெனில், புத்தியின் காரியமும் அகங்காரத்தின் காரியமும் ஞான ரூபங்களேயன்றி ஞானக்கிரியா ரூபங்களில்லையாதலா லெனக.

ஆதலால், ஞானக்கிரியா ரூபமான இச்சங்கற்பம் எதன் காரியமோ, அதுவே மனமாகும் என மனம் சித்தித்தது. அந்த மனமானது, உள்ளே சங்கற்பத்தினாலும் வெளியே இந்திரியங்களை அதிட்டித்தலினாலும் இரண்டுவிதமாக அதிகாரியாயிருக்கின்றதென்று மதங்கத்திற் கூறப்பட்டிருக்கின்றது. அது வருமாறு:—மனமானது வெளியில் இந்திரியங்களுடன் கலந்து அவ்விந்திரியங்களுக்குச் சாமர்த்தியத்தையும், உள்ளே சங்கற்ப ரூபமான இருப்பையும் செய்கின்றது. ஆதலால் அந்த

மனம் இரண்டுவிதமான அதிகாரமுடையதாய் அநுபவிப்பவ னுடைய அநுபவத்தை நிகழ்த்துகின்றது என்பதாம். மிரு கேந்திரத்திலும் தேவ என்னும் பதத்திற்குப் பொருளாயுள்ள இந்திரியங்களைத் தொழிற்படச்செய்வதாயும், விரைவில் செல்வ தாயும் சங்கற்பத்தைக் குணமாகவுடையதாயும் மனமிருக்கின்ற தென்று கூறப்பட்டிருக்கின்றது. அவ்விடத்தில் தேவ என் னும் சொல்லிற்குப் பிரகாசம் செய்வது என்பது பொருள். அப்பொருள்கொண்டு இந்திரியங்கள் கூறப்பட்டன. இந்த மனமானது இந்திரியங்களை ஏவுகின்றதென்பதும் அதிலேயே நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. ஆன்மாவிற்கு இந்திரியம், விஷ யம், ஆகிய இவற்றோடு சம்பந்தமிருப்பினும் எப்பொழுதும் தொழிற்பாடு காணப்படாமையால் தொழிற்படச் செய்யும் கருவியொன்றிருத்தல் வேண்டுமென்பது யுத்தியினாலும் சித் திக்கின்றது என நிச்சயிக்கப்பட்டிருத்தல் காண்க.

ஆதலால், வியாபக மில்லாமையாலும், ஒவ்வொரு ஆன் மாக்கள்தோறும் இன்றியமையாதிருப்பதுபற்றி அநேகமாதலா லும் இந்த மனம் காரியமாகும்.

அவ்வாறே சம்ரம்பமென்பது முயற்சியாகும். இது அகங் காரத்தின்தொழில். சம்ரம்பம் அகங்காரத்தின் தொழிலென்று பெரியோர்களும் கூறியிருக்கின்றனர். இது, போதமென்னும் புத்தி விருத்தியான நிச்சயமானது ஞானசக்தியைப்பற்றி யுண் டாவதுபோல் கிரியா சக்தியைப்பற்றி யுண்டாகின்றது. இந்த சம்ரம்பமே சரீரத்தினுள்ளிருக்கும் பிராணன் அபானன், முத லிய வாயுக்களின் தொழிற்குக் காரணம். அவ்வாறே வாயு வுக்கு செலுத்துதல், இழுத்தல், முதலிய தொழில்கள் முயற்சி யென்னும் சம்ரம்பமில்லையாயின் எவ்வாறு சித்திக்கு மென்று பெரியோர்களும் கூறுகின்றனர். அன்றியும் கணந் தோறும் அநேக ரூபங்களான அறிவிற்கு விஷயமான கட முத லியவற்றின் அறிவு ரூபமான புத்தியின் தொழிலைக் காட்டிலும் வேறாயும், ஒரேவிதமாயும் உள்ள அறிபவனை விஷயமாகக் கொண்ட நான் என்னும் அறிவிற்கு எது காரணமோ, அது

வே அகங்காரமெனச் சித்தித்தது அறிபவனை விஷயமாகக் கொண்டதாவென்னும் அறிவானது ஏனைய தத்துவங்களால் உண்டாகட்டுமெனில், அது பொருந்தாது. அந்தந்த தத்துவங்கள் அதனதன் காரியங்களை உண்டுபண்ணி ஒழிவையடைந்திருக்கின்றபடியால், தன்தன் காரியத்தைக்காட்டிலும் வேறான ஒரு காரியத்தை உண்டுபண்ணு வென்க. உண்டுபண்ணுமென்று கொள்ளின், ஒரே தத்துவத்தினாலேயே சகல காரியங்களு முண்டுபண்ணபபடு மாதலால் அநேக தத்துவங்களைக் கொள்ளுதல் வீணாக முடியும்.

இவ்வாறே அறிவிற்கு விஷயங்களான கடம் முதலியவற்றின் நிச்சயரூபமான போதமானது புத்தி‍யின் தொழிலாகும். இவ்விடத்தில் போதமென்பது, அத்தியவசாயம் அனத்தியவசாயம் என இரண்டுவிதமாகும். அவற்றுள், இரண்டாவதான அனத்தியவசாயமென்பது எப்பொழுதும் அறிபவனுடைய சொரூபமாகவே பிரகாசிக்கின்ற ஆக்ம சுபாவமே. முதலாவதான அத்தியவ சாயமென்பது உற்பத்தியுடன் கூடியிருத்தல் பற்றி அநித்தியமாய்த் தோன்றுகிறபடியால், அது ஆன்மாவிற்குச் சுபாவமாகாது; நித்தியப் பொருளுக்கு அநித்தியமான சுபாவம் கொள்ளக்கூடாததலினென்க. இந்த அத்தியவசாயம் நித்தியமாய் அனுபவிக்கப்படவில்லை. ஆதலால் இது எதன் சுபாவமோ அதுவே புத்தி தத்துவமெனச் சித்தித்தது. அவ்வாறே ஒரு பொருளைப் பார்த்தமாத்திரத்தில் நிருவிகற்பஞானம் முதலில் உண்டாகின்றது. அந்த நிருவிகற்பஞானம், பாலன் ஊமை முதலியோருடைய அறிவுக்குச் சமானமாய்ப் பொருள் மாத்திரத்தை விஷயமாகக்கொண்டிருக்கின்றது. அதன் பின்னர், பொருளின் தர்மங்களான சாதி உருவம் முதலியவற்றுடன் கூடி அப்பொருள் புத்தியாலறியப்படுகின்றது. அந்த அறிவும் பிரத்தியக்ஷ அறிவென்று கொள்ளப்பட்டிருக்கின்றதெனப் பெரியோர்களும் கூறியிருக்கின்றனர். அன்றியும், தர்மம்முதலிய குணங்களுக்குப் பற்றுக்கோடாகப் புத்தியென்னும் தத்துவம் சித்தித்ததென்று நூல்களிற் கூறப்படுகின்றது. எவ்வாறெனில், புத்தியின் குணங்க

ளான தர்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம் என்னு மிவை சாத்துவித தர்மங்கள். இவற்றிற்கு மாறான அதர்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அனைசுவரியம் என்னுமிவற்றுள் அவைராக்கியமென்னும் அராகம் நீங்கிய ஏனைய மூன்றும் தாமச தர்மங்கள். o இவ்வாறு கூறப்படுகின்றமை காண்க. இவ்விடத்தில் இது கருத்தாகும்.

அது வருமாறு:—இதம் அகித ரூபமான கன்மமானது தொழில் ரூபமாதலின் செய்த அப்பொழுதே நாசமடையும். ஆதலால், காரியமான பலனுண்டாகும் பொழுது காரணமான கன்மம் இல்லாமையின் நெடுநாட்சென்று அக்கன்மங்க ளுக்குப் பலன்களைக் கூறும் நூல்கள் பொருத்தமில்லா திருத்தலால், அந்நூல்கள் பொருத்தமுடையன என்று காட்டுதற்கு, கன்மங்கள் நசித்தாலும் அவற்றா லுண்டுபண் ணப்பட்ட புண்ணியபாவங்கள் நசியாமலிருந்து நெடுநாட் சென்று பலனைத் தருகின்றன என்று, புண்ணியபாவ ரூபமான கன்மங்களின் வாசனை நிச்சயிக்கப்படுகிறது. ஆன்மா விகார மற்ற பொருளாதலால் அந்தப் புண்ணியபாவ ரூபமான கன்மங் களின் வாசனையை ஆன்மாவினிடத்தில் கொள்ளுதல் பொருந் தாது. உழவு முதலிய தொழில்களின் வாசனை ஆன்மாவிடத் திற் காணப்படவில்லை. சடப்பொருளிலேயே காணப்படுகின் றது. ஆதலால் எந்தச் சடப்பொருளில் புண்ணிய பாவங்கள் வாசனரூபமாயிருக்கின்றனவோ, அந்தப் பொருளே தர்மம் முதலிய எண் குணங்களை உடைய புத்திதத்துவமாமென்க. இவ்வாறே ஞானமுதலியவற்றின் வாசனையினும் கொள்ளத் தகுந்தது. அந்த எட்டும் சித்தி முதலிய வேறுபாட்டால் முந்நூறு பேதங்களாகின்றன என்றும் வேறு நூல்களிற் கூறப்பட்டிருக்கின்றது.

இவ்வாறு இந்திரியவர்க்கத்தைச்சாதித்து அவற்றுள் எந்த இந்திரியம் எதிலிருந்து உண்டாகின்ற தென்பதைப்பற்றிக் கூறுகின்றார். மேலே கூறப்பட்டவற்றுள், மனதும் ஞானேந்

o அராகம், இராசத தர்மமென்பது குறிப்பெச்சம்.

திரியங்களும் தைசதமென்னும் பெயருடைய சாத்துவித அகங்காரத்திலிருந்தும், கன்மேந்திரியங்கள் வைகாரிகமென்னும் பெயருடைய இராசத அகங்காரத்திலிருந்தும், பஞ்சபூதங்களுக்குக் காரணமான தன் மாத்திரைகள் பூதாதிகமென்னும் பெயருடைய தாமத அகங்காரத்திலிருந்தும் உண்டாகின்றன.

அவ்வாறே செவி தோல் கண் நா மூக்கு என்னு மிந்த ஐந்து ஞானேந்திரியங்களும் மனமும் பிரகாச ரூபமாதலால் சாத்துவிதங்கள். இவற்றிற்குக் காரணமான அகங்காரமும் சாத்துவிதமெனப்படும். அதற்குத் தைசசமென்பது பெயர். வாக்கு, கை, கால், ஆசனம், குறி என்னும் இவ்வைந்து கன்மேந்திரியங்களும் தொழிலை யனுசரித்துள்ளன. ஆதலால் இராசதங்கள். இவற்றிற்குக் காரணமாகிய அகங்காரமும் இராசதமே. அதற்கு வைகாரிகமென்பது பெயர். சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம் என்னுமிவ்வைந்தும் தத்தம் விசேடங்களைக் காட்டாமல் சூக்குமமாய் ஐந்து பூதங்களுக்கு முதற்காரணமாக மாத்திரமிருத்தலால், தன்மாத்திரைகள் என்னும் பெயரையுடையன. இத்தன்மாத்திரைகள் பிரகாசத்தைச் செய்யும் ஞானேந்திரியங்களினும் தொழிற்செய்யும் கன்மேந்திரியங்களினும் வேறாய்ப்பிரகாசிக்கப்படுவதாயிருத்தலால் தாமதங்கள். இவற்றிற்குக் காரணமாகிய அகங்காரமும் தாமதமே. அதற்குப் பூதாதிகமென்பது பெயர் என்று மிருகேந்திரத்திலும் கூறப்பட்டிருத்தல் காண்க.

ஆதலால் ஞானேந்திரியத்தின் வழியாய் தைசத அகங்காரத்தினால் ஆன்மாவின் ஞானசத்தியானது பிரகாசம் செய்யப்படுகிறது. கன்மேந்திரியத்தின் வழியாய் வைகாரிக அகங்காரத்தால் ஆன்மாவின் கிரியாசத்தியானது பிரகாசம் செய்யப்படுகிறது. ஞானசத்தியை நோக்கக் கிரியாசத்தி மலினமாயிருத்தலால் வைகாரிக அகங்காரத்தால் பிரகாசம் செய்யப்பட்டது.

இந்த அகங்காரங்களுக்கு, சாத்துவிதம் இராசதம் தாமதம் என்னும் பெயர், சத்துவம் முதலிய மூன்று குணங்களின்

பிருதிப்பாட்டால் வந்தன. "கலப்பில்லாதது பரிணமிக்காது" என்னும் நியாயத்தால் ஒரு பொருள் தனியாயிருந்து காரணமாகாது ஆதலால், இந்த அகங்காரங்கள் குணங்களோடுகூடிக் காரணமாயினமைகாண்க. (7–8)

(9) அகங்காரம் எதிலிருந்து உற்பத்தியாகுமெனில், புத்தியிலிருந்து உற்பத்தியாம். புத்தி, முக்குணத்திலிருந்து உற்பத்தியாகும். அக்குணங்களோ, சாத்துவிதம் இராசதம் தாமதம் என்னும் மூன்று பிரிவுகளாய், முறையே பிரகாசம் வியாபாரம் நியமம் என்னுமிவற்றைத் தொழில்களாக உடையன என்பதாம்.

அகங்காரம், புத்திதத்துவத்திலிருந்து உண்டாகின்றது. புத்திதத்துவம் குணதத்துவத்திலிருந்து உண்டாகின்றது. அவ்வாறே, பிரகிருதியிலிருந்து மகத்தத்துவமும், அதிலிருந்து அகங்காரதத்துவமும், பின்னர்ப் பதினறு விகாரங்களும் உண்டாகின்றன என்று சாங்கிய காரிகையிலும் கூறப்பட்டிருத்தல் காண்க.

வைசேடிகர்கள், செவிமுதலிய இந்திரியங்கள் ஓசை முதலிய இன்றியமையாத விஷயங்களை உடையனவாயிருத்தல்பற்றி, அந்தச் செவி முதலியவற்றிற்கு ஓசை முதலிய இன்றியமையாத குணங்களையுடைய ஆகாயம் முதலிய பூதங்கள் முதற்காரணமெனக் கூறுகின்றனர்; அது பொருந்தாது. எதனுலெனின், கண் முதலிய இந்திரியங்கள் தமக்கு விஷயமான உருவத்தைக் குணமாகக்கொண்ட அக்கினியை யறிவதுபோல், அதனின்வேறான ஏனைய பூதங்களையும், அப்பூதங்களிலிருக்கும் உருவம் முதலிய குணங்களையும், அப்பூதங்களின் சாதிகளையும் அறிகின்றமையால், என்க.

அவ்வாறே, இன்றியமையாத விஷயங்களோடு கூடியிருத்தல்பற்றி இந்திரியங்கள் பூதங்களை முதற்காரணமாக உடையனவென்று கொண்டால், ஆன்மாக்களுக்கு இந்திரியங்களால் பூதங்களின் கர்மம், சாதி, சமவாயம் ஆகிய இவற்றினறிவு உண்டாதல் கூடாதென்று போககாரிகையிலும் கூறப்பட்டிருத்தல் காண்க.

அவ்வாறாயின், அகங்காரமென்னும் காரணம் ஒன்றாயிருத்தலால், காரியமான இந்திரியங்களில் வேற்றுமை எவ்வாறு கூடுமெனில், காரணமான கரும்பு ஒன்றாயிருந்தும், அதின் காரியமான வெல்லம், சர்க்கரை முதலியவற்றின் உற்பத்தி வேறுபாட்டால் வேற்றுமை காணப்படுமாறு போல், இந்திரியங்களிலும் வேற்றுமை கூடுமென்க.

பின்னர், பிற்பகுதியால் குணத்த்துவத்தைக் கூறுகின்றார். பிரகாசம் பிரவிருத்தி நியமம் என்னுமிவை, சாத்துவிதம், இராசதம் தாமதம் என்னும் இம்முக்குணங்களுக்கு முறையே தொழில்களாகும். இந்தச்சாத்துவிதம் முதலிய முக்குணங்களும் சூக்கும தேகத்தின் வழியாய் மாயாகாரியங்களனைத்திலும் வியாபகமாயிருக்கின்றன. பிரகாசம் பிரவிருத்தி நியமம், என்பன உபலக்ஷணத்தால் பிரதானமல்லாத வினைபகுணவிருத்திகளையும் சேர்த்துக்கொள்ளும்; அஃதெவ்வாறெனில், மனோபலம் சரீரபலம் என்னுமிவை, சாத்துவித குணத்தின் தொழில்கள். குரூரனாயிருத்தல் சூரனாயிருத்தல் முதலியவை இராசதகுணத்தின் தொழில்கள். சந்தோஷமில்லாதிருத்தல் மந்தமாயிருத்தல் முதலியவை தாமதகுணத்தின் தொழில்கள். இவ்வாறு மதங்கத்திற் கூறப்பட்டிருக்கின்றன. (9)

(அ—கை) குணங்களே பிரகிருதி யென்று சாங்கியர் கூறுவது பொருந்தாதென்று கூறுகின்றார்.

(10) எந்தகுணங்களுக்கு அவ்வியத்தத்திலிருந்தே உற்பத்தி சம்பவிக்கின்றதோ, அந்தக்குணங்கள் இந்த நூலில் மூன்றுபிரிவுகளாகின்றன. மண்முதலியவற்றின் அவயவங்களான கடம் முதலியன, மண்முதலிய ஒரேபற்றுக்கோட்டில் ஒடுங்கியிருத்தல் போல, சாத்துவிதம் முதலிய குணங்களுக்கும் ஒரே பற்றுக்கோட்டில் ஒடுக்கமென்பது அவசியம் அறியத்தகுந்தது என்பதாம்.

எந்தக்காரணத்தால் குணங்கள், சடமாயும் அநேகமாயுமிருத்தல்பற்றி, ஒருகாரணத்தை முன்னுடையதாயிருக்கின்றனவோ, அந்தக்காரணத்தால் அந்தக்குணங்கள் அவ்வியத்தத்திலிருந்தே உண்டாகின்றன என்பதுகருத்து. மூலைகோசத்தில்

குணத்தோடு சேர்த்துக் கூறப்பட்ட ஏவ வென்னும் ஏகாரத்தை அவ்வியத்தத்தோடு சேர்த்து உரைகொள்ளப்பட்டது.

மூலத்தின் நான்காம் பாதத்தால் இக்குணங்கள் பிரகிருதியின் காரியமென்பதை வெளிப்படுத்துகின்றார். பூமி முதலியவற்றின் அவயவங்களான கடம் முதலிய உருவங்களுக்கு எவ்வாறு பூமி யென்னும் ஒரே பற்றுக்கோட்டில் ஒடுக்கங்காணப்படுகின்றதோ, அவ்வாறே, சாத்துவிதம் முதலிய குணங்களுக்கும் யாதாவதொரு பற்றுக்கோட்டில் ஒடுக்கம் அவசியமறியத்தகுந்தது. அந்தக்குணங்களின் ஒடுக்கத்திற்கு எது பற்றுக்கோடா யிருக்கின்றதோ, அதுவே, அவ்வியத்தமென அவ்வியத்தம் சித்தித்தது. அவ்வாறே மிருகேந்திரத்திலும் புருடதத்துவ முண்டான பின்னர், தன்மாத்திரை ஐந்து, மகத்தத்துவம், அகங்காரம் இரண்டு, ஆக இவ்வேழுதத்துவத்திற்கும் முதற்காரணமான அவ்வியத்த தத்துவத்தைக் கலாதத்துவத்திலிருந்து தோற்றுவித்தார் என்று கூறப்பட்டிருத்தல் காண்க. (10)

(அ—கை) பின்னர் அராகதத்துவ முண்டென்று சித்திப்பதைக் கூறுகின்றார்.

(11) எதனாலுண்டுபண்ணப்பட்ட ஆசையையுடைய மனிதருக்கு, போக்கியப் பொருள்களில் பிரவிருத்தி உண்டாகின்றதோ, அதுவே, இந்த நூலில் அராகதத்துவமெனக் கூறப்பட்டிருக்கின்றது. விசேடமான போக்கியப் பொருள்களால் ஆசையுண்டாகுமெனில், உலகத்தில் ஆசையற்ற வைராக்யமுடையார் காணப்படார் என்பதாம்.

மதங்கம் முதலிய ஆகமங்களில், பிரகிருதி தத்துவம் அராகதத்துவமென்னும் இவற்றினிடையே புருடதத்துவம் சொல்லப்படுகின்றது. அவ்வாறே பிரகிருதி தத்துவம் கூறிய பின்னர் புருடதத்துவத்தைக் கூறவேண்டுவதாயிருக்க, அதனைக் கூறாது, அராகதத்துவத்தைக் கூறியது எவ்வாறு பொருந்துமெனில், அஃதுண்மையே ஆயினும், புருடன் சேதனனாயும் நித்தியனாயும் இருத்தலால், அத்துவாவாதல்கூடாது;

கலை முதலிய ஐந்து‡கஞ்சுக முடைய ஆன்மாவே போகத்தை யனுபவித்தற்குரியது. ஆதலால் அந்தப்போக்தாவாகிய ஆன்மாவிற்கு, அநாத்மப்பொருள்களில் ஆத்மாபிமானத்தைஉண்டு பண்ணுகின்ற புருடதத்துவ மென்னும் மலத்தோடு சேர்க்கை யிருத்தல்பற்றி, அந்தப் புருடத்துவ மலநிவிருத்தியின் பொருட்டுத் தீக்ஷையில் சுத்திசெய்வதற்காகப் பிரகிருதி தத்துவத்திற்கு முன் புருடதத்துவமாக ஒன்று ஆகமங்களில் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால், இந்நூலாசிரியரால் புருடதத்துவக் கூற்று விலக்கப்பட்டது. ஆன்மாவின் சொரூபத்தை மாயாதத்துவத்திற்குப் பின்னர்க் கூறப்போகின்றார்.

எந்தத் தத்துவத்தால் உண்டுபண்ணப்பட்ட ஆசையையுடைய புருடனுக்குப் போக்கியப்பொருள்களைக் கிரகிப்பதற்குப் பிரவிருத்தி உண்டாகிறதோ, அந்தத்தத்துவம் இந்தச் சைவசாத்திரத்தில் அராகமென்று அறியத்தகுந்தது. இதனால் ஆசையென்னும் காரியத்தைச் செய்வதற்காக அராகமென்னும் தத்துவம் சித்தித்ததென்பது கருத்து.

அவ்வாறாயின், வைராக்கிய மின்மையென்னும் புத்தியின் தர்மமே ஆசையை யுண்டுபண்ணுதற்குக் காரணமென்று சாங்கியர் கூறுகின்றனரே யெனில், அது பொருந்தாது. எதனாலெனில், வைராக்கியமின்மையென்னும் புத்திதர்மம் வாசனாரூபமாதலால், அஃது ஒருவிதமான காரியத்தையும் நிகழ்த்தாது. அவ்வாசனையும் காரியத்தை நிகழ்த்துமெனக் கொள்ளின், புத்தியில் எப்பொழுதும் அநேக வாசனைகளின் சேர்க்கை இருத்தலால், புருடனுக்கு ஒரே காலத்தில் மாறுபட்ட அநேக ஞானங்கள் உண்டாகிக் கெடுதல் சம்பவிக்கு மாதலாலென்க.

இனி, பிரத்தியய ரூபமான புத்தி தர்மத்தை இச்சைக்குக் காரணமாகக் கொள்ளின், அது போக்கிய ரூபமாயிருத்தலால் அதுவும் பொருந்தாதென்க.

அவ்வாறாயின், பொருள்களிலிருக்கும் அழகு முதலிய குணங்களே இச்சைக்குக் காரணமாகட்டுமெனில், பொருள்க

‡கஞ்சுகம்—சட்டை.

ளின் எதிர்முக மாத்திரையினுலேயே அனைவருக்கும் ஆசையுண்டாகுமாதலின், ஆசையற்ற வைராக்கிய சம்பந்நன் இல்லையென முடியும். வைராக்கியம் நிறைந்த பெரியோர்கள் காணப்படுகின்றமையால், அருத்தாபத்திப் பிரமாணத்தால், அறிவனுன ஆன்மாவினிடத்தில ஆசைக்குக் காரணமான அராகமென்னும் தத்துவத்தை ஒததுக்கொள்ளவேண்டுவது அவசியமே யென்க. இவ்விஷயத்தையே மூலத்தின் பிற்பகுதியால் கூறுகின்றார்.

அவ்வாருயின், புருடர்களாற் செய்யப்பட்ட நல்வினை தீவினைகளே ஆசைக்குக் காரணமெனக் கொள்வோமெனில், நல்வினை தீவினை யெனனும் கன்மமானது, சுகதுக்க ரூபமான பலன்களைத்தந்து, அதனேடு ஒழிவையடைகின்றமையால், அதுவும் பொருந்தாது அன்றியும், கன்மம் ஒன்ருயிருந்து எல்லாத் தத்துவங்களுக்கும காரணமாதலின், அநேக தத்துவங்களைக் கூறியதும் வீணுகும்.

அவ்வாருயின், மாயையினுடைய மோகத்தன்மையே அராகமெனக் கூறுவோமெனில், மாயையும் தான் நேரே மோகத்தைச செய்யாது; காரியங்களின் வாயிலாகவே மோகத்தைச் செய்கின்றதாதலால் அதுவும் பொருந்ாது. (11)

(அ—கை) ஆசையற்ற விரக்தன் பிரத்தியக்ஷத்தால் சித்தித்திருக்கிருனென்று கூறுகின்ருர்.

(12) யாதொரு மகளிர் முதலிய பொருள்களில் ஆசையானது மக்களுக்குண்டாகின்றதோ, அந்த மகளிர் முதலிய பொருள்களின் நெருங்குதலிருந்தும், பெரியோர்களிடத்தில் ஆசை காணப்படவில்லை; ஆதலால், விசேடமுடைய ஆசையற்ற விரக்தன இல்லையென்று சொல்லுவது கூடாது என்பதாம்.

எந்தக்காரணத்தால் மகளிர் முதலிய பொருள்களின் நெருங்குதலிருந்தும் ஆசை காணப்படவில்லையோ, அந்தக்காரணத்தால விசேடத்துடன் கூடிய ஆசையற்ற விரக்தன் பிரத்தியக்ஷத்தால் காணப் படுகின்றமையால், அவனில்லை யென்றல் பொருந்தாதென்க. (12)

(அ—கை) வித்தியாதத்துவம் உண்டென்று சித்திப்பதைக் கூறுகின்றார்.

(13) புருடன் எந்தக் காணத்தால் புத்தி முதலியவற்றைச் செலுத்தி, போக்கியத்தையும் போக்கியப் பொருளில் போகத்தையும் செய்கின்றானோ, அந்தக் காணம் வித்தியா தத்துவமெனப்படும். அது மேலான சாதனமாகு மென்பதாம்.

எந்தக் காணத்தால், புத்தி அகங்காரம் முதலிய காண சமூகத்தைப் புருடன் ஏவுதல் செய்து போக்கியத்தையும் அப்போக்கியப் பொருள்களில் போகத்தையும் செய்கின்றானோ, அது வித்தை யென்னும் தத்துவமாகும். இது ஆன்மாவுக்குச் சமீபமாயிருத்தலால் மேலானதென்று கூறப்படுகின்றது. குதிரையினாலும் மார்க்கத்தினாலும் தீபத்தினாலும் செல்கின்றானென்பதுபோல், அநேக சாதனங்களால் பலன் சித்தித்திருந்தாலும் வித்தையே மேலான சாதனமென்பது இதனால் கூறப்பட்டதாகும். யாதொரு காரணத்தால் புருடன் இந்த வித்தியாதத்துவத்தினாலேயே போக்கியப் பொருளனைத்தையுமறிகின்றானோ, அது பற்றியே மேலானதென்க. (13)

(அ—கை) இனி போக்கியமென்பது எது? போகமென்பது எது? என்னும் ஆசங்கைக்குச் சமாதானம் கூறுகின்றார்.

(14) விடய ரூபமாயும், சுக முதலிய ரூபமாயும் உள்ள புத்தியே சுருக்கமாக போக்கியப் பொருளாகும். போக்கியத்துடன் சேர்ந்த அறிவின் விளக்கமே போகத்தை யனுபவிக்கும் ஆன்மாவான கர்த்தாவுக்குப் போகமெனப் படுமென்பதாம்.

நிச்சயம் செய்யப்பட்ட மாலை சந்தனம் முதலிய விஷயங்களையுடையதாயும், அதுபற்றியே சுக துக்க மோக நிச்சய ரூபமாயுமுள்ள புத்தியே புருடனுக்குச் சுருக்கமாக போக்கியப் பொருளெனப்படும். எதனாலெனின், அந்தப் புத்தியே நேரே போக்கியமாயிருத்தலாலென்க.

வெளி விஷயங்களோவெனின், அந்தப் புத்திக்குச் சாதனமாய் நின்று பரம்பரையாய்ப்போக்கியங்களென்று கூறப்படுகின்

றன. சித்தத்தால் அதிட்டிக்கப்பட்ட ஞானேந்திரியக்கூட்ட மானது, போக்கியப் பொருளை வித்தைக்கு விடயமாகக் கொண்டுவந்து விடுகின்றது. அந்தப் பொருளைப் புருடன் புத்தியால் நிச்சயித்து, நானென்னும் அறிவை உண்டுபண்ணு கின்ற அகங்காரத்தின் விருத்தியால் அறிகின்றான். அவ்வாறே புத்தியால் நிச்சயம் செய்யப்பட்ட விடயத்தைப் புருடன் அறி கின்றான் என்று பெரியோர்களும் கூறுகின்றனர்.

புத்தி முதலியன நெருங்கியும் நெருங்காமலும் இருக்கும் பொருள்களைக் கொண்டுவந்து விடுவதில் உபயோகமாகின்றன. அப்பொருள்களின் அறிவை யுண்டுபண்ணுவதில் உபயோக மில்லை. புத்தியினால் கொண்டுவரப்பட்ட விடயத்தை, புத்தி அகங்காரம், இந்திரியம் என்னும் இவற்றுடன் எந்தத்தத்து வம் ஆராய்ந்தறிகின்றதோ, அந்தத்தத்துவமே வித்தியா தத்துவமாகுமென, வித்தியாதத்துவம் சித்தித்தது.

ஆதலால், போகத்தை யனுபவிக்கும் கருத்தாவான புரு டனுக்கு, சுகாதிரூபமான புத்தியை விடயமாகக்கொண்டு நான் சுகி நான் துக்கி யென்னும் அறிவின் தோற்றமே போகமெனப் படுமென்க. அவ்வாறே சுவாயம்புவாகமத்திலும் இந்தப் புரு டனுக்கு சுகதுக்கமுதலியவற்றை விடயமாக உடைய அறிவே போகமெனக் கூறப்பட்டிருத்தல் காண்க. ஆதலால் நிச்சயம், நினைவு, ०பிரதிபை, *பிரத்தியயம் என்றவேறுபாட்டால வேறு பட்டபுத்தியும் எந்தத்தத்துவத்தால் அறியப்படுகின்றதோ அந்தத்தத்துவமே வித்தியாதத்துவமாகும். அந்த வித்தியா தத்துவமே மேலான சாதனமென்று கூறப்பட்டது. (14)

(அ—கை) அவ்வாறாயின், புத்தி தத்துவமே பிரகாச ரூபமாயிருத்தலால், சூரியன் முதலிய பொருள்கள் போல், விஷயங்களையும் நிச்சயத்தால் பிரகாசம்செய்து, தன்னையும் பிரகாசம் செய்யும். ஆதலால் தன்னையறிவதற்கு வித்தையென் னும் வேறொருதத்துவத்தால் பயனில்லை யென்னும் ஆசங்கைக் குச் சமாதானம் கூறுகின்றார்.

---

०பிரதிபை—புதிது புதிதான தோற்றம்.
*பிரத்தியயம்—புத்தி தர்மமானஎட்டின் காரியங்கள்.

(15) புத்தியானது சூரியன்போல் அறிவு ரூபமாயிருந்தாலும், தன்னை விஷயமாகக்கொண்ட அறிவிற்குத்தான் செயப்படுபொருளாயிருத்தலால், தன்னின்வேறான சாதனத்தைக்கொண்டே தன்னையறியச்செய்தற்குச் சமர்த்தமாகின்றது என்பதாம்.

புத்தியானது பிரகாசரூபமாக இருந்தபோதிலும், அறிவுக்கு விஷயமாயிருக்கும் தன்னை, தான் காரணமாய் நின்று அறியச் செய்தற்குச் சமர்த்தமாகின்றதில்லை. ஏதனாலெனின், தான் அறிவுக்கு விடயமாயிருத்தலின், கடமுதலியனபோல வெளிச்சாதனமாயிருத்தலாலெனக. சூரியன் முதலியோர் பிரகாசரூபராயிருந்த போதிலும், வேறொருசாதனத்தை விரும்பாது, தாமே தம்மை அறியச்செய்வதில்லை. கண் முதலியவற்றைக்கொண்டே அறியும்படி செய்கின்றனர். அதுபோல, நினைவு ரூபமானபுத்தியும், தானே தன்னையறியச்செய்வதில்லை; தன்னினும் வேறான காரணத்தைக் கொண்டே தன்னையறியச்செய்கின்றது என, அந்தப்புத்தியை யறிவதற்குச்சாதனமாக வித்தையென்னும் தத்துவம் சித்தித்தது. (15)

(அ—கை) அவ்வாறாயின், பிரகிருதியே, புத்திரூபமாய் நிகழ்ந்த தன்னைப் புருடனுக்குப்போக்கியப் பொருளாக அறிவிக்கின்றது. புருடனுக்கோ வெனில், கருத்தாவாயிருக்குந் தன்மை இல்லை; அறியுந்தன்மையே உண்டு. ஆதலால் புருடன் கருத்தாவாயிருத்தல்பற்றி, காரணம்வேண்டுமென்று வித்தியா தத்துவத்தைச் சாதித்தது பொருந்ாதென்னும் ஆசங்கைக்கு சமாதானங் கூறுகின்றார்.

(16) புத்தி முதலிய காரணங்களோடு சேர்க்கையிருத்தலாலும், போகத்தில் ஆசை உடைமையாலும், அந்தச்சாதனங்களை ஏவுதலாலும், அந்தச்சாதனங்களின் தொழில்களைப் பயனோடு சேர்த்தலாலும், புருடனுக்குக் கருத்தாவாயிருக்குந் தன்மை சித்தித்தது என்பதாம்.

"புத்தி முதலிய" என்றவிடத்து, "முதலிய" என்றதினால் விடயங்களுங் கொள்ளப்படும். படவே, புத்தியோடும் விடயங்களோடும சேர்க்கையிருத்தலாலும், போகத்திலாசையுண்டாவதாலும், அந்தக்கரணங்களை ஏவுதல் செய்தலாலும், விடயங்களின் அறிவு ரூபமான அக்கரணங்களுடைய தொழில்களுக்குச் சுக முதலிய பயனோடு சேர்க்கையிருத்தலாலும், புருடனுக்குக் கருத்தாவாயிருக்குந்தன்மை சித்தித்தது. போக்கியத்தில் ஆசையுடைமையினாலும், என்றுபாடங்கொள்ளின், போக்கியப்பொருளை விடயமாகக்கொண்ட ஆசையினாலும் என்று உரை செய்துகொள்க.

இதன் கருத்தாவது:— பிரகிருதி சடமாதலால், புருடனைக் குறித்துப் பிரவிருத்திப்பதில்லை. புருடனோ எனில், அறிவுடையனாதலால், அவனுக்குக் கரணங்களை ஏவுதல் என்னுந் தொழில்கூடும். ஆதலால் கருத்தாவாயிருக்குந்தன்மை புருடனுக்குத்தான் சம்பவிக்கும். புருடன் கருத்தாவில்லையெனில், கருத்தாவாயில்லாத புருடனிடத்தில் கரணமுதலியவற்றின் சேர்க்கை இருப்பது வீணாகும் என்க

அவ்வாறாயின், பசுவின் பாலுக்குச் சடத்தன்மை இருந்த போதிலும், கன்று முதலியவற்றின் விருத்தியின் பொருட்டுப் பிரவிருத்தி காணப்படுகின்றது. அவ்வாறே, கன்றின் பொருட்டுப் பாலுக்குப் பிரவிருத்தி காணப்படுவதுபோல, புருடனுடைய மோக்ஷத்திற்காகப் பிரகிருதியும் பிரவிருத்திக்கின்றது எனச்சாங்கியருங் கூறுகின்றனரே எனில், அது பொருந்தாது எதனாலெனின், சடமான பாலுக்கும் அறிவுடையதான பசு முதலியவற்றின் ஏவுதலினாலேயே பிரவிருத்தி காணப்படுதலால், பிரகிருதிக்கும் தானாகவே பிரவிருத்தி நிகழாது ஆதலால், என்க. (16)

(17) (அன்றியும் பிரகிருதியைக் கருத்தாவாகக் கொண்டால்) யாதொரு காரணத்தால் கருத்தாவாயிருக்குந் தன்மையில்லாதவனும், கரணங்களை ஏவுதல் செய்யாதவனும் உள்ள புருடனிடத்தில், போகமானது காணப்படவில்லையோ, அந்தக்

காரணத்தால் புருடனைப் போகம் அனுபவிப்பவனென்று கூறி யதும், அந்தப் போகானுபவத்திற்காகப் பிரகிருதியின் தொழி லும், சாங்கியராகிய உங்களுக்கு வீணாக முடியும் என்பதாம்.

யாதொரு காரணத்தால்*கர்த்திருத் தன்மையற்றவனும் காணம் முதலியவற்றை ஏவுதல்செய்யாதவனும் உள்ள புருட னிடத்தில், போகம் காணப்படவில்லையோ, அந்தக் காரணத் தால், அறிவு ரூபமான போகமும் கிரியாரூபமாதலால், அவ் வித போகத்தோடு கூடிய போக்தாவான புருடனுக்குக் கருத்திருத்தன்மை நீங்காமையால், அந்தக் கருத்திருத்தன்மை யைப் புருடனுக்குக் கொள்ளாவிடில், புருடனைப்oபோக்தாவா கக் கூறியதும், போகத்துக்காகச் சடமான பிரகிருதிக்குக் கூறப்பட்ட தொழிலும், உங்களுக்குப் பயன்படாமையால், அவ்வாறு கூறுதல் பொருந்தாதென்க.

ஆதலால், காணங்களை ஏவுதலாலும், போக்தாவாயிருத்த லாலும், புருடனுக்குக் கருத்திருத்தன்மை சித்தித்தது. அவ் வாறே, கிரியையை நிகழ்த்தும் சாதனங்களானoகாரகங்களைத் தொழிற்செய்யும்படிசெய்வதிலும், தொழிற்செய்யாமலிருக்கச் செய்வதிலும்,தொழிற்செய்யாதகைச்செய்யும்படிசெய்வதிலும், சமர்த்தனையுள்ளவன், கருத்தாவென்னும் காரகமாவன் என்று பெரியோர்களும் கூறியிருக்கின்றனர். (17)

(அ—கை) இவ்வாறு அறிபவனாயிருக்குந் தன்மையைப் போல, கருத்தாவாயிருக்குந் தன்மையும், புருடனுடைய சொரூபமென்று கூறப்பட்டது. இனி, புருடனுடைய சொரூப மான அறியுந் தன்மை கருத்தாத் தன்மை என்னுமிவை, அனு தியான மலத்தால் மறைக்கப்பட்டிருக்தலால், எப்பொழுதும் பரமசிவனுடைய அறியுந் தன்மை கருத்தாத் தன்மைகள் பிர காசிக்குமாறு போல் பிரகாசித்தலில்லையாதலால், இவை யாதாவதொரு தத்துவத்தால் பிரகாசம் செய்யப்படுகின்றன வென்பது சித்தித்ததெனக் கூறுகின்றார்.

* கருத்திருத்தன்மை—கருத்தாவாயிருக்குந் தன்மை.
o போக்தா—போகத்தை யநுபவிக்கின்றவன்.
o காரகம்—செய்விக்கிறது.

(18) இந்தச் சகலாவத்தையில் அறியுந் தன்மைபோல, கருத்தாவாயிருக்குந்தன்மையும், எல்லாப்பொருள்களையும்விஷயமாகக் கொள்ளாமையாலும், யாதானுமொரு சமயத்திலுண்டாவதாலும், யாதானுமொரு தத்துவத்தால் விளக்கத்தகுந்ததாயிருக்கின்றது அதன் விளக்கத்தைச் செய்வது எதுவோ அதுவே கலையென்னும் தத்துவமென்று அறியத்தகுந்தது என்பதாம்.

சகலாவத்தையில் அறியும் தன்மையைப்போல, கருத்தாவாயிருக்கும் தன்மையும் எல்லாப் பொருள்களையும் விஷயமாகக் கொள்ளாமையாலும், யாதானுமொரு சமயத்தில் உண்டாதலாலும். யாதானுமொரு இடைபேவந்து கூடின தத்துவத்தால் விளக்கத் தகுந்ததாயிருக்கின்றதெனத் தோன்றுகின்றது. ஆகலால், அதன் விளக்கத்தைச் செய்வது எதுவோ, அதுவே கலையென்று அறியத்தகுந்தது என்னு மூலத்தால் கருத்தாவாயிருக்கும் தன்மையை விளக்கச்செய்வதற்காகக்கலையென்னும் தத்துவம் சித்தித்ததென்று கூறுகின்றார். ஒருபாகத்தில் மலத்தை விலக்கி ஆன்மாவிற்கு அறியும் தன்மை கருத்தாவாயிருக்கும் தன்மைகளை விளங்கச் செய்கின்றது எதுவோ, அதுவே, கலாதத்துவமெனக்கலாதத்துவம் சித்தித்ததென்பது கருத்து. (18)

(அ—கை) அவ்வாறாயின், புருடனுடைய சத்தியானது மலத்தால் மறைப்புண்டிருந்தபோதிலும், சிருட்டிகாலத்தில் சிவசத்தியே அப்புருட சத்தியை விளங்கச்செய்யுமாதலின், கலையென்னும் தத்துவத்தைக் கூறுவது பயனற்றதாகுமென்னும் ஆசங்கைக்குச் சமாதானங் கூறுகின்றார்.

(19) எந்தக் காரணத்தால், அறியும் தன்மை கருத்தாவாயிருக்கும் தன்மை என்னுமிவை, எல்லாப்பொருள்களையும் விஷயம்செய்பவில்லையோ, அந்தக் காரணத்தால், பாசமில்லாமல் அந்த அறியும்தன்மை கருத்தாவாயிருக்கும் தன்மைகளை ஈசுவரன் விளங்கச் செய்கின்றானில்லை. ஏற்றத் தாழ்வான

வாத முதலிய தோஷமானது, பத்தியம் இன்மையையின்றி நோயின் கருத்திரு சத்தியை விளங்கச் செய்யாமைபோல என்பதாம்.

எந்தக் காரணத்தால், சமுசார நிலையில் புருடனுடைய ஞானக் கிரியா ரூபமான சைதன்னியமானது எல்லாப் பொருள்களையும் விஷயமாகக் கொள்ளாமை காணப்படுகின்றதோ, அந்தக் காரணத்தால், அந்தச் சைதன்னியத்தை ஈசுவரன் பாசத்தின் வழியாகத்தான் விளங்கச் செய்கின்ருன். நேரே விளங்கச் செய்கின்ருனில்லை.

மல பரிபாகம் வந்த பின்னர், தீக்ஷை யென்னும் தனது சத்தியால், அந்த ஞானக் கிரியா ரூபமான சைதன்னியத்தை எல்லாப் பொருள்களும் விஷயமாகும்படி விளங்கச் செய்கின்ருன் என்று மேலே சொல்லப் போகின்ரேம். ஆதலால், சிவ சத்தியானது வேறு தத்துவங்களை நிலைக்களமாகக்கொண்டே புருடனுக்குப் போகத்தைக் கொடுக்கின்றது. நேராகக் கொடுப்பதில்லை. நேரே கொடுக்குமாயின், புத்தி முதலியன பயனற்றனவாகும் என்பது கருத்து.

பிற்பகுதியால் இந்தத் தோஷத்தையே உதாரணம்காட்டி நிச்சயம் செய்கின்ருர். எவ்விதம், சமமில்லாத வாதம் பித்தம்முதலியதோஷமானது,பத்தியமின்மையை இன்றி,வியாதியினுடைய கருத்திருசத்தியை அதாவது(அசௌக்கியம் செய்வதில் சாமர்த்தியத்தை) விளக்கம் செய்கிறதில்லையோ, பத்தியமின்மையைக் கூடுதலினலேயே விளக்கம் செய்கின்றதோ, அவ்விதமே, ஈசுவரனும் பாசங்களின் வழியாகவே ஆன்மாக்களுடைய சைதன்னியத்தை எல்லாப் பொருள்களையும் விஷயமாகக் கொள்ளாதிருக்கும்படி செய்கின்றனன். இந்த மட்டில் இது உதாரணமாகக் கூறப்பட்டது. எல்லா விஷயத்திலும் உதாரணமாகக் கூறப்படவில்லை. ஏதனுலெனில், வாத பித்த முதலிய தோஷம் துக்கத்துக்கே காரணமாயிருத்தலானும், ஈசுவரனோவெனில், ஆன்மாக்களின் உபகாரத்தின் பொருட்டே பிரவிர்த்திக்கின்ரு னுதலானுமென்க.

இந்தக் கலை முதலிய காரியங்களுக்கு ஈசுவரன் கருத்தா வாயிருக்கின்முனென்பது, "அனந்தர்முதலியோரை அதிட்டித்தே" என்று கிரணாகமத்தில் கூறப்பட்டிருக்கின்றது. எவவாறெனில், சுத்தாத்துவாவில் சிவன் கருத்தா; அசுத்தாத்துவாவில் அனந்தர் கருத்தா என்றவாமுமென்க. (19)

(அ—கை) அவ்வாறாயின், கன்மத்தைக் காரணமாகக் கொண்டு போகம் நிகழ்கின்றமையாலும், கன்மமில்லாத விஞ்ஞான கேவலர்களுக்குச் சுகதுக்க முதலிய போகங்களின் உணர்ச்சி காணப்படாமையாலும், கன்ம மாத்திரத்தினாலேயே பரமசிவன் ஆன்மாக்களுடைய சைதன்னிய விருத்தியைச் செய்கின்முன் என்பார்க்குச் சமாதானம் கூறுகின்றார்.

(20) கன்ம மாத்திரத்தால் ஆன்மசைதன்னியம் விளங்குகிறதில்லை. எதனாலெனின், யாதொரு காரணத்தால் கன்மமானது போகத்தின் சித்தியில் உண்டுபண்ணப்பட்ட பயனையுடையதாக ஆகின்றதோ, அந்தக் காரணத்தா லென்க. ஞானத்திலும் இவ்விதமான ஆசங்கையே நிகழுமாதலால், வித்தை முதலிய பந்தங்களும் பயனிலவாகு மென்பதாம்.

கன்ம மாத்திரத்தால் ஆன்ம சைதன்னியம் விளங்குகிறதில்லை. கன்மமானது பயனைக் கொடுத்த மாத்திரத்தினாலேயே ஒழிவை அடைகிறதினால், அந்தக் கன்மத்தை வேறு காரியத்திற்குக் காரணமாகக் கொள்வதில் பிரமாணமின்மையாலென்க. அந்தக் கன்மத்தை வேறு காரியத்திற்கும் காரணமாகக் கொண்டால், விடயங்களை அறிவதிலும் அவற்றை நிச்சயம் செய்வதிலும் இந்தக்கன்மத்திற்கே காரணத்தன்மை கொள்ளக் கூடும். கொள்ளவே, வித்தை புத்தி முதலிய தத்துவங்களைக் கூறுதல் பயனற்றதாக முடியும். ஆதலால், வேறான தத்துவங்களின் உதவியுடன் கூடிய கன்மமே போகத்துக்குக் காரணம் என்று எவ்வாறு நிச்சயம் முதலிய காரியங்கள் புத்தி முதலிய தத்துவங்களையின்றி நிகழாமையால், புத்தி முதலிய தத்துவங்கள் கூறப்பட்டனவோ, அவ்வாறே, புருடனுடைய

கிரியா சக்தியின் விளக்கம் கலைபையின்றி நிகழாமையால் கலை யென்னும் தத்துவம் சித்தித்தது. ஆதலால் ஒருவிதமான குற்றமின்மை காண்க. (20)

(அ—கை) இவ்விஷயத்தில் பூர்வ பக்ஷியின் ஆசங்கை யினையும் அதற்குச் சமாதானத்தையும் கூறுகின்றார்.

(21) கலை முதலியவற்றின் சம்பந்தத்திற்கு முன் ஆன்மாவினிடத்து ஞானக்கிரியைகள் காணப்படாமையால், அவை ஆன்மாவினிடத்தில் உள்ளனவல்ல. விளக்கம் செய்விக்கும் கருவியுடன் கூடாத ஆன்மாவினிடத்தில் அறியப்படுவதில்லையே யன்றி, ஆன்மாவினிடத்தில் இல்லாமையால் அறியப்படுவதில்லை என்பதில்லை என்பதாம்.

கலை முதலிய தத்துவங்களின் சேர்க்கையினாற்றான் அறியும் தன்மையும் செய்யும் தன்மையும் உண்டாகின்றமையாலும், அந்தத் தத்துவங்களின் சேர்க்கைக்கு முன் அவை காணப்படாமையாலும், அந்த அறியும் தன்மை செய்யும் தன்மை என்னும் இவை ஆன்மாவினிடத்தில் முன்னர் சொரூபமாக உள்ளனவல்ல. கலை முதலியவற்றின் சேர்க்கையினாற்றான் உண்டாகின்றன. ஆதலால், ஆன்மா, ஞானம் முதலியவற்றிற்குப் பற்றுக்கோடா யிருக்கின்ற தென்பது சித்தித்தது. ஞான சொரூபமென்பது சித்திக்கவில்லை என்பது பூர்வபக்கம். இனி, பிற்பகுதியால் சித்தாந்தம் கூறுகின்றார்.

ஆன்மாவிற்குச் சட சுபாவமான கட முதலியவற்றிற்குப் போல், ஞானத்தின் *சமவாயம் இல்லாமையால், அநித்திய ஞானத்தின் சமவாயத்தைக் கொள்ளின், விகார பேறபட்டு அநித்தியத்தன்மை வர நேருமாதலாலும், அறியச் செய்யும் துணையின் சந்நிதானத்தில் அறிகின்ற ஆன்மா, தானே பிரகாச ரூப னென்பது சித்தித்திருப்பதாலும், ஆன்மாவிற்கு ஞான சொரூபமாயிருக்கும் தன்மை நித்தியமாய்க் கொள்ளத் தகுந்

* சமவாயமென்பது — பிரிக்கமுடியாத சம்பந்தம்.

தது. அந்த ஆன்ம சொரூபமானது அநாதியான மலத்தால் மறைப்புண்டு இருக்கலால் விளங்கச் செய்யும் கருவியான துணையையின்றி விளங்குகிறதில்லை யென்று சமாதானம் கூறப் பட்டது. ஆகலால் கலை முதலியவற்றின் சேர்க்கைக்கு முன் விளங்கச் செய்யும் கருவியான துணையின்மையால், அறியும் தன்மை செய்யுந்தன்மை என்னுமிவை ஆன்மாவினிடத்தில் விளங்குகிறதில்லையேயன்றி, ஆன்மாவினிடத்து இல்லாமையால் விளங்கவில்லை என்பது இல்லை. விளங்கச் செய்யும் கருவியான துணையின்மையினுலுண்டான யாதொரு தோற்றமின்மை உள்ளதோ, அது இன்மையைச் சாதிப்பதில்லை. விளங்கச் செய்யும் கருவியான துணை இருப்பின் தோற்றமின்மை உளதாயின், அதுவே இன்மையைச் சாதிக்கும். பூதம் நிதி முதலியன இருப்பினும், அவற்றை விளங்கச் செய்யும் துணையின் சன்னிதியின்மையால் தோன்றாமைபற்றி இல்லை யென்பது சித்திக்காததலாலென்க. (21)

(அ—கை) இன்னும் இதனையே கூறுகின்றார்.

(22) உலகத்தில் எந்தப் பொருளானது விளங்கச் செய்யும் சாதனம் உள்ளவிடத்தும் அறியப்படுவதில்லையோ, அந்தப் பொருளே அசத்தாகும்; ஆதலால், அதுபோல, ஞானக்கிரியைகள் அசத்தாவனவல்ல என்பதாம்.

விளங்கச் செய்யும் தீபம் முதலிய சாதனமிருந்தும், எந்தக்கட முதலியவற்றிற்குத் தோற்றமில்லையோ, அவற்றிற்கே அசத்தாயிருக்கும் தன்மை உள்ளது. அந்தக்கடத்தினும் வேறான இருள் முதலியவற்றால் மறைப்புண்டு தோன்றாதகடம் முதலியவற்றிற்கு அசத்தாயிருக்கும் தன்மையில்லையாது. ஆதலால், ஞானக்கிரியைகளும் விளங்கச்செய்யும் கருவியான துணையின்மையால் அறியப்படுகின்றனவல்ல ஆகலின், அவை எக்காலத்தும் அசத்தாயிருக்கும் தன்மையை அடைவன அல்லவென்று பிற்பகுதியால் கூறுகின்றார்.

அவ்வாறாயின், உடலோடு கூடி விஷயங்களை அனுபவிக்கும் உயிர்களுக்கு உடலோடு கூடுதற்கு முன்னர் ஞானம் உண்டென்பதில் நிச்சயமில்லையால் இயக்காதெனவெனில், அது பொருந்தாது. எதனாலெனின், அன்று பிறந்த குழந்தைகளுக்கும் தொழிற் செய்யுங்காலத்தில் முயற்சியும் அன்னையின் தனத்திலுள்ள பாலைப்பருகுவதில் பிரவிருத்தியும் காலடித்தல் முதலிய சேட்டையும் காணப்படுதலால். அவை நன்மை தீமைகளின் வாசனையையின்றி நிகழாதாகலின், உடலோடு கூடுதற்கு முன்னரும் அறியும் தன்மை கருத்தாவாயிருக்கும் தன்மைகள் உள்ளனவென்பது சித்தித்தலாலென்க. (22)

(அ—கை) இதனையே உதாரணத்தோடு காட்டுகின்றார்.

(23) எவ்வாறு சமைக்கற்றொழிற் செய்பவனிடம் அதை செய்வதற்கு முன்னர் அத்தொழிலின் ஆற்றல் உள்ளதோ, அவ்வாறே ஆன்மாவினிடத்தில் ஞானக்கிரியைகள் காணப்படுதலால் அவை முன்னரே சித்தித்துள்ளன என்பதாம்

எவ்வாறு சமைக்கற்றொழிற் செய்பவனிடம் சமைக்கலைச் செய்தல் என்னும் தொழில் காணப்படுதலால் அத்தொழில் நிகழ்ச்சிக்கு முன்னரே அவனிடத்தில் அச்சக்தி உள்ளதாகத் துணியப்படுகின்றதோ, அத்தொழிற் செய்யுங்காலத்திற்றான் உண்டானதில்லையோ, அவ்வாறே, ஞானக்கிரியைகள் ஆன்மாவினிடம் காணப்படுதலால், முன்னரே ஆன்மாவினிடத்தில் ஞானக்கிரியா சத்திகள் உள்ளனவென்பது துணியப்படுமென்க. அவ்வாறே, மிருகேந்திரத்திலும், பாதகாருகாரணத்தால் முத்தியில் ஆன்மாவின் அறிவு எல்லாவற்றையும் அறியும் தன்மையுடையதெனச் சொல்லப்படுகின்றதோ. அத்தக்காரணத்தால் ஆன்மாவினிடத்தில் எக்காலத்தும் ஞானக்கிரியா ரூபமான அறிவு இருக்கின்றது எனக் கூறப்பட்டிருத்தல் காண்க. (23)

(24) (அதுபற்றியே) எத்தக்காரணத்தால் விளக்கச்செய்யும் கருவிபாகுபாடனையை ஞானக்கிரியைகள் விரும்புகின்றன

வோ, அந்தக்காரணத்தால் அந்த விருப்பத்திற்குக்காரணமாக ஞானக்கிரியைகளை மறைக்கும் பொருளாகிய மலமொன்று உண்டென்பது சித்திக்கும். இந்தமலமில்லாமையினாற்றான் முத்தான்மாக்களின் ஞானக்கிரியைகள் எல்லாப்பொருள்களையும் விஷயமாகக்கொள்ளுதலால், அவர்களுக்குச் சமுசார சம்பந்தம் உண்டாகிறதில்லை என்பதாம்.

எந்தக்காரணத்தால் சமுசார அவத்தையில் ஞானக்கிரியைகளுக்கு விளங்கச்செய்யும் சாதனத்தின் விருப்பம் காணப்படுகின்றதோ, அந்தக்காரணத்தால், அவ்விருப்பத்திற்குக் காரணமாக ஞானக்கிரியைகளை மறைக்கும் பொருள் ஒன்று உண்டென்று துணியப்படுகின்றது. அந்தப்பொருளில்லாமையினால், முத்தான்மாக்கள் பரமசிவன்போல் சர்வஞ்ஞர்களாயும சர்வ கருத்தர்க்களாயு மிருந்து மறுபடி சமுசாரசம்பந்தத்தை அடைகிறார்களில்லையென்று கேட்கப்படுகின்றதோ (அது மலமாம்.)

அவ்வாறாயின், ஆன்மாவை மலமற்றதாகச் சாங்கியர்கள் கூறுகின்றனரே எனின், அது பொருந்தாது. எதனாலெனின், சமுசார நிலையில் அந்த ஆன்மாவுக்கு அடிமைத்தன்மை காணப்படுதலால், அவ்வடிமைத்தன்மை காரணமின்றி நிகழுமாயின், முத்தான்மாக்களுக்கும் அடிமைத்தன்மை நிகழுமாதலானும், விளங்கச்செய்யும கருவியை ஞானக்கிரியைகள் விரும்புதலானுமென்க. அவ்வாறே சிவாகமங்களிலும், பாசமின்றி அடிமைத்தன்மை எந்தக்காரணத்தால் நிகழ்ந்ததென்று சொல்லத்தகுந்ததெனக் கூறப்பட்டிருத்தல் காண்க. (24)

(அ—கை) இனி அவ்வியத்தம் முதலிய தத்துவங்களின் தோற்றமுறையைக் கூறுகின்றார்.

(25–26) அவ்வியத்தம், அராகம், வித்தை என்னுமிவை, கலையிலிருந்து உண்டாகின்றன. கலையும மாயையிலிருந்து உண்டாகின்றது. மண்முதல் கலை ஈறான தத்துவக்கூட்டம் ஒவ்

வொரு உயிர்களுக்கும் இன்றியமையாத சூக்கும உடம்பாகும். இந்தச்சூக்கும உடம்பே கன்மவசத்தால் உலகசம்பந்தங்களையுள்ள தூல உடம்புகளில் சுற்றுகின்றது. கலை இறுதியான தத்துவங்களுக்கு உலகரூபங்களான வேறு கூட்டங்களும் உண்டென்று அறியத்தகுந்தது என்பதாம்.

சௌரவாகமத்திலும், அராகம் வித்தை என்னுமிரண்டு தத்துவங்களும், அவ்வியத்தமும் கலாதத்துவத்திலிருந்து உண்டாயினவெனக் கூறப்பட்டிருக்கல்காண்க. கலையும் என்ற உம்மையால், காலநியதிகளும் மாயையிலிருந்து உண்டாகின்றன என்று கொள்க. எதனாலெனின்? காலநியதிகளும், மாயையிலிருந்து உண்டானதாகவும், போக நிகழ்ச்சிக்கு உபகாரம் செய்கின்றதாகவும், நூல்களில் கேட்கப்படுதலாலென்க. அஃதாவது, அந்தணர் முதலியோருடைய உழுதற்றொழிலானுண்டாம் பயன்களான தானியங்களை, அரசன் ஆணையின்றித் திருடர்கள் கொண்டுபோவதுபோல, ஒருவனால் ஈட்டப்பட்ட கன்மத்தின் பலனை மற்றொருவன் அனுபவிக்க நேரும். அவ்வாறு நிகழாதிருத்தற் பொருட்டு, அரசன் ஆணைபோல நியதி தத்துவம் வேண்டப்படுமெனச் சித்தித்தது. காலம் என்னும் தத்துவமும் இந்தக்கன்மபலன் இத்துணை நாள் அனுபவிக்கத்தகுந்தது என்னும் நியமத்துக்குக் காரணமாய், காமதர், விரைவு என்னும் அறிவிற்குக் காரணமாகவும் சித்தித்தது என்னுமிவ்விஷயம் மிருகேந்திர விருத்தி தீபிகையிலும், தத்துவப்பிரகாச விருத்தியிலும், நம்மால் விரிவாகக்கூறப்பட்டிருக்கல் காண்க.

மிருகேந்திரத்திலும் துடி, கணம் முதலிய வியவகார ஞானங்களுக்குக் காரணமாய்க் காலம் என்னும் தத்துவம் மாயையிலிருந்து தோன்றி, தான் தோன்றின காலம் முதல் சங்கார காலம்வரை, நியதிதத்துவத்தால் நியமனம் செய்யப்பட்ட உயிரைப் போகத்தை அனுபவிக்கச் செய்தலால் காலம் எனப்பெயர் கொண்டது எனக்கூறப்பட்டிருத்தல் காண்க.

இந்த வித்தை, காலம் என்னும் இரண்டு தத்துவங்களும்

கலை முதல்யவற்றை நோக்க உயிருக்கு உள்ச்சாதனமாயிருத்தலால், ஆசிரியர் இந்தத் தத்துவங்களை வெளிப்படையாகக் கூறாது உண்மையால் குறிப்பித்தாராதலின், கூறாதகுற்றமின்மை காண்க.

இந்தக்கலை முதல் மண் முடிவான முப்பத்து தத்துவரூபமான சூக்கும உடம்பு ஒவ்வொரு உயிர்களுக்கும் இன்றியமையாது ஆதலின், அவ்வுயிர்களின் போகத்துக்குச் சாதனமாயிருக்கின்றது. அவ்வாறே மிருகேந்திரத்திலும், கலைமுதல் மண் ஈறான தத்துவங்கள், ஆன்மாவின் போகத்திற்குச் சாதனமாயிருக்கின்றமைதனைக் கூறப்பட்டிருத்தல் காண்க. அதுபற்றியே தீக்கையில் சூக்குமத்தைச் சுத்தமாயா தத்துவ சுத்திக்குப் பின்னரே செய்யத்தகுந்ததென்று ரௌரவாகமத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

அவ்வாறாயின், ஸ்ரீமத் காலோத்தராகமத்தில், சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம் என்னும் இவ்வைந்தும், புத்தி மனம், அகங்காரம் என்னும் மூன்றும் ஆக இவ்வெட்டும் புரியட்டகமெனக் கூறப்பட்டிருக்கின்றமை என்னை எனில், அஃதுண்மையே. அதுபற்றியே, இந்தக் காலோத்தர சூத்திரத்துக்குப் பகவான் ஸ்ரீராமகண்டாசாரியர் முப்பது தத்துவங்களைக் கூறினதாக உரை செய்திருக்கின்றனர்.

அவ்வாறாயின், இதற்குப் புரியட்டகமெனப் பெயர்கூறியது எவ்வாறு பொருந்துமெனில், பூதம், தன்மாத்திரை, ஞானேந்திரியம், கன்மேந்திரியம், அந்தக்கரணம் என்னும் ஐந்து வர்க்கங்களாலும், அவ்வந்தக்கரணத்துக்குக் காரணமான குணதத்துவத்தாலும், அந்தக் குணதத்துவத்தை வருத்திசெய்யும் மூலப்பிரகிருதியாலும், போகத்தை அனுபவிப்பதாயிருத்தற்கு உபகாரம் செய்வதான கலை முதலிய ஐந்து சட்டை ரூபமான புருட தத்துவத்தாலும், ஆகிய எட்டு வர்க்கங்களால் ஆக்கப்படுதலின், புரியட்டகமெனக் கூறியதில் முரணின்மை காண்க.

ஆன்மாவின் தூலசரீரம் வெவ்வேறாயினும் இந்தச்சூக்கும சரீரம் சிருட்டிதொடங்கிச் சங்காரவரையாவது, அநந்த

தியில் முத்திவரையாவது, ஒரு ஆன்மாவிற்கு ஒரே தேக மென்று அறியத்தகுந்தது.

இவ்வாறு, ஒவ்வொரு ஆன்மாவிற்கும் இன்றியமையாத கலை முதலிய தத்துவங்களின் தோற்றத்தைக் கூறிவிட்டு, ஆன்மாக்களின் கன்மத்திற்குத் தகுந்தவாறு உண்டாகும் புவன சம்பந்தமான உடலுக்கு ஆதாரமாயுள்ள புவனரூபமான பொதுச் சிருட்டியை, புவனரூபங்களான கந்தங்கள்* அறியத் தகுந்தன என்பதனால் கூறினர். (25—26)

(அ—கை) இந்தத் தத்துவங்கள் உயிர்கள்தோறும் இன்றியமையாதிருத்தல் பற்றிச் சடமாயும் அநேகமாயுமிருத்தலானும் புவனங்களுக்குப் பற்றுக்கோடாய் இருப்பதுபற்றி அவயவப் பகுப்புடையதாயிருத்தலானும், இவை காரியமென்று சித்தித்தலின், இவற்றிற்கு முதற்காரணமாக மாயையென்னும் தத்துவம் சித்தித்தலின்று கூறுகின்றார்.

(27) படைத்தல், காத்தல், அழித்தல் என்னுமிவற்றிற்கு ஆதாரமாயும், உலகத்திற்கு முதற்காரணமாயும், நித்தியமாயும், வியாபகமாயும், சடமாயும், ஒன்றாயும் இருக்கும் மாயையானது, தனது விகாரமான காரிய வருக்கங்களுக்குப்பின்படிக்கப்பட்டிருக்கின்றது என்பதாம்.

முதற்காரணமாயிருத்தலால், படைத்தல் முதலியவற்றிற்கு ஆதாரமாகத் தனது காரிய சமூகத்திற்குப்பின் படிக்கப்பட்டிருக்கின்றது. படிக்கப்பட்டிருக்கின்றதென்னும் வினைச்சொல் மூலத்திலில்லை. சேர்க்கப்பட்டிருக்கிறது. அந்த மாயை பரமகாரணமாயிருத்தலால நித்தியமாயுள்ளது. அந்த மாயையைப் பரமகாரணமாகக் கொள்ளாவிடில் அதற்கும் ஒரு முதற்காரணம் வேண்டப்படும். படவே, வரம்பின்றி ஓடல் என்னும் குற்றம் வரும் என்க.

---

* கந்தம்—கூட்டம்.

அன்றியும், தனது காரியத்தினளவில் வியாபகமாயுள்ளது. அதுவன்றியும் முதற்காரணமாயிருத்தலால் சடமாயுள்ளது. உலகத்தில் கட முதலியவற்றிற்கு முதற்காரணமான மண் முதலியன சடமாகவே காணப்படுகின்றன. பரம காரணமாயிருத்தலால் ஒன்றாயுள்ளது அநேகமெனக் கொள்ளின், கட முதலியனபோல, சடமாயும், அநேகமாயும் இருத்தலால் வேறு காரணம் வேண்டப்படும். படவே, வரம்பின்றி ஓடல் என்னும் குற்றம் உண்டாமென்க. இதுபற்றியே, மேலே பரமாணுக்கள் முதற்காரணமாகாதென்று கூறினோம்.

அவ்வாறாயின், பரமான்மாவே உலகத்திற்கு முதற்காரணமென்று வேதாந்திகள் கூறுகின்றனரே எனில் அது பொருந்தாது எதனாலெனில், பரமான்மாவை முதற்காரணமாகக் கொள்ளின், தத்துவமுதலியன போலச் சடமெனப்பட்டு வழுவாமாதலினென்க. இந்தப் பரமான்மாவையே சேதனப்பிரபஞ்சம், அசேதனப் பிரபஞ்சமென்னுமிவற்றிற்குக் காரணமெனக் கூறில், காரணமான பரமான்மாவும், சேதனாசேதன ரூபமாய் அவயவத்துடன் கூடிக் காரியமெனப் படுமாகலானும், பரமான்மா முதற்காரணமாதல் செல்லாது. எத்தன்மையுடையனவாய் காரியங்கள் தோன்றுகின்றனவோ? அத்தன்மையுடைய காரணத்திலிருந்தே அக்காரியங்கள் தோன்றுகின்றனவென்பது முறைமை. பாஞ்சராத்திரிகளால் கொள்ளப்படும் நாராயணனென்னும் பரப்பிரகிருதியிலும் இக்குற்றமே நிகழும். நியாயம் சமானமாதலால்.

இவ்விடத்தில் இந்த மாயையை, படைத்தல், காத்தல், அழித்தலென்னுமிவற்றிற்குப் பற்றுக்கோடாகக் கூறினமையின், சற்காரியவாதத்தை யனுசரித்து, மகாப்பிரளயத்தில் கலை முதலிய காரியங்கள் சூக்கும ரூபமாய் மாயையினிடமிருக்கின்றனவென்று அறிவிக்கப்பட்டதாம். அவ்வாறே நூல்களில் மகாப்பிரளயத்தில் மாயையைப் பற்றுக்கோடாகக் கொண்டு சத்தி ரூபங்களாக நிற்கும் காரியங்கள், சிருட்டி

காலத்தில் பொருள் ரூபத்தோடு காரியத்தின் பொருட்டுத் தொழிற்படுகின்றன என்று கேட்கப்படுகின்றது. இந்தச் சத்காரிய வாதமானது நம்மால் மிருகேந்திரவிருத்தி தீபிகையில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. (27)

(அ—கை) இவ்வாறு, அசுத்தாத்துவாக்களைக் கூறிவிட்டு, இந்த அசுத்தாத்துவா எதற்கு உபகாரம் செய்கின்றதோ, அந்தத் தத்துவத்தைக் கூறுகின்றார்.

(28) எந்தத் தத்துவத்தின் போகத்தின் பொருட்டு இந்தக் கலை முதலிய சாதனக் கூட்டம் கூறப்பட்டதோ, அந்தத் தத்துவம் பசுவென்னும் பெயருடையதாயும், நித்தியமாயும், வியாபகமாயும், மலத்தால் அறுகிய மறைக்கப்பெற்ற ஞானக் கிரியைகளை யுடையதாயும் உள்ளது என்பதாம்.

யாதொரு ஆன்மாக்களின் கன்ம போகத்திற்காகச் சிறப்பாயும் பொதுவாயுமுள்ள மாயாகாரியங்களின் கூட்டம் கூறப்பட்டுள்ளதோ, அந்த ஆன்ம சமூகம், பசுத்தன்மை என்னும் மலத்தால் அணுவியாய் மறைக்கப்பட்ட ஞானக்கிரியா சத்திகளுடன் கூடியிருத்தலால், பசு என்னும் தத்துவமாகக் கூறப்படுகின்றது. அது பற்றிய மலமானது வேறான தத்துவமாகக் கூறப்படவில்லை எதனாலெனின், பசுத்தன்மையிலேயே அடங்குகின்றமையாலும், அதனையின்றிப் பசுத்தன்மை நிகழாதாதலாலும் என்க. அந்தப் பசுவென்னும் தத்துவம் நித்தியமாயுள்ளது. பௌத்தர்கள் கூறுவதுபோலச் சணிகமில்லை. எதனாலெனின், முன்னர் அனுபவிக்கப் பட்ட விடயத்தைப் பின்னர் நினைக்கின்றமையாலென்க. அன்றியும், கன்மங்களைச் செய்து பின்னர் அக்கன்மபலன்களை யனுபவித்தல் ஆன்மாவிற்குப் பொருந்தாது ஆதலாலும் சணிகமென்று கூறுதல் கூடாது.

அன்றியும், ஆன்மா வியாபகமாயுள்ளது. சமணர்கள் கூறுவதுபோலச் சரீர அளவினதாகவும், விரிதல், சுருங்குதல் என்னும் தர்மங்களை யுடையதாகவும் இல்லை. அவ்வாறுகொண்

டால், சடத்தன்மை, அநித்தியத்தன்மை முதலிய குற்றங்க ளுண்டாம்.

கன்ம பலன்களான போகங்கள் (உயிர்தோறும்) வேறு வேறாகக் காணப்படுதலின், அக்கன்ம பலன்களை யனுபவிக்கும் ஆன்மாக்கள் அநேகமென்பது அருத்தாபத்திப்பிரமாணத்தால் சித்தித்தது. இவ்விஷயத்தை மேலே சங்கிராந்தி வாதத்தை மறுக்குமிடத்துக் கூறவும் போகின்றார். இவ்விடத்தில் * கூடஸ்த நித்தியமான மலத்தோடும் ○ பிரவாக நித்தியமான கன்மத்தோடும், அநாதியே கூடியிருக்கும் ஆன்மாவிற்கு, எப்பொழுது பரமசிவன் முத்தியைத் தரவேண்டுமென்று எண்ணி மலபரிபாகத்திறகாகவும், கன்மங்களை யனுபவிப்பதற்காகவும், மாயா காரியங்களான கலை முதலியவற்றுடன் சேர்க்கையைச் செய்கின்றாரோ, அப்பொழுது அந்த ஆன்மா சகலன் என்று கூறப்படுகின்றது. மகாப்பிரளயத்தில கலை முதலியவற்றின்நாசத்தால், மலம் கன்மமென்னு மிவற்றுடன் கூடிய ஆன்மா பிரளயாகலன் என்றும, ஞானம் யோகமென்னு மிவற்றால் கன்மமும் நசிக்கவே, மலமாத்திரத்துடன் கூடிய ஆன்மா, விஞ்ஞான கலனென்றும் கூறப்படுகின்றன. இவ்விதமான பசு வேறுபாடு நம்மால் தத்துவப் பிரகாச விருத்தியில விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. (28)

(29) தீக்கை, ஞானம் முதலிய சொற்களுக்குப் பொருளாயுள்ள சிவசத்தியால நாசம செய்யப்பட்ட பாசக்கூட்டத்தை யுடையவனும, விளங்கும்படி செய்யப் பட்ட ஞானகிரியாசத்திகளை யுடையவனுமுள்ள அணுவானவன, தத்துவங்களுள் ளே சுத்தாத்துவா வென னும் பெயருடையவனாகின்றான் என்பதாம்.

---

* கூடஸ்த மென்பதற்கு, கொல்லன் உலையிலுள்ள கூடம்போல் இருப்பதென்பது பொருள். அது, ஒன்றாய்க் கெடாதிருத்தலை யுணர்த்தும். ○ பிரவாகமென்பது, முன்வந்த நீரிது பின்வந்த நீரிது வெனப் பிரித்தறியவாராது தொடர்ச்சியாய் வரும் நீர்ப்பெருக்கு.

சிவபெருமானால் ஆசிரியனை யதிட்டித்துச் செய்யப்படுவதும், ஆசிரியனை யதிட்டிக்காமல் நேரே செய்யப்படுவதுமாயிருப்பதும், சிவபெருமான் அனுக்கிரகம் செய்தற்குத் தகுதியுள்ளவர்களை விடயமாகவுடையதுமாயுள்ள, சத்தியின்தொழிற்பாடே தீக்கையென்று கூறப்படுகின்றது. அவ்வித தீக்கை, ஞானம் என்னும் சொற்களுக்குப் பொருளான சிவசத்தியினால் நாசஞ்செய்யப்பட்ட மலம் முதலியபாசக்கூட்டத்தை யுடையவனும், அதுபற்றியே விளங்கும்படி செய்விக்கப்பட்ட, எல்லாப பொருள்களையும் விடயமாகவுடைய ஞானக்கிரியா சத்திகளுடன் கூடினவனும் உள்ள ஆன்மா சுத்தாத்துவா வென்னும பெயருடையவனாக ஆகின்றான்.

அவ்வாறே, ரௌரவாகமத்திலும் எல்லாப் பாசங்களினின்றும் விடுபட்டதாயும, சிவசத்தி கலையில் நிற்பதாயுமுள்ள ஆன்ம தத்துவம், சுத்தம எனனும் பெயருடையதெனக் கூறப்பட்டிருக்கின்றது.

அவ்வாறாயினை, ஞானத்தினாற்றான் முத்தி சித்திக்கிறதென்று வேதாந்திகளும், சாங்கியர்களும் கூறுகின்றனரே எனில, அது பொருந்தாது. எதனாலெனின், மலமானது திரவியமாதலால், கண்களிலுள்ள படலம்போல் ஞானமாத்திரத்தால் நாசமடைகின்றதில்லை. கண்களிலுள்ள படலம் கண்வைத்தியன தொழிலால் நீங்குமாறு போலப் பரமசிவனுடைய தீக்கை யென்னும் தொழிலினாலேயே மலம் நீங்குகின்றமையால் என்க. அவ்வாறே சுவாயமபுவாகமத்திலும் தீக்கையே பாச விமோசனம் செய்து ஆனமாவைச் சிவசம்பந்தமான முத்தியை அடையுமபடி செய்கிறதெனக் கூறபபட்டிருக்கின்றது. (29)

(அ—கை) இந்தச் சுத்தமென்னும் பெயரானது ஆன்மாவிறகுச் சிவாநுக்கிரகம நிகழ்ந்த பின்னர் அதிகாரம் காரணமாயுண்டான சரீரச் சேர்க்கையிறறுன பொருந்தும், சிவசமரூபமான பரமுத்தியில பொருந்தாது. எதனாலெனில், முத்திக்காலத்தில ஆன்மா சிவனாகவே சொல்லப்படுகின்றமையால் என்று கூறுகின்றார்.

(30) இந்த ஆன்பாவானவன், சிவனால் விளக்கஞ்செய்விக்கப்பட்ட தனது சத்தி ரூபமான அறிவால், சிவனைத் தியானஞ் செய்கின்றான். பார்க்கவுஞ் செய்கின்றான். தன்னுடைய உபகாரத்தின் பொருட்டும், பிறருடைய உபகாரத்தின் பொருட்டும் மந்திரங்களினால் பரமசிவனைப் பூசிக்கவுஞ் செய்கின்றான் என்பதாம்.

இந்தச் சுத்தனான ஆன்மா, சிவனால் விளக்கம் செய்விக்கப்பட்ட தனது சத்திரூபமான அறிவா சிவனைத் தியானஞ் செய்கின்றான். பார்க்கவுஞ் செய்கின்றான். இவ்வாறே, மோக்ஷகாரிகையிலும், "சிவனென்னும் சூரியனுடைய சத்திரூபமான கிரணத்தால் விளக்கஞ் செய்யப்பட்ட அறிவு என்னும் கண்ணால், ஆன்மா மறைப்பு நீங்கினவனாய், சத்தி முதலியவற்றுடன் சிவனைப் பார்க்கின்றான்" என்று கூறப்பட்டிருக்கின்றது. அதுபற்றியே, பாதஞ்சலர்கள் கூறுவதுபோல், சிவனுக்குப் புத்தி முதலியவற்றிற்கு விஷயமாயிருக்குந் தன்மை பொருந்துகிறதில்லை. எதனாலெனின், பரமசிவன் பாசங்களுக்கு விஷயமாகாதவன் ஆகலாலென்க. இவ்விடயமும் மோக்ஷ காரிகையிலேயே, புத்தியின் தொழிலாகிய யாதொரு ஞானமுண்டோ, அது விலங்கு முதலியனபோலப் பாசமாயிருத்தலால், பரமேசுவரனை விளங்கச் செய்வதற்குச் சமர்த்தமாகிறதில்லையென்று கூறப்பட்டிருக்கின்றது.

அன்றியும், இந்த ஆன்மா தன்னுடைய உபகாரத்தின் பொருட்டும், பிறருடைய உபகாரத்தின் பொருட்டும், அந்தப் பரமேசுவரனையே அநேக யாகங்களால் வழிபடுகின்றான். அவ்வாறே, ரௌரவாகமத்தில், மந்திரம், தந்திரம் என்னும் இவற்றில் சமர்த்தராயும் குருவினாலும், நூல்களினாலும் அனுமதி பெற்றவராயும் தீக்கையால் நீங்கிய மும்மல முடையவராயுமுள்ள பெரியோர்கள் அவனையே அநேக யாகங்களினால் வழிபடுகின்றனரென்று கூறப்பட்டிருக்கின்றது.

அவர்களுள், ஆசிரியர்களும், சித்திபேசுவரர்களும், அதிகாரம் நசித்துத் தனக்கு உபகாரம் நிகழ்வதின் பொருட்டும்,

போகத்தையும் முத்தியையும் உபகரிக்கும் ரூபமான பிற ருடைய உபகாரத்தின் பொருட்டும் வழிபடுகின்றனர். சாத கன், புத்திரன் என்னுமிவர்கள், தனக்குப் போகமோக்ஷம் நிகழ்வதின்பொருட்டே வழிபடுகின்றனர். இவ்வாறு வேற் றுமை கண்டுகொள்க. (30)

(அ—கை) அவர்களுக்குள் மாயாகர்ப்பாதிகாரியான ஈசு வர தத்துவத்தைக் கூறுகின்றார்.

(31) மண்டலேசுவரர், ஸ்ரீ கண்டர், குரோதேசர், வீர பத்திரருடன் கூடிய நூறு உருத்திரர் என்னுமிவர்கள், பரமே சுவரனால், கலை முதலியவற்றின் சம்பந்தத்தால் விளங்கும்படி செய்யப்பட்ட ஞானக்கிரியா சத்திகளையுடையரா யிருக்கின்ற னர் எனபதாம்.

அவர்களுள், மண்டலேசுவரர் எண்மர். இவர் கலையி னுடைய மத்தகத்திலிருப்பவர். அவ்வாறே, ரௌரவாகமத் தில் "மண்டலாதிபதிகளால் தத்துவமார்க்கத்தில் பிரதிட்டை செய்யப்பட்ட யாதொருவர்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஸ்ரீ கண்டர் குணதத்துவத்தை இருப்பிடமாக உடையவர். அதற்குக் கீழேயுள்ள புவனங்களுக்குக் கருத்தாவாக உள்ளவர்.

குரோதேசர்—குணமத்தகத்திலுள்ளவர். எண்மர்.
நூறு உருத்திரர்—பிரமாண்டத்தைத் தரிப்பவர்.
வீரபத்திரர்—நூறு உருத்திரர்களையும் அதிட்டிப்பவர்.

இவர்களனைவரும் பரமசிவனால் விளங்கும்படி செய்யப் பட்ட ஞானக்கிரியா சத்திகளையுடையவர். அதுபற்றியே, இவர்களுக்கு அதிகாரம் காரணமாக நிகழ்ந்த கலை முதலியவற் றின் சேர்க்கை இருப்பினும், இவர்கள் பசுக்கள்போல விபரீத உணர்வின் சேர்க்கையை யடையார்கள். எதனாலெனின், சிவ னால் நேரே அனுக்கிரகம் செய்யப்பட்டவராதலாலென்க. அவ்

வாறே பெரியோர்களும். கலையின் சேர்க்கை யிருப்பினும், இவர்கள் அக்கலைக்குப் பசுக்கள் வசிபராயிருத்தல் போல வசியரல்லர் என்று கூறியிருக்கின்றனர். அவர்களுக்குக் கலை முதலியவற்றின் சேர்க்கையும் அநந்ததேவரால் செய்யப்பட்டது. அவ்வாறே, சுத்தாத்துவாவில் பரமசிவன் கருத்தா. அசுத்தாத்துவாவில் அநந்ததேவர் கருத்தாவென்று நூல்களில் கேட்கப்படுகின்றது. (31)

(32) அவர்கள் தத்தமக்குட்பட்ட இடத்தில் பரமசிவனுணையால் புருடர்களுக்கும் போகமுக்திகளைத் தருகின்றனர். இந்த அபரமந்திரேசுவர தத்துவமானது, மாயாகாரியத்திற்கு அதிகாரியாயிருக்கின்றது என்பதாம்.

சுலோகத்தின் பிற்பகுதியால் இந்த அபரமந்திரேசுவரர் தத்துவம் மாயாகர்ப்பாதிகாரி யென்று கூறுகின்றார் (32)

(அ—கை) இவ்வாறு, அபரமந்திரேசுவரர்களைக் கூறிவிட்டு, மந்திரேசுவரர்களைக் கூறுகின்றார்.

33) சிருட்டி ஆரம்பத்தில் ஏழுகோடி ஆன்மாக்கள், பரமேசுவரனால் நாசஞ்செய்யப்பட்ட மறைப்புடையராயும், அதுபற்றியே விளக்கச்செய்யப்பட்ட ஞானக்கிரியாசத்திகளையுடையராயும் உள்ளார். விளக்கும்படி செய்யப்பட்ட ஞானக்கிரியைகளை யுடையராயிருத்தலின் இந்தத்தத்துவம் மந்திரமென்னும் பெயருடையது என்பதாம்.

இவ்விடத்தில் விஞ்ஞான கேவலர் எண்மரைத்தெரிவித்தாரென்று கருதி இருத்தலாலும், சுத்தாத்துவாவிலிருப்பவராதலாலும், விஞ்ஞான கேவலர்களின்நடுவில் பரிபாகமடைந்த மலமுடையவரையே, அவரவர்களின் பாக வேற்றுமைக்குத் தக்கவாறு, வித்தியேசுவரத் தன்மையிலும் மந்திரேசுவரத் தன்மையிலும் பரமேசுவரன் ஏவுகின்றார். அசுத்தாத்துவாவிலிருத்தலால், பக்குவமடையாத மலமுடையவர்களான பிரளயாகலர்களையே அபரமந்திரேசுவரத் தன்மையில் ஏவுகின்று

என்று எண்ணத்தகுந்தது. இவ்விடத்தில் மந்திர என்னும் சொல்லானது, மனனம், திராணம் என்றுபிரிக்கப்படும் அவற்றுள், மனனம் என்பது எல்லாமறிதல். திராணமென்பது சமுசாரிகளையனுக்கிரகித்தல். இவ்விரண்டிற்கும் தருமியாயிருத்தலால் மந்திரமென்று வழங்கப் படுகின்றதென்று கேட்கப்படுதலால், சிவன் சத்தி என்னுமிவர்களாலனுக்கிரகிக்கப் பட்டவர்களை, மந்திர என்னும் சொற்குறிக்கின்றது. இவர்களைக்கூறும் சொற்களுக்கும் உபசாரமாய் மந்திரத்தன்மையென்று கூறப்போகின்றோம். மலமற்றவராதலால் இவர்கள் விளங்கும்படி செய்யப்பட்ட ஞானக் கிரியையினையுடையர் எல்லா மறிதல் முதலிய தருமங்களின் சேர்க்கையாலும், சுத்தவித்தியா தத்துவத்தி லிருத்தலாலும், ரௌரவம் முதலிய சிவாகமங்களில் மந்திரதத்துவமென்று கூறப்பட்டிருக்கின்றனர். அதுபற்றியே, சுத்தவித்தையில் சேர்ப்பதற்குமுன், மாயையின் மேல் என்னுந்தானத்திலேயே மலத்தின் நாசமானது தீக்ஷையில் ஆசிரியரால் செய்யத்தகுந்ததென்று பெரியோர்கள் கூறுகின்றனர். (33)

(அ—கை) பின்னர் இந்தமந்திரேசுவரர்களுக்கு, ஆன்மாக்களுக்கு அனுக்கிரகம் செய்வதிற் காரணமாயிருக்குந் தன்மையைக்கூறுகின்றார்.

(34) உலகத்தின் அனுக்கிரகத்திற்காக அவர்களுள், மந்திரேசுவரர்களின் பாதி பாகமானது, ஆசிரியன் வடிவத்தை யதிட்டிக்காமல் பரமேசுவரனால் ஏவப்பட்டு அந்தப்பரமசிவனால் அனுக்கிரகிக்கப்பட்ட புருடர்களை அனுக்கிரகஞ்செய்து முத்தியை யடைகின்றது என்பதாம்.

அந்த எழுகோடி எண்ணுள்ள உயிர்களுக்குள் பாதி பாகம் ஆசிரியனை யதிட்டிக்காமலே ஈசுவரனால் ஏவப்பட்டு அந்த ஈசுவரனுடைய அனுக்கிரக சத்திக்கு உரியரானபுருடர்களை அனுக்கிரகித்து, சிருட்டிக்குப் பின்னரே சிவானுக்கிரகத்தை அடைகின்றது. சிவானுக்கிரகத்தை என்னும் செயப்படுபொருள் மூலத்திலில்லை. சேர்த்துக்கொள்ளப்பட்டது.

அவ்வாறே, பிருகேந்திரத்திலும், மகதிரேசுவரர்களுள் பாதிபாகமானது எல்லாமாயாகாரியமான அத்துவாவிலும் ஆசிரியனை யதிட்டித்து அதிகாரஞ்செய்து திதிகால முடிவில் சிவனையடைகின்றது. மற்றொரு பாதியானது, ஆசிரியனையதிட்டிக்காமல மூலப்பிரகிருதியின் காரியத்திற்குக் கீழ் அதிகாரத்தைச்செய்து பரமசிவனை அடைகின்றதெனக் கூறப்பட்டிருக்கின்றது.

அவர்களுள், மலபரிபாகம் மிகுதியுமுடையோர் சிருட்டிக்குப் பின்னர் முத்தியடைகின்றனர். மலபரிபாகம் மிகுதியற்றவர் சங்காரகாலத்தில் முத்தியடைகின்றனர். (34)

(அ—கை) ஆதலாற்றான் மற்றப்பகுதியின் தொழிலைக் கூறுகின்றார்.

(35—36) சிவனால் செய்யப்பட்ட மண்டலங்கள் மந்திரங்களென்னும் இவற்றோடு கூடிய மற்றொரு பாதியானது ஆசிரியவடிவத்தோடு கூடியிருக்கும் பரமசிவனால் ஏவப்பட்டு, தீக்கையென்னும் பெயரையுடைய தொழிலால் விரைவாகப் பசுவினுடைய மலம், கன்மம், மாயை என்னும் இவற்றின் தொழில்களை, விடத்தைப்போல நாசஞ்செய்கின்றது. வழிபாடு செய்யப்பட்டுச் சாதக சிரேட்டரானவருக்கு அநேகவிதங்களான சித்திகளையும் கொடுக்கின்றது என்பதாம்.

சிவபெருமானால் பசுவினுடைய அனுக்கிரகத்தின் பொருட்டு உண்டுபண்ணப்பட்ட மகா மண்டலம், வித்தியாங்கம் முதலிய மண்டலங்களோடும், அம்மண்டலங்களில் பூசை செய்யத்தகுந்ததாய் நூல்களிற் கூறப்பட்ட மந்திரங்களோடும் கூடிய மற்றொரு பாதியானது, ஆசிரியன் வடிவத்தை யதிட்டித்த பரமசிவனால் ஏவப்பட்டு உயிரினுடைய மலகன்ம மாயாகாரியங்களை, மந்திரமானது விடத்தை நாசஞ்செய்வதுபோல் விரைவில் நாசஞ்செய்கின்றது. அதுபற்றியே சகலருக்கே ஆசிரியனையதிட்டித்த சிவபெருமானால் அனுக்கிரகம் நிகழ்கின்றது. மண்டலங்களின் சேர்க்கை சகலருக்கே இருத்தலாமென்க.

இவ்விடத்தில் மலமானது ஒன்றாயும் அநேக ஆன்மாக்களை மறைக்கும் அநேகசத்தியுடன் கூடினதாயும், நித்தியமாயும், வியாபகமாயும் இருக்கின்றது என்றவாறும். அவ்வாறே, நூல்களினும் சகல உயிரிடத்தும் அநாதி சேர்க்கையுள்ளதாய், வியாபகமாய் ஒவ்வொரு உயிர்களிடத்தும் தன் தன் பரிபாக காலமுடிவில் நசிக்கும் அநேக சத்தியையுடையதாய் யாதொரு மலமிருக்கின்றதோ என்று கேட்கப்படுகின்றது. ஆதலால் எந்தமல சத்திக்குப் பரிபாகமுள்ளதோ, அதற்கே தீக்கையால் தடையுண்டு. மற்றவற்றிற்குத் தடையில்லை யென்று கொள்கிறோம். ஆதலால், மலத்தை ஒன்றென்று கூறின் ஒருவர் முத்தியடையுங்கால் அனைவரும் முத்தியடையவேண்டு மென்னும் வினாவிற்கு விடையளிக்கப்பட்டது.

தருமம் அதரும மென்னும் கன்மமானது ஒவ்வொரு உயிருக்கும் இன்றியமையாதது. நீர்ப்பெருக்குப்போல் அநாதியாயுள்ளது. வடமொழி மூலத்திற் கூறப்பட்டபோகி என்னும் சொல்லிற்குக் காரணமென்பது பொருள். அதாவது மாயை யென்பது கருத்து. சிறப்பாயும் பொதுவாயுமுள்ள மாயாகாரியங்களனைத்தும் கன்மத்தைக் காரணமாகக்கொண்டு இடையே வந்தன வாயினும், அவையும் நீர்ப்பெருக்குப்போல அநாதியாயுள்ளனவேயாம்.

கன்மத்துக்கும் சரீரத்திற்கும் உண்டான சம்பந்தம் வித்துக்கும் முளைக்கு முண்டான சம்பந்தம் போல் அநாதியாகவே சித்தித்திருக்கின்றமையால், மந்திரத்தை மேற்கொண்ட விடவைத்தியனுடைய தொழிலால் விட நீக்கம் காணப்படுவது போல், மந்திரத்தைக் காரணமாகக்கொண்ட பரமசிவனுடைய தீக்கை யென்னுந் தொழிலால் இந்த மல முதலியவை நாசமடைகின்றன. ஆதலால், மந்திரேசுவரர்கள் பரமசிவன் அனுக்கிரகஞ் செய்யும் விஷயத்தில் காரணமாயிருக்கின்றனர். பரவித்தியேசுவரர், அபரவித்தியேசுவரர்கள் அனுக்கிரகத்திற்குக் கருத்தாவாயிருக்கின்றனர் என்பது வேற்றுமை. அன்றியும், இந்த மந்திரமானது மற்றொரு காரியத்தின் பொருட்டுப்

போகத்தை இச்சிக்கும் சாதகர்களால் பூசிக்கப்பட்டு அநேக விதங்களான சித்திகளையும் அளிக்கின்றன. அவ்வாறே சௌர வாகமத்திலும், கணபதி குருவின் மண்டலத்தில் உற்பத்தி யுடையவர்களாயும் தீக்ஷையால் பரிசுத்தர்களாயும் மந்திரசித்தி யுடையவர்களாயு முள்ளவர்கள் பால சூரியமண்டலம் போல் விளங்கும் வடிவமுடையவர்களாய் வெகுகாலம் அநேக தேவ தாசிகளுடன் கூடிச் சகல போகங்களையு மனுபவித்து இறுதி யில் ஆசையற்றவர்களாய் பரம ஐசுவரியமான சிவஸ்தானத்தை யடைந்தவர்களாக ஆகின்றனர் என்று கூறப்பட்டிருக்கின் றது. (35—36)

(அ—கை) அவ்வாறாயின் தீக்ஷையால் ஆன்மாவுக்குப் பாச நாசம் நிகழ்ந்திருக்கிற தென்பது எவ்வாறு அறிய முடியு மென்னும் ஆசங்கைக்குச் சமாதானம் கூறுகின்றார்.

(37) முக்கியமான பிரமக்கொலை என்னும் பாவத்திலிரு ந்து தீக்ஷையினால் சுத்தியடைகிறான் என்று, நம்பிக்கையால் விடத்தின் நாசம்போல், துலையிலேற்றிப் பாசத்தின் நாசத்தை யறிக என்பதாம்.

தீக்ஷை செய்துகொண்டபின் மகா பாவங்களைச் செய்த வனுக்கும் பாவநீக்கம் காணப்படுகின்றது. அது எவ்வா றெனில், ஸ்ரீமத் காலோத்தரம் முதலிய ஆகமங்களில் கூறப் பட்டவாறுபோல், மந்திரத்தினால் பெறப்பட்ட திராசில் ஒரு புருடனை முன்னர் ஏறச்செய்து அவனுடைய கனத்தன்மை யைப் பரீக்ஷித்துப் பின்னர் உத்காத மந்திரங்களை ஜெபித்து அவனுக்குச் சுத்திசெய்வித்து மறுபடியும் அவனைத் திராசில் ஏற்றிவைக்குங்கால் அவனிடத்தில் இலகுத்தன்மை காணப்படு கின்றது. இது நிர்ப்பீச தீக்ஷை முதலிய வேறு ஞானங்க ளுக்கு உப லக்கணமாகக் கூறப்பட்டது. ஆகையால் நம்மால் காணப்படும் இவ்விதமான நம்பிக்கையால் பாம்பாட்டியி னுடைய செயலால் விடம் நீங்குவதுபோல் பரமேசுவரன் செயலான தீக்ஷையால் மலத்திற்கு நாசஞ் சித்தித்ததென்று அறியத்தகுந்தது.

ஆதலினாற்றான், உலகில் பயனுடையதாய்க் காணப்பட்ட விட நீக்கம், பூத நீக்கம், இரசவாதம் முதலிய காரியங்களில் அவற்றைக்கூறும் சாஸ்திரங்களைப் பிரமாணமாகக் கொள்ளுவது போல், கண்ணுக்குப் புலப்படாத அதிருஷ்ட ரூபமான தீக்கையைக் கூறும் சாஸ்திரமும் பிரமாணமென்று ஊகிக்கிற படியால் அச்சாஸ்திரங்களைக் கூறிய பரமேசுவரன் மேலான ஆப்தனென்று சித்தித்தது. அவ்வாறே நூல்களிலும் விட நீக்கம், மந்திரவாதம், இரசவாதம் முதலிய காரியங்கள் பயனுடையன வாகையால் இவற்றின் கர்த்தா ஆப்தனென்று கொள்ளப்படுகிறானெனக் கூறப்பட்டிருக்கின்றது. (37)

(அ—கை) அவ்வாறாயின் தீக்கையால் சகல பாவங்களும் நசிக்குமானால் அக்காலத்திலேயே சரீரம் நசிக்கட்டும் என்பார்க்குச் சமாதானம் கூறுகின்றார்.

(38) பிற்காலத்தில் பயனளிக்கும் கன்மம் நசிப்பதால் தீக்ஷிதர்கள் அவனவருடைய சரீரமும் நாசமடைகிறதில்லை. நிகழ்கின்ற பயனையுடைய பிராரப்த கன்மத்தை நசிக்கச் செய்யும் தீக்கையும் ஒன்றுளது என்பதாம்.

பிற்காலத்தில் பயனளிக்கும் கன்மங்கள்தான் சத்தியோர் நிருவாண தீக்கையில் நசிக்கின்றன. பிராரப்த கன்மம் பயனளித்துக் கொண்டிருத்தலால் அது நசிக்கிறதில்லை. ஆதலால், தீக்கை நிகழ்ந்த பின்னர் தேகம் இருப்பின் ஒருவிதமான குற்றமில்லாமை காண்க. அவ்வாறே கிரணாகமத்திலும், யாதொரு பிராரப்த கன்மத்தால் அநேகம் பிறவிகளில் ஆன்மாக்களால் சம்பாதிக்கப்பட்ட கன்மமும் வருங்கன்மமும் தீக்கையில் வறுக்கப்பட்ட வித்துப்போலத் தடைசெய்யப்பட்டிருக்கின்றதோ, அந்தப் பிராரப்த கன்மம் போகத்தினால் நசிக்கின்றதென்று கூறப்பட்டிருக்கின்றது. மல பரிபாகம் மிகுதியாயிருந்தால் சத்தியோ நிருவாண தீக்கையினாலேயே பிராரப்த கன்மமும் நசிக்குமென்று பிராரப்த கன்மத்தை நசிக்கச் செய்யும் தீக்கையுமொன்றுளது என்பதனால் கூறுகின்றார். ஆனால்,

அப்பொழுதும் வாசனை காரணமாய் சரீரம் சிறிதுகாலம் இருக்கவே செய்யும். அவ்வாறே பெரியோர்களும், வாசனைகாரணமாய் சுற்றிவிடப்பட்ட சக்கரம்போலச் சிறிது காலம் ஆன்மா சரீரத்தை வகித்துக்கொண் டிருக்கின்றா னெனக் கூறுகின்றனர். (38)

(அ—கை) இப்பொழுது பின்னர்ச் செய்யப்படும் கன்மமும் தடைபெறும் என்று முன்னர்க் கூறியதை விரித்துரைக்கின்றார்.

(39) தீக்கைக்குப் பின்னர் கன்மங்களைச் செய்தாலும் விசேஷ சாஸ்திரங்களின் சேர்க்கையா லுண்டானதாயும் பிரதானமாயு மிருக்கும் கன்மங்களல்லாத ஏனைய கன்மம உவர்ப் பூமியில் விதைககப்பட்ட விதைபோலப் பலனளிக்காது என்பதாம்.

தீக்கைக்குப் பின்னர் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிறதென்று செய்யபபட்ட (இஷ்டாபூர்த்தம்) அதாவது வேள்வி செயதல், குளமுதலியன தோண்டுதல் முதலிய கன்மமானது தீக்கையால் தடைப்பட்ட சத்தியுடன் கூடியிருத்தல்பற்றிப் பின்னர் சரீர சேர்க்கை ரூபபலனைக் கொடுக்கிறதில்லை. விசேட சாத்திரத்தால் விதிக்கப்பட்டதாயும் சாதகனால் அனுட்டிக்கப்பட்டதாயுமுள்ள மந்திரஜெபம், ஆராதனம் முதலிய கன்மமானது பயனை யளிககவே செய்யும். அவ்வாறே சுவாயம்பு வாகமத்தில் எந்தச் சித்த புருடன் எவ்விடத்தில் போகங்களை விரும்புகிறானோ அவிடத்தில் மந்திர சாமர்த்தியத்தால் ஏவப்பட்டிருக்கிறானென்று கூறப்பட்டிருக்கின்றது. அன்றியும் மோக்ஷத்தில் விருப்பமுள்ளவன் விசேட சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட கன்மததைச் செய்யாமலிருந்தாலும் அச்சாஸ்திரங்களில் விலக்கப்பட்ட கன்மத்தைச் செய்து பிராயச்சித்தம் செய்துகொள்ளாம லிருந்தாலும், அவனுக்குப் பாவத்தின் சேர்க்கை சாஸ்திரங்களில் கேட்கப்படுகின்றது. அதாவது சாஸ்திர ரூபமான ஏவுதலைத் தாண்டினால் நூறு வருட காலம்

வேடனுயிருக்குந் தன்மை கூறப்பட்டிருக்கிற தென்க. சாமான்ய சாஸ்திரத்தால் விதிக்கப்பட்டதா யிருந்தாலும் வருணாச்சிரமங்களுக் குரிய கன்மங்கள் செய்யத் தகுந்தனவே யாம். அவ்வாறே சாஸ்திரங்களிலும் "இவ்வாறு வருணம், ஆச்சிரமம், அவற்றிற் குரிய செயல்கள், என்னுமிவற்றை மனத்தாலும் தாண்டக்கூடாது. எந்தப் புருடன் எந்த ஆச்சிரமத்தினின்று பரமசிவ ரூபமான தீக்கையைப் பெற்றிருக்கின்றானே அவன் அந்த ஆச்சிரமத்தினின்றே சிவதர்மத்தைக் காக்கக் கடவன்" என்று கேட்கப்படுகின்றது. (39)

(அ—கை) அவ்வாறயின் தீக்கைபெற்ற பிறகு சமயத்தைத் தாண்டுதல் முதலிய பாவங்களைச் செய்து பிராயச்சித்தம் செய்துகொள்ளாத புருடனுக்கு மோக்ஷம் உண்டா இல்லையா என்னும் ஆசங்கைக்குச் சமாதானம் கூறுகின்றார்.

(40) மோகத்தால் செய்யப்படாத கன்மத்தையுடைய புருடன் சிறிது காலம் பிசாசுகளுக் கதிபனுயிருந்து பின்னர் நிர்மல சொரூபமுடையவனுய்ப் பரமசிவனோடு சமத்தன்மையை யடைகின்றானென்பதாம்.

இவ்விஷயத்தில் தீக்கைக்குப் பின்னர் ஸ்நானம் பூஜை முதலிய சமயாசாரத்தின் செயலால், ஆரம்பிக்கப்பட்ட காரியத்தையுடைய பாசத்திற்கு நாசமானது, ஒவ்வொரு தினமும் குறைதல் ரூபமாகச் செய்யப்படுகின்றது. ஆகையால் சாபேக்ஷ தீக்கையுடைய (அதாவது விருப்பத்துடன் தீக்கைபெற்ற) சாமர்த்தியமுடையோர் அவரவர் சமயாசாரத்தை விசேடமாகச் செய்யக்கடவர். சாமர்த்தியமற்ற நிரபேட்ச தீக்கை யடைந்த பாலர்களுக்கு கன்னல் முடிந்த மட்டும் ஆசிரியனுக்குத் தொண்டு புரிதல், சிவ பூஜை செய்தல் முதலியன செய்யத் தகுந்தவை. ஆனதுபற்றியே இவ்வித கன்மங்களின் செயலைக் கொண்டு இவன் தீக்கை கிரம்பப்பெற்றவனென்பது ஊகிக்கப் படுகின்றது. ஆகையால் எவனுக்கு மல பரிபாக மிகுதியால் மிகத்தீவிரமான சத்திநிபாதமும், தீக்கையில்குறைவின்மையும்,

சமயத்தைத் தாண்டாமலிருத்தலுமிருக்கின்றனவோ, அவனுக்கே தேகநாசத்துக்குப்பின்னர் மோக்ஷம்நிகழ்கின்றது. மலபரிபாகக் குறைவால் மிகவும் குறைவான சத்தி நிபாதமுடைய எந்தப் புருடன் தீக்கை நிரம்பிய பின்னர் தெய்வ வசத்தினாலாவது அல்லது மனித வசத்தினாலாவது சமயத்தைத்தாண்டுகின்றானோ, அவன் தனது சமயத்திற்குரிய கன்மங்களைச் செய்யாதவனும், தவறுதலுக்கு பிராயச்சித்தம் செய்து கொள்ளாதவனுமாய்ச் சமயத்தைத் தாண்டினதற்கு, பிசாச ராஜ ரூபமான பயனை காமியப் பயன்களைப்போல அநுபவித்துப் பின்னர் நின்மல சொரூபனாய் பரமசிவனுடன் சாமியரூபமான மோட்சத்தை யடைகின்றான். அவ்வாறே, சாஸ்திரங்களும் பிராயச்சித்தத்தால் சுத்தியடைந்த புருஷனுடைய புத்தியானது சுத்தமாகக் கூறப்பட்டிருக்கின்றதென்று கூறப்பட்டிருக்கின்றது. எவன் இவ்வுலகில் காணப்படும் அநித்தியமான சிற்சில பயனை விரும்பி வியாசமான குருபத்தியோடு தீக்கைபெற்றுக்கொண்டு தனது சமயத்துக்குரிய கன்மங்களை அனுட்டிக்காமலிருக்கின்றானோ அவனுக்குத் தீக்கை முடிவடையவில்லை. செய்துவைத்த ஆசிரியனும் பாவச் சேர்க்கையுடையவனாகின்றான். அவ்வாறே சாஸ்திரங்களில் பொய்த் தீக்கை பெற்றுக்கொண்டவன் பெற்றுக்கொள்ளாதவனாவான். அவனுக்குத் தீக்கை செய்வித்த ஆசிரியன் பாவமுடையவனாகின்றான். ஆசிரியன் அந்தப் பாவத்தைத் தொலைப்பதற்காக, தான் மறுபடியும் தீக்கை செய்துகொள்ள வேண்டுமென்று கூறப்பட்டிருக்கின்றது. (40)

(அ—கை) இவ்வாறு இடையே தொடர்ந்த தீக்கையின் பயனைக் கூறிவிட்டு முன் தொடர்ந்த விஷயத்தில் மந்திரங்களுக்குப் பின்னர் மந்திர மகேசுவரர்களைக் கூறுகின்றார்.

(41) மந்திரர் முதலியோரின் சிருட்டிக்கு முன்னரேயே பரமசிவனால் அணுக்கள் எண்மர் நாசஞ்செய்யப்பட்ட மலமுடையவர்களாயும் எல்லாப் பொருள்களையும் விஷயமாகச்

செய்யும் ஞானக் கிரியாசாமர்த்திய முடையவர்களாகச் செய் யப்பட்டவர்களாயு மிருக்கிறார்களென்பதாம்.

மந்திரர்களின் சிருட்டிக்கு முன்னரேயே அணுக்கள் எண் மர் பரமசிவனால் நீக்கஞ் செய்யப்பட்ட மலமுடையவர்களாயும் அதுபற்றியே விளங்கச் செய்யப்பட்ட ஞானக்கிரியா சத்தி யுடையவர்களாயுமிருக்கும் விஞ்ஞான கேவலர்களாகச் செய்யப் பட்டார்கள். அவ்வாறே மிருகேந்திரத்திலும், இவ்வாறு இருத்தலில் மல பரிபாகத்தை யனுசரித்து நாசமடைந்த மாயை கன்மங்களையுடைய வித்தியேச பதத்திற்கு யோக்கியரான அணுக்கள் எண்மரை வாமம் முதலிய ஒன்பது சத்திகளுடன் கூடி எழு கோடி மந்திரங்களைப் பரிவாரமாகவுடைய விஞ்ஞான கேவலர்களாகச் செய்கிறாரெனக் கூறப்பட்டிருக்கின்றது. (41)

(அ—கை) அந்த வித்தியேசுவரர்கள் யாவர்? என்ன தொழில் செய்கின்றனர்? என்னு மாசங்கைக்குச் சமாதானம் கூறுகின்றார்..

(42) அநந்தேசுவரர் முதலிய அந்த வித்தியேசுவரர்கள் பதியாயிருத்தலால் மந்திரர் முதலியோரை ஏவுகின்றனர். பரமசிவனுடைய இச்சையால் ஏவப்பட்டவர்களாய் படைத்தல் காத்தல் அழித்தல் அநுக்கிரகித்தல் முதலிய கன்மங்களைச் செய்கின்றனர் என்பதாம்.

அந்த அநந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டி என்னும் பெய ருடைய வித்தியேசுவரர்கள் மந்திர மகேசுவரர்களா யிருத்த லால் மந்திரர் முதலியோரை ஏவுதல் செய்கின்றனர். அன்றி யும், படைத்தல் முதலிய நான்கு தொழிலையும் அவற்றிற்கு இன்றியமையாத அனுபவ ரூபமான திரோபவத்தையும் செய் கின்றனர். அவ்வாறே, ரௌரவாகமத்தில், படைத்தல், காத் தல், அழித்தல், மறைத்தல், அனுக்கிரகித்தல் என்னுமிவற் றைச் செய்கின்றனர் என்று கூறப்பட்டிருக்கின்றது. பரமசிவ

னுடைய இச்சையால் ஏவப்பட்டவர்களாய் என்பதனல் இவர்கள் ஐந்தொழில்களுக்கு அதிகாரிகளாயிருக்கும்இவர்களுக்குச் சிவசாமிய மின்மையைக் கூறுகின்ருர். இவர்கள் அதிகார மலச் சேர்க்கையுடையவர்களாதலால் ஏவத்தகுந்தவர்களா யிருப்பதுபற்றி இவர்களுக்குப் பரமசிவனைக் காட்டிலும் கருத்தாவா யிருக்குந் தன்மை ஒரு கலை அளவாகக் குறைந்திருக்கின்றது. மந்திர மந்திரேசுவரர்களுக்கு இவர்களைக் காட்டிலும் கருத்தாவா யிருக்குந் தன்மை குறைந்திருக்கின்றது. அதுபற்றியே சாஸ்திரங்களில் அநந்தருக்கு ஏனையோரைக் காட்டிலும் மேலான தன்மை கேட்கப்படுகின்றது. எவ்வாறெனில், அனந்த சித்திகளையுடைய அவர்களுள், அநந்தர் மேலானவராயிருக்கிருர் என்பதால் என்க.

எவற்றையும் அறியும் விஷயத்தில் அனைவரும் சமமாகவே இருக்கின்றனர். எதனுலெனின், நூல்களில் விசேடங் காணப்படாமையாலென்க. இவர்களனைவருக்கும் மகாப்பிரளயத்தில் அதிகாரம் நீங்குதலால் மோட்சம் நிகழ்கின்றதென்று ரௌரவத்தில் கூறப்பட்டிருக்கின்றது. எவ்வாறெனில், அநந்தருடைய ஒடுக்கத்தில் மகான்களாயும், சக்கரவர்த்திகளாயு மிருக்கும் அவர்களுக்குச் சர்வ கருத்திருத் தன்மைக்குக் காரணமான மேலான ஸ்தானமானது விதிக்கப்பட்டிருக்கின்றது என்பதாலென்க. (42)

(அ—கை) இது இவ்வாருக ஈசுவரத் தத்துவத்திலிருப்பவர்களான இவர்கள் மந்திர மகேசுவரர்களென்று கூறப்படுகின்றன ரெனக் கூறுகின்ருர்.

(43) சுத்தாத்துவா அசுத்தாத்துவா என்னும் இந்த இரண்டிலும் அணுக்களும் அணுக்களின் பதிகளும் இந்த மந்திரேச தத்துவமாகின்றனர். யாதொரு காரணத்தால் சொல்லானது பொருளில்லாததாக ஆகாதோ அந்தக் காரணத்தால் சொற்களாயுள்ள மந்திரங்களுக்குப் பொருள்களாயிருக்கின்றனர் என்பதாம்.

சுத்தா சுத்த ரூபமான இரண்டு விதமான அத்துவாவி லும் மனனம் திராணம் என்பவற்றின் பொருளான எல்லா மறிதல், சமுசாரிகளை யனுக்கிரகித்தல் என்னும் தருமங்களுடன் கூடிய அணுக்களும் அவ்வணுக்களின் பதிகளும் மந்திரேசுவரர் என்றும், மந்திர மகேசுவரர் என்றும் கூறப்படுகின்றனர். இதனால் அசுத்தாத்துவாவி லிருக்கும் பாசமுடையோர்களும் மந்திரர்களாகின்றனரென்று அறிவிக்கப்பட்டது. அவ்வாறே பெரியோர்களும் பிரமா, விஷ்ணு முதலியோர் பிரதானர்களான மந்திரர்கள். புவனண்டத்தி லிருப்பவர்களாயும், பாசப் பற்றுடையவர்களாயும், சத்துவ, ராசச, தாமசர்களாயுமிருக்கும் அணுக்களும் மந்திரர்களாவரெனக் கூறுகின்றனர். அது பற்றிப் பிற்பகுதியால் பொருளைத் தெரிவிக்கும் சொற்கள் சடமாயிருத்தலால் மனனம், திராணம் எனப் பிரிக்கப்பட்டு எல்லா மறிந்திருத்தல், சமுசாரிகளைக் காத்தல் என்னும் தருமம் மந்திரத்திற்குச் சம்பவியா தாகையால் அம்மந்திரங்கள் பொருள்களி னறிவுக்குக் காரணமா யிருப்பதுபற்றி உபசாரமாய் மந்திரங்களென்று கூறுகிறர்.

கடம் படம் முதலிய சொற்கள் அவற்றிற்குச் சத்தியால் கிடைக்கக் கூடிய பொருள்களான கடம் படம் முதலியவற்றி லிருக்கின்றனவாகக் காணப்படுகின்றன. ஆகலால் அநந்தர் முதலியோரைக் கூறும் சொல்வடிவமான மந்திரங்களுக்குச் சத்தியால்கிடைக்கக் கூடியபொருள்களான மந்திரேசுவரர்கள் மந்திர செபத்தினல் பலனளிப்பவர்களாய்சித்தித்தனர். இதனல்சொற்கள் மாத்திரமே தேவதைகளென்று கூறும் பூர்வமீமாம்ஸகர்கள் ஒதுக்கப்பட்டனர். எதனலெனில், அசேதனப்பொருள் சேதனப் பொருளை யதிட்டித்துதின்றே தொழிற்செய்கிறபடியா லென்க. ஆதலால் பரமேசுவரன் வடிவத்தை யதிட்டித்துப் பலனளிப்பதுபோல் மந்திர ரூபமான சொல்லில் விளங்கிய சிவன் முதலிய சத்தியால் கிடைக்கும் பொருள்களே பலனளிக்கின்றன வென்று அறியத் தகுந்தது. (43)

(அ—கை) இவ்விடத்தில் சொல்வானது செய்கையுடன் கூடியிருத்தலால் கட முதலியனபோல் காரியமாயிருப்பதுபற் றிச் சொல்லுக்கும் பொருளுக்குமுள்ள சம்பந்தமும் நித்திய மில்லாமல் சங்கேதத்தால் முடிந்தமையால் அந்தச் சங்கேதத் தைச் செய்தவனான கருத்தா எல்லாமறிந்த பரமசிவனேயாவ னென்று கூறுகின்றார்.

(44) யாதொரு காரணத்தால் பொருளை யறிந்தவனே பொருளின் பெயரைச் செய்கிறவனாகக் காணப்படுகின்றதோ, அந்தக் காரணத்தால் மந்திரேசுவரர்களுடைய சிறப்புப் பொதுத் தருமங்களை யறிந்த பரமசிவன் அவர்களை யறிவிக்குஞ் சொற்களான மந்திரங்களைச் செய்தனர் என்பதாம்.

எந்தக் காரணத்தால் புத்திரன் முதலிய பொருள்களுக்கு அப்பொருள்களை யறிந்த பிதா முதலியவன் பெயரைச் செய் கிறவனாகக் காணப்படுகின்றதோ, அந்தக் காரணத்தால் மந்தி ரேசுவர ரென்னும் பொருள்களுக்குச் சொற்களான மந்திரங்க ளைப் பரமசிவனே செய்தனர். எதனாலெனின், அந்தப் பரம சிவனே மந்திரேசுவரர்களின் சிறப்புப் பொது இலக்கணம் அறிந்தவராகையாலென்க. மந்திரேசுவரர்களுக்குப் பொது இலக்கணமாவது நித்தியத்தன்மை, வியாபகத்தன்மை முதலி யன. சிறப்பிலக்கணமாவது மல சேடத்தால் அந்தந்தத் தானத்தில் ஏவத்தகுந்தவர்களா யிருக்குந் தன்மை யென்று அறியத்தகுந்தது. இவ்விடத்தில் மந்திரங்களென்னும் சொற் களுக்கு முதற் காரணமாயும் வித்தியேசுவரர்களின் சரீரம், இந்திரியம் முதலியவற்றிற்குப் பற்றுக்கோடான சுத்தாத்துவ புவனங்களுக்கு முதற்காரணமாயும், குண்டலினி யென்னும் பெயருடைய மகாமாயை சித்தித்தது. அவ்வாறே ரௌரவா கமத்திலும் மாயைக்கு மேல் மகாமாயை யென்று கூறப்பட் டிருக்கின்றது. மிருகேந்திரத்திலும் சத்தியிலிருந்து நாதமும் அதிலிருந்து விந்துவும், அதிலிருந்து மாதிருகாக்கரங்களும் உண்டாகின்றன வென்றும், சுத்தாத்துவாவில் மகாமாயைக்கு

என்றும் கூறப்பட்டிருக்கின்றது. இவ்விதமான வித்தை ஈசுவரன் சதாசிவன் முதலிய சுத்த தத்துவங்களின் வேறுபாடும், அவற்றிற்குக் காரணமான பரவிந்துவின் சித்தி முறையும், மதங்கம் முதலிய சிவாகமங்களில் விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றது. இரத்தினத் திரயத்திற்கு வியாக்கியானமான இரத்தினத்திரய உல்லேகினீ என்னும் கிரந்தத்திலும் நம்மால் சாதிக்கப்பட் டிருக்கின்றமையால் அதிலிருந்தே யறிந்துகொள்க.(44)

(அ—கை) பின்னர் அவரவரால் அதிட்டிக்கத் தகுந்த உபாதி வேறுபாட்டால் வேறுபாட்டை யடைந்த சத்தி சிவன்களோடு வித்தியேசுவரர்களுக்குச் சேர்க்கை ரூபமாயிருக்குந் தன்மை நூல்களில் கேட்கப்படுகின்றதென்று கூறுகின்றார்.

(45–46) வித்துவான்களால் வித்தியா வித்தியேசுவரர்களில் அணுபக்கம், சத்திபக்கம், சம்புபக்கம் என்னும் மூன்று பக்கங்கள் கொள்ளப் பட்டிருக்கின்றன சிவன் ஒருவனாயும் விகார மற்றவனாயுமிருக்கின்றான். அவனது சத்தியும் ஒன்றாயும் விகாரமற்றதாயு மிருக்கின்றது. ஆதலால் சிவன் சத்தியென்னுமிவை அநேகமா யிருத்தற்கு உரிமையுடையனவல்ல. அநேகவிதங்களாயிருக்குமாயின் விகாரமுடையனவாய்ச் சடங்களாய் ஆகுமென்க. பரமசிவன் ஒருவனாயிருந்தும் யோகிபோல் அநேக தேகங்களையதிட்டித்துக் கொண்டிருக்கின்றான் என்று ஒரு பக்கத்தார் கூறுகின்றனர் என்பதாம்.

உலகத்தின் அனுக்கிரகத்தின் பொருட்டுச் சிவன் மந்திரமாயிருக்கின்றானென்று சுருதி கூறுகின்றது; யாதொரு அனுக்கிரகஞ் செய்யுஞ்சிவசத்தியிருக்கின்றதோ அது மந்திரத் தன்மையை அடைகின்றதென்றும். மந்திரங்களுக்கு மேலான ஈசுவரர்கள் இருபத்து நான்கு பெயர்களாகக் கூறப்பட்டிருக்கின்றனர். அணுவைச் சார்ந்தவர்களும், சம்புவைச் சார்ந்தவர்களும், சத்தியைச் சார்ந்தவர்களுமாயுமுள்ள அநேக மந்திர கோடிகள் வீரபத்திரரை முன்னிட்டவர்களாய்க்கொண்டு

உலகத்திற்கு ஆதாரங்களாயிருக்கின்றனர் என்றும் சிவகீதையில் கூறப்பட்டிருக்கின்றது.

இவர்களுள் அணுபக்கத்திற்கு மேலே கூறப்பட்டவாறு போல் வேறுபாடாயிருக்குந் தன்மை முக்கியமாகவேயுள்ளது. சம்புபக்கம் சத்திபக்கங்களுக் கோவெனில், சம்புசத்திகள் அதிட்டித்தல்பற்றி உபசாரமாய் வேறுபாடு கூறப்பட்டிருக்கிறதென்று, சிவனொருவனையும் விகாரமற்றவனையு மிருக்கின்றான் என்னும் தொடக்கத்தால் கூறுகின்றார். இவ்விடத்தில் சிவனொருவனே உலகத்திற்குக் கருத்தாவாயும், அனைவரையும் அனுக்கிரகஞ் செய்கின்றவராயும் இருக்கின்றார். ஏதனாலெனின் அவர் அநாதி முக்தனாயிருக்கிறபடியா லென்க. அவ்வாறே ரௌரவாகமத்திலும் சிறந்ததான சிவதத்துவமானது ஒன்று என்று கூறப்பட்டிருக்கின்றது. அவ்வாறே சுருதியும் உருத்திரன் ஒருவனாகவே இருக்கின்றான், அநேகனா யிருக்கின்றானில்லை என்று கூறுகின்றது. அநேக ஈசுவரர்களைக் கொண்டால் உலக ரூபமான காரியம் நிகழாதாதலாலென்க. தேர் முதலியவற்றின் செயல்கள் அநேகம் கருத்தாவையுடையதாயினும் ஒரு ஸ்தபதியின் இச்சையை யனுசரியாமல் உண்டாகாமையால் கருத்தா ஒருவனேயாவ னென்க. அவ்வாறே எந்தக் காரியத்தை அனேகர் தங்களைப் பண்டிதர்களாய் எண்ணிக்கொண்டு கௌரவத்தை விரும்பி நடத்துகின்றார்களோ அந்தக் காரியம் நிச்சயமாய் முடிவை யடைகிறதில்லையென்று பெரியோர்களும் கூறுகின்றனர்.

ஈசுவரத் தன்மையானது சொரூப விளக்கத்தையடைதல் என்னும் சொரூபமாதலால் நாசம் சம்பவியாதாகையால் பிரவாகேசுவரபக்கம் ஒதுக்கப்பட்டது. அந்த ஈசுவரன் நித்தியனாயும் சேதனனாயு மிருக்கிறபடியால் விகாரமற்றவன். அவனது சத்தியும் அவனுடைய தருமமாயிருத்தலால் அவன் போலவே விகாரமற்றதாய் நித்தியமாயிருக்கின்றது. நித்தியனான ஈசுவரனுக்கு அநித்தியமான தருமம் கொள்ளக்கூடா

தாகையா லென்க. அவ்வாறு கொண்டால் தருமமும் தருமியும் வேறு இல்லையாதலால் தருமியும் அநித்தியமாய் முடியும். ஆதலால் அந்தச் சத்தி சிவன் இரண்டும் அநந்தர் முதலியோரின் வேறுபாட்டால் அநேக விதமாயிருப்பதற்கு யோக்கியமாவதில்லை. அவ்விரண்டும் அநேக விதமாக இருக்கின்றனவென்று கொண்டால் அப்பொழுது விகாரமுடையவர்களாய் மாயை முதலியனபோல் சடங்களாதல் கூடும் என்க. அவர்களைச் சடங்களாகக் கொள்ளுதல் கூடாது. சேதனங்களென்றே நூல்களில் கேட்கப்படுவதாலும் அசேதனத்திற்குச் சேதனப் பொருளின் அதிட்டான மில்லாமல் பரிணமம் கூடாதாகையாலுமென்க. ஆகையால் சத்தி சிவன்களின் வேறுபாடு உபசாரமாய்க் கூறப்பட்டதேயாம். அவ்வாறே நூல்களிலும் ஈசுவரன் ஒருவன் உபசாரமாய் லயமுடைய லயி என்றும் அதிகாரமுடைய அதிகாரி யென்றும் போகமுடைய போகியென்றும், அவ்வாறே அன்றியும் யாதொரு பதி வேறுபாடு நூல்களில் சத்தி வேறுபாடுபோல் கூறப்பட்டிருக்கின்றதோ அது காரிய வேறுபாட்டால் உபசாரமாய்க் கூறப்பட்டிருக்கின்றது, காரியவேறுபாடு சாதன வேறுபாட்டா லுண்டானதென்றும் கூறப்பட்டிருத்தல் காண்க. மூலத்தின் இறுதியான பகுதியால் இவ்விஷயத்தில் பூர்வபக்ஷியின் சங்கையைக் கூறுகின்றார். அஃதாவது சிவனொருவனாயினும் யோகிபோல் அநேக தேகங்களை யதிட்டித்துச் சதாசிவன் அநந்தர் முதலிய பெயர் வேறுபாட்டை யடைகின்றான் என்பதாம். (45–46)

(அ—கை) இந்தச் சங்கை பொருந்தாதென்று கூறுகின்றார்.

(47–48) அந்தப்பரமேசுவரனுக்குச் சத்தியே யாதொரு காரணத்தால் சரீரமாயிருக்கின்றதோ அந்தச் சத்தி ஒன்றாயிருக்கின்றதோ அந்தக் காரணத்தால் பரமசிவனுக்குச் சரீர வேறுபாடு உண்மையற்றது. மேன்மையடைந்த புருடர் அநேகர். அவர்களுக்குச் சரீரம் இந்திரியம் முதலிய துணைகளின் வேறுபாட்டா லுண்டான மேன்மை காணப்படுகின்றது.

ஆகையால் அதினுலுண்டான வேறுபாடானது உண்மையே யாகு மென்பதாம்.

யாதொரு காரணத்தால் மலமற்றவனு யிருப்பதுபற்றிச் சிவனுக்கு உண்மையாகச் சுத்த மாயாகாரியம் முதலிய தேகத்துடன் சேர்க்கை யில்லாமையால் அவனது சத்தியே தேகத்தின் தொழிலை நிகழ்த்துவதாய்க் கொண்டு உபசாரமாய்த் தேகமென்று கொள்ளப்படுகின்றதோ, அந்த சத்தி ஒன்றே யென்றும் கூறப்பட்டிருக்கின்றதோ, அந்தக் காரணத்தால் பரமேசுவரனுக்கு ஈசானன் முதலிய வேறுபாடு உண்மையற்றது. ஆகையால் யோகிகளின் சரீர வேறுபாடுபோல் இவனுடைய சரீர வேறுபாடு உண்மையற்றது. அவ்வாறாயின் ஐந்து முகமுடையவன் பதினைந்து கண்களுடையவனென்று பரமசிவனுக்கும் நூல்களில் சரீர வேறுபாடு கேட்கப்படுகின்றதேயெனில், அஃதுண்மையே. அந்தச் சரீர வேறுபாடும் தியானத்தின் பொருட்டே சொல்லப்படுகின்றது. அவ்வாறே பௌட்கரத்திலும் சாதகனுடைய குறிப்புக்காகப் பரமசிவனுக்கு உருவம் கூறப்பட்டிருக்கிறதென்று கூறப்பட்டிருத்தல் காண்க.

அணுபக்கத்திலுண்டான வேறுபாடு உண்மையென்று மேன்மை யடைந்த புருடர்கள் அநேகர் என்னுந் தொடக்கத்தால் கூறுகின்றார். இவ்விடத்தில் போக வேறுபாட்டாலும் பிறப்பு இறப்பின் வேறுபாட்டாலும் போகமோக்ஷத்தின் பொருட்டு மேன்மையடைந்த இந்தப் புருடர்கள் அனேகர்களாகக் காணப்படுகின்றனர். அவர்களுக்கு விளக்கஞ் செய்விக்கும் வியஞ்சகங்களான சரீரம் இந்திரியம் முதலியன இருத்தலால், அவற்றாலுண்டான மேன்மையும் மேல் மேலான ஞானக் கிரியைகளின் மேன்மையும் காணப்படுகின்றன. ஆகையால் இந்த வித்தியா வித்தியேசுவரர்களுக்கும் மேலே கூறப்பட்டவாறுபோல் சிவனுடைய அனுக்கிரக வேறுபாட்டாலும் அவரவரின் அதிகார வேறுபாட்டாலும் புவனவேறுபாட்டாலும் அவற்றால்நிகழ்ந்த வேறுபாடுண்மையேயாகும்.(47-48)

(48–49) (ஆகையால் அவர்களை யதிட்டித்துச் சிவசத்தி கள் புருடார்த்தத்தை நிகழ்த்துகின்றன. ஆகையால் அவர் களை யடைந்த வேறுபாட்டால் சிவ சத்திகளும் வேறுபாடுள் ளனவாகக் காணப்படுகின்றன. குணத்தாலும் சாதியாலும் அவர்களின் பெயரும் நிகழ்கின்றன என்பதாம்.

எந்தக் காரணத்தால் அவர்களை யதிட்டித்துச் சிவனும் அவனது சத்தியும் புருடார்த்தங்களை யளிக்கின்றனவோ, அந் தக் காரணத்தால் அவர்களின் வேறுபாட்டால் இந்தச் சிவ சத்திகளும் வேறுபட்டவைபோல் ஆகின்றன. சத்தியுடன் கூடிய அந்தப் பரமசிவனும் அவர்களின் காரிய வேறுபாடு டைய சேர்க்கையால் உபசாரமாய் அப்பெயருடையவனாக ஆகின்றான். (48–49)

(அ—கை) ஆகையால் சிவனே அனைவருக்கும் அனுக் கிரகஞ் செய்பவனாகின்றானென்று கூறுகின்றார்.

(49–50–51) நித்தியனாயும் அனாதியே மலமற்றவனாயும் சர்வஞ்ஞனாயும் சர்வ கருத்தாவாயும் கெடுக்கப்படாத சத்தி யுடையவனாயும் சுகத்தைத் தருபவனாயும் ஒருவனாயுமிருக்கும் பரமசிவன் அனைவருக்கும் நேசனாயிருக்கின்றான். இந்த நூலில் போதம் தியானம் முதலியன முடிவடைவதின் பொருட்டு இரண்டு தத்துவங்கள் கூறப்பட்டன. சத்தி சத்தி மான் என்பவற்றை மூர்த்தி மூர்த்திமான் என்று சுருக்கமாகச் சொல்லலாம் என்பதாம்.

இந்த நூலில் போக மோக்ஷம் சித்திப்பதற்காக அறிவுக்கு விஷயமாக சகள நிட்களமென்னும் பெயருடையதாகவாவது, சத்தி சத்திமானென்னும் பெயருடையதாகவாவது, இரண்டு தத்துவங்கள் கூறப்பட்டன. அந்தச் சத்தி சத்திமானென் னுந் தத்துவ மிரண்டிற்கும் மூர்த்தி மூர்த்திமானென்னும் சொற்கள் உண்டென்பது அறியத்தகுந்தது. இதனால் இது கூறப்பட்டதாகின்றது. அஃதாவது, அதிகாரவத்தையில்

காரிய வேறுபாட்டால் முப்பத்திரண்டு கலை வேறுபாட்டால் பிரிக்கப்பெற்ற சத்தியே இறைவனது சரீரம். அச்சரீரச் சேர்க்கையால் இறைவன் சகளனென்று கூறப்படுகின்றான். தொழிலற்ற சத்தியுடன் கூடிய இறைவன் நிட்களனாகக் கூறப் படுகின்றான். (49–50–51)

(51–52) பிறர்க்கு நன்மை செய்வதிலேயே நோக்க முடையவராயும் சுகத்தைத் தருபவராயு மிருக்கும் அரன், இந்தச் சத்தி ரூபமான தேகத்தை யதிட்டித்து, மறைக்கப் பட்ட ஞானக்கிரியா சாமர்த்திய முடையவரா யிருத்தல்பற்றித் தானே சாமர்த்தியமற்ற புருடர்களுக்குப் போக மோக்ஷங்க ளைக் கொடுக்கின்றான என்பதாம்.

தியானத்திற்கு விடயமான வடிவத்தில் விளங்கிய சத்தி ரூபமான வடிவத்தை யதிட்டித்துப் பிறருக்கு நன்மையொன் றையே செய்வதில் நோக்கமுடைய பரமசிவன், மலத்தால் மறைக்கப்பட்ட சாமர்த்திய முடையவராயிருத்தல் பற்றித் தனக்குப் போக மோக்ஷங்களின் பொருட்டுத் தானே சாமர்த் தியமற்ற புருடர்களுக்குப் போக மோக்ஷங்களை யளிக்கின் றார். அந்தப் பரமசிவனை பசுக்களிடமிருந்து பாசங்களை யப கரிக்கின்றான் என்பதினாலாவது, அல்லது அப்பசுக்களை போகத்தின் பொருட்டும் மோக்ஷத்தின் பொருட்டும் அபகரிக் கின்றான என்பதினாலாவது அரன் என்று கூறப்படுகின்றான். அவ்வாறே நூல்களிலும் பசுக்களிடமிருந்து பாசங்களை இழுக் கின்றான்; பசுக்களையும் மேலான பதத்திற்கு இழுக்கின்றான்; ஆகையால் இறைவன் அரனாகின்றானென்று கூறப்பட்டிருத் தல் காண்க. இவ்விஷயத்தில் அனுமானஞ் செய்யும் முறை யாவது, புருடர்கள் போகத்தின் பொருட்டாவது மோக்ஷத் தின் பொருட்டாவது தானே பிரவிருத்திப்பதற்குச் சமர்த் தராகின்றாரில்லை, கட்டுப்பட்டுச் சுவதந்திரமற்றவர்களாயிருத் தலால்; ஆடு முதலிய கட்டுப்பட்ட பசுவருக்கம் போல வென்க. அவ்வாறே பாசங்கள் உயிரின் பொருட்டுத் தானகப்

பிரவிருத்திப்பதுமில்லை; நிவிருத்தியடைவதுமில்லை; சடப் பொருளாகையால்; கயிறுமுதலியனபோல. ஆகையால் எவ னொருவன் பசுக்களின்போக மோக்ஷத்திற்குக்காரணமாக இருக்கின்றானோ அவனே பரமசிவனென்றுசித்தித்தது.(51-52)

(52) (இவ்விடத்தில்) வித்தியா வித்தியேசத்தன்மை யானது அபரமுத்தியாகின்றது. பரமுத்தி சிவசாமியமாகு மென்பதாம்.

வித்தியா வித்தியேசர்முதலிய தானங்களுக்குப் பர முத் தியை நோக்க, ஏவத்தகுந்த தன்மையிருந்தாலும், அசுத்த மாயையைத் தாண்டியிருத்தலாலும், நின்மலமாயிருத்தலாலும், மீண்டும் சமுசாரச்சேர்க்கை நிகழாதாகையால், அந்த வித்தியா வித்தியேசபதமானது அபரமுத்தியாகக் கூறப்பட்டது. சிவ சாமியமே பரமுத்தியாகுமென்க. (52)

(53—54) மந்திரர் முதலியோர் பரமுத்திக்கு யோக்கி யர்களாகையால் முத்தர்களென்னும் பெயரையடைகின்றனர். புருடன் பதியால் விளக்கஞ்செய்விக்கப்பட்ட சாமர்த்திய முடையவனா யிருக்கின்றான். ஆகையால் இந்தப்புருடனுக்கு பதியோடு சாமியமுண்டாகின்றது. அணுவுக்கு முன்னரே துணைக்கருவிகளை யனுசரிப்பதான சத்திகாணப்பட்டிருக்கின் றது. சத்தி முன் காணப்பட்டிருத்தலால் சிவசாமிய ரூபமான முத்தியை சங்கிராந்தியாகக்கொள்ள முடியாது. பசுத்தன்மை முதலிய சாதிபோல் ஒன்றாகவும் கொள்ளக்கூடாது என்பதாம்.

மந்திரர்கள் பரமுத்தியடைதற்கு உரிமை யுடையாராகை யால் முத்தர்களென்னும் பெயரை யடைந்தவர்களா யிருக்கின்றா ரென்பது கருத்து. அவ்வாறாயின், சமுசாரவத்தையில் புரு டனுக்குச் சிற்றறிவோடு கூடியிருக்குந்தன்மை காணப்படுத லால் முத்திநிலையிலும் புருடன் சிற்றறிவுடையனாகவே இருக் கின்றானெனில், பதியால் விளக்கஞ் செய்யப்பட்ட சாமர்த்திய முடையவனா யிருக்கின்றான் என்னும் தொடக்கத்தால் அது

பொருந்தாதென்று கூறுகின்றார். யாதொருகாரணத்தால் புருடன் சர்வஞ்ஞனும் சர்வசாமர்த்திய முடையனுமி ருக்கும் பரமசிவனால் விளக்கஞ்செய்யப்பட்ட சத்தியையுடையனாயி ருக்கின்றானோ, அந்தக்காரணத்தால் இந்தப்புருடனுக்கு அவனுடன் சாமியமுண்டாகின்றது. அஃதெவ்வாறெனில், சமுசாரநிலையில் விளக்கஞ் செய்விக்கும் துணைக்கருவிகளின் பலத்தை யனுசரித்து சிற் சிலருக்கு அஞ்ஞான முதலியவற்றுடன் சேர்க்கையும், மற்றவர்களுக்கு ஞானமுதலியவற்றின் மிகுதியும் காணப்படுகின்றன. அதுபற்றியே ஈசுவரகுணங்களுக்கு ஆன்மாவிடம் * சங்கிராந்தியே முத்தியென்று கூறும் சங்கிராந்தமோக்ஷவாதிகளின் கூற்றுப்பொருந்தாதென்று சத்தி முன் காணப்பட்டிருத்தலால் என்னும் தொடக்கத்தால் கூறுகின்றார்.

பிராஞ்ஞனை (அதாவது சமுசாரியான) புருடனிடத்தில் ஞானம் முதலிய சத்திகாணப்படுதலாலும், வடிவமில்லாத பொருளுக்குக் குணசங்கிராந்தி பொருந்தாதாகையாலும், வடிவமில்லாத பொருளுக்குச் சங்கிராந்தி நிகழுமென்பதில் திருட்டாந்தம் காணப்படாமையாலும் சங்கிராந்திபக்கமானது பொருந்தாது. இவ்விதமான சங்கிராந்தி முதலிய முத்திகளின் கண்டனப்பிரகாரமானது பூசிக்கத்தகுந்தவரான ஆசிரியரால், ரௌரவாகம விருத்தியில், குணங்களுக்குச் சங்கிராந்திகூறும் விஷயத்தில் உதாரணமில்லை. உபதேசத்தால் மாணாக்கனுடைய புத்தியில் வேறான ஞானம் தீபத்திலிருந்து விறகுமுதலிய வற்றில் வேறு தீபமுண்டாவது போல் உண்டாகின்றது. வடிவமில்லாத பொருளுக்குச் சங்கிராந்தி கொள்ளுதல் உலகத்திலும் சித்தமாயில்லை; வித்துவான்களிடத்திலும் சித்தமாயில்லையென்னும் பொருளுடைய காரிகைகளால் விரிவாய்ச்சாதிக்கப் பட்டிருக்கின்றது. அந்தச் சிவசாமியரூபமான முத்தியும் பசுத்தன்மை முதலிய சாதிபோல் ஒன்றில்லை. அவ்வாறன்றி

---

*சங்கிராந்தி —ஒன்றிலிருப்ப தன்றாகப்பிறிதொன்றற்கு வருதல்.

ஒவ்வொரு பொருள்கள் தோறும் வெவ்வேறாயிருக்கின்றது. சாதிருசயத்தைத் தவிர சாதிகிடையாதென்றும் அவ்விடத்திலேயே ஆசிரியரால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. சிவசாமிய ரூபமான முத்தியை ஒன்றாகக்கொள்ளுமிடத்தில் மேலேகூறிய வாறு புருடர்கள் அநேகராகையால் ஒருவனுக்கு முத்தி நிகழுங்கால் அனைவரும் முத்தியடைய வேண்டிவருதலால் அநேகமாகவே கொள்ளல் வேண்டும் (53—54)

(அ—கை) பரமான்மலய ரூபமான முத்தியும் கூடாதென்று கூறுகின்றார்.

(55) புருடர்கள் அடிக்கடி வேறாக அறியப்பட்டிருக்கின்றார்கள். ஆகையால் பரமான்மாவோடு ஐக்கியம்பொருந்தாது. எந்தக்காரணத்தால் புருடசத்திகளுக்கு அணுத்தன்மை யிருக்கின்றதோ, அந்தக்காரணத்தால் அந்தச்சத்திகளுக்கு முத்திநிலையில் நாசங்கிடையாதென்பதாம்.

மூலத்தில் நாசம் கிடையாதென்னும் சொல்லை அடுத்த அடியிலிருக்கும் முத்தியில் என்னும் சொல்லோடு சேர்த்துரைக்க. மூலத்தின் பிற்பகுதியால் முத்திநிலையில் வையாயிகர்களால்கொள்ளப்படும் அறிவின்மையும் பொருந்தாது; ஞானக்கிரியாசத்தியையும் அச்சத்தியையுடையவர்களையும் சித்துரூபமாயும் நித்தியமாயும் சாதித்திருத்தலாலென்று கூறுகின்றார். (55)

(அ—கை) அதுபற்றியே அநாதியாயிருப்பதுபற்றி நித்தியமாயிருத்தலால் மோக்ஷத்திற்குக்காரணமாய் நின்ற சிவனுக்காவது சத்திரூபமான அவனது ஐசுவரியத்திற்காவது நாசம் நிகழுகிறதில்லை. ஆதலால் ஐசுவரியம் நசித்து மற்றொரு ஐசுவரியம் உண்டாகிறதென்று பிரவாகேசுவர வாதிகள் கூறுவது பொருந்ாதென்று கூறுகின்றார்.

(56) முத்திக்குக் காரணமான சிவனுக்காவது அவனது சத்திக்காவது இன்மைகிடையாது. சமமானகுணமுடையவர்களாகையால் சிவனுக்கும் முத்தான்மாக்களுக்கும் வேறுபா

டில்லாமல் அறிவு நிகழ்கின்றது. இவர்களுக்குண்டான விசேட மும் மேலேகூறப்படுகின்றது என்பதாம்.

சிவனுக்கும் முத்தான்மாக்களுக்கும் சமமான குண முடைமைபற்றிப் பிரிக்கப்படாமல் ஒரேவிதமாய் எல்லாவற்றை யும் விடயமாகச் செய்யும் ஞானக்கிரியைகளின் விளக்கம் நிகழ் கின்றது. இவர்களைக் காட்டிலும் சிவனுக்கு விசேடமென்ன வெனில் விசேடம் மேலே கூறப்படுகின்றது என்பதனால் கூறு கின்றார். (56)

(57—முற்பாதி). ஆதிமத்தியம் அந்தமில்லாத பெருமை முத்தர்களிடத்தில சிவனுலுண்டாயிருக்கின்ற தென்பதாம்.

முத்தான்மாக்களிடத்தில் ஆதிமத்தியாந்த மற்ற எல்லா மறியுந்தன்மை எல்லாம் செய்யுந் தன்மை யென்னும் பெருமை இருந்தபோதிலும், அது அநாதியான மலத்தால் மறைபட்டி ருப்பதால் நிமித்த காரணனான சிவனால் விளக்கஞ் செய்யப்பட் டது. சிவனோவெனில் அநாதியாய்ச் சித்தித்த மறைபடாத எல்லாமறியுந்தன்மை எல்லாம் செய்யுந்தன்மை யுடையவனென் பது முத்தான்மாக்களுக்கும் சிவனுக்கும் விசேடமாகும். (57)

(57—பிற்பாதி). இவ்வாறு சகலவரங்களையும் அளிப்பவ னான பரமசிவனே உண்மையறிந்தவனால் பூஜிக்கத் தகுந்தவன். அப்பரமசிவன் சந்தோஷமடையுங்கால் புருடனுக்குச் சித்தி யும் பரமுத்தியும் உண்டாகும் என்பதாம்.

இவ்வாறே அதர்வசிகையில் "சிவன் ஒருவனே மற்றைத் தேவர்களை நீக்கித் தியானஞ் செய்யத் தகுந்தவன்" என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால், அனைவருக்கும் அநுக் கிரகஞ் செய்தலானும், எல்லாப் பொருளுக்குங் கருத்தாவாயி ருத்தலானும், அந்தச் சிவனால் அருளிச் செய்யப்பட்ட சிவாக மங்களே பிரமாணமாகும். ஏனைய புத்தாகமம் முதலியன சர் வஞ்ஞனல்லாத புத்தர் முதலியோரால் செய்யப்பட்டதுபற்றி

தொன்றுக்கொன்று முரண்பாடுடைமையால் பிரமாணமாகாவாம்; அவ்வாறே பெரியோர்களும் "சுகதர் சர்வஞ்ஞராயிருக்கிறார். கபிலர் சர்வஞ்ஞராயில்லை என்பதிற் பிரமாணம் என்னை? பிரமாணமின்மையால் இருவரையும் சர்வஞ்ஞர்களாகக்கொண்டால் அவர்களுள், மதபேதமுண்டாகக் காரணமென்னை" என்று கூறியிருத்தல் காண்க.

அவ்வாறாயின், சிவாகமங்களும் பிற ஆகமங்களுடன் முரண்படுதலால் பிரமாணமற்றதே எனில், அது பொருந்தாது. முரணின்மையாலென்க. அஃதெவ்வாறெனின், பிற ஆகமங்களாலடையத் தகுந்த முத்தி ரூபமான தானத்தை யறிவித்து, பின்னர் அவைகளாலறியமுடியாத மேலான விஷயங்களை விளக்கஞ் செய்வதால் சிவாகமங்களின் பிரமாணத் தன்மை தள்ள முடியாததேயாகும். இவ்வாறே, பெரியோர்களும் "மற்றைப் பிரமாணத்தாலறியப்படாததை அறிவிப்பது பிரமாணமாகும்" என்று பிரமாண இலக்கணங் கூறுகின்றனர்.

அன்றியும், அவரவர்களின் வருணங்களுக்கும், ஆச்சிரமங்களுக்கும், உரிய செயல்களை மனதினாலும் தாண்டக்கூடாதென்று, வருணங்கள் ஆச்சிரமங்கள் என்னும் இவற்றின் செயல்களை விரித்திருப்பதுபற்றி வேதங்களோடு முரண்படாதிருத்தலானும், வேதமறிந்த பெரியோர்களால் அநுட்டிக்கப்பட்டிருத்தலானும், பிறமதங்கள்போல இம்மதம் பாஷண்ட மதமாகிறதில்லை. அஃதெவ்வாறெனின், புராணம் இதிகாச முதலியவற்றில் சுவேதர், உபமந்யு முதலிய மஹரிஷிகள் சிவாகம விதிகளை அநுட்டித்ததாகக் கேட்கப்படுகின்றன. மகாபாரதத்திலும் நரநாராயணர்களும் அசுவத்தாமாவும், "இவர்களால் பரமேசுவரன் சிவலிங்கத்தில் பூஜிக்கப்பட்டான்" என்ற வாக்கியங்களால் சிவாகமவிதிகளை அநுட்டித்ததாகவும், சுவர்ணாக்ஷத்தில் விஷ்ணு ஆராதித்து அநுக்கிரகம் பெற்றாரென்றும், அன்றியும் "ஏ கிருஷ்ண! சிவாராதனத்தைத் தவிர வேறு பிரியம் எனக்கு என்ன இருக்கின்றது" என்றும் கூறப்பட்டிருத்தல் காண்க.

அவ்வாறே இராமாயணத்திலும், கார்த்த வீரிய ஸ்மிருதியிலும், "பக்குவங்களான செங்கல்களால் சிவாலயத்தை எவன் கட்டிவைக்கின்றானோ" என்பதனால் பிரதிட்டை முதலிய சிவாகம அர்த்தங்கள் கூறப்பட்டிருக்கின்றன. சிவ சூத்திரத்திலும் சிவாகமங்களின் மோக்ஷ சொரூபங் கூறப்பட்டிருக்கிறது. அதர்வ சிகையிலும், சுவேதாசுவதர உபநிடதத்திலும் இலிங்க பூஜை முதலியவை கேட்கப்படுகின்றன. ஆகையால், இச்சிவாகமங்களுக்கு மற்றைப் பிரமாணங்களுடன் முரண்பாடு கிடையாது. சிவாகமங்கள் மூலமற்றவையுமல்ல. சிற்சிலர்கள் தான் அநுட்டிக்கிறார்களென்பது மில்லை. ஆகையால், சிவாகம வாக்கியங்கள் மற்றைப் பிரமாணங்களால் மறுக்கப்படாமல் ஏனைய பிரமாணங்களைக் காட்டிலும் மேம்பட்டிருத்தலால் அவசியம் அநுட்டிக்கத் தகுந்தவையேயாகும். அவ்வாறே மோக்ஷகாரிகையிலும "சிவாகமங்களின் விஷயமானது ஏனைய பிரமாணத்தோடு முரண்பாடின்றி ஏனைய பிரமாணங்களா லுண்டாகும் பயனைக் காட்டிலும் அதிகப் பயனளிப்பதனால் மகான்களாலும் ஆதரிக்கத் தகுந்தது" என்று கூறப்பட்டிருத்தல் காண்க (57)

(அ—கை.) இந்தப் பிரகரணம் யாரால் கூறப்பட்டதென்னுங் கேள்விக்கு விடை கூறுகின்றார்.

(58) சுவிருத்தியைச் செய்தவரான சத்தியோஜோதி சிவாசாரியர் இந்தப் பிரகாரம் தத்துவங்களைக் கூறினார் என்பதாம்.

சுவிருத்தி என்பதும் சத்விருத்தி என்பதும் இரௌரவாகமவிருத்தியின் பெயராகும். அந்த இரௌரவாகமவிருத்தியை இயற்றியவரால் இந்தப் பிரகரணம் இயற்றப்பெற்றதென்பது கருத்து. (58)

தத்துவ சங்கிரகம் முற்றுப்பெற்றது.

சத்விருத்தியின் வாக்கிய ரூபங்களான ஸ்ரீமத் கேடகரின் புத்திரனாகிய சூரியனுடைய கிரணங்களால் நாசஞ் செய்யப் பெற்ற அஞ்ஞான மென்னும் இருட்கூட்டத்தையுடைய அகோர என்னுஞ் சொல்லை முன்னிலையாகக்கொண்ட சிவனால் (அஃதாவது அகோர சிவாசாரியரால்) தத்துவஞானத்தை அறிதற்கு இச்சையுள்ள வித்துவான்களால் அன்புடன் பிரார்த்திக்கப்பட்டு தத்துவங்களின் சுருக்கமான தத்துவ சங்கிரஹப் பிரகரணத்திற்கு இலகுவான விருத்தியானது விளக்கமாய்ச் செய்யப் பெற்றது.

அகோர சிவாசாரியரா லியற்றப் பெற்ற

தத்துவ சங்கிரஹத்தின் விருத்தியுரை முற்றுப் பெற்றது.

சிவபெருமான் திருவடி வாழ்க.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சத்தியோஜோதி சிவாசாரியர் இயற்றிய

# தத்துவத்திரய நிர்ணயம் மூலமும்,

இதற்கு

## அகோர சிவாசாரிய ரியற்றிய விருத்தி உரையும்.

(தமிழ்மொழி பெயர்ப்பு.)

### உரைமங்கலம்.



*எந்தப் பரமசிவனுடைய அநுக்கிரகத்தினால் மனதினாற் சிந்தித்தற்குரிய காணப்படும் பொருள்களும், காணப்படாத பொருள்களும் நிலைபெறுகின்றனவோ, அந்தப் பரமசிவனை வணங்கித் தத்துவத் திரய நிர்ணயத்திற்கு உரைசெய்கின்றேன்.*

### நூல்.

(அவதாரிகை) *ஆசிரியர் தன்னாலியற்றப்படும் பிரகரணம் இடையூறின்றி முடிதற்பொருட்டு அப்பிரகரணத்தாற் கூறப்படும் பொருள்களினால் பரமசிவனை விசேடித்து நமஸ்கரிக்கின்றார்.*

(1) *இயல்பாகவே பிரகாசமுடையவராயும், தன்வயத்தராயும் உள்ள யாதொரு பரமசிவன், மலத்தினுடைய பலவிதமான தன்மையை அறிந்து உயிர்களின் பொருட்டுப் பலவிதமான பலத்தைத் தருகின்றாரோ, அவர் பொருட்டு நமஸ்கரிக்கின்றேன் என்பதாம்.*

இயல்பாகவே பிரகாசமுடையவர் என்றதனால், தான் இயல்பாகவே மலமில்லா திருத்தல்பற்றி எல்லாப் பொருள்களை யும் அறிகின்ற ஞானக்கிரியா சத்திகளின பிரகாசத்தை யநாதி யாகவேயுடைய அநாதி முத்தன் என்பது பெறப்பட்டது. அவனுக்கு ஞானக்கிரியா சத்திகளின் பிரகாச ரூபமான மல மின்மையை அநாதியெனக் கொள்ளாமல், ஆதியெனக் கொண்டு அவனை ஆதிமுத்தனெனக் கொள்வோமாயின், அவ னுக்கு அதனைச் செய்தற்கு ஒருவன் வேண்டப்படுமெனப்பட்டு அவனையும் ஆதி முத்தனெனக் கொண்டு வரம்பின்றியோடுதல் என்னுங் குற்றத்திற்கிடனும். ஆதலால், இந்தப் பரமசிவன் ஒருவருக்கும் வசப்படாமல் தலைவபத்தனு யிருக்கின்றான் என்க.

இவ்விதமான பரமசிவன் சத்திரூபமான தனது மகிமை யால் மலத்தினுடைய பல வேறு வகைப்பட்ட தன்மையை யறிந்து மலத்தினால் மறைக்கப்பட்டுச் சுவதந்திரமில்லாத உயிர் களின் பொருட்டுப் பல வேறு வகைப்பட்ட பலன்களைத் தரு கின்றான். அவ்விஷயத்தில் பக்குவ மலர்களுக்கு மல பாகத் திற்குத் தகுந்தவாறு பரமோக்ஷத்தையும், அபரமோக்ஷத்தை யும் தருகின்றார். மல பரிபாக மற்றவர்களுக்கு மலபரிபாகம் வருதற்காகவே அவரவர்களின் புண்ணிய பாவ கன்மங்களுக் குத் தக்கவாறு போக ரூபமான பலத்தைத் தருகின்றார். இத னால், இவர் எல்லா உயிர்களுக்கும் அநுக்கிரகஞ் செய்கின்றவர் என்பது சித்தித்தது. (ஆதலால்) அநாதியான ஞானக்கிரியா சத்திப் பிரகாசமென்னும் சிவத்தன்மையுடையவர் பரமசிவனே (யாவர்) அவரின் பொருட்டு நமஸ்கரிக்கின்றேன். (1)

(அ—கை) இவ்வாறு, நூலாசிரியர்பரமாசாரியராகிய பரமசிவனை நமஸ்கரித்துக்கொண்டு மாணாக்கர்களுக்கு இந் நூலைக் கேட்பதில் அவாவுண்டாதற் பொருட்டுத் தனது பிரகர ணத்தின் ஆரம்பத்தை மேற் கொள்கின்றார்.

(2) பின்னர், எல்லா வுயிர்களாலும் செய்யப்பட்ட நமஸ்கா ரத்திற்கு உரியவரான பரமசிவன் அருளிச் செய்த நூல்களில்

குருவினுடைய உபதேசத்தால் அறியப்பட்ட சில பொருள்களின் உண்மையை மந்தாதிகாரிகளின் நன்மையின் பொருட்டுச் சுருக்கமாகச் சொல்லுகின்றேன் என்பதாம்.

இவ்விடத்தில் இரௌரவாகமத்தினூற் கிடைத்த பொருளினுண்மையைத் தத்துவ சங்கிரகம் என்னும் பிரகரணத்தாற் சுருக்கமாகக் கூறிச் சுவாயம்புவாகமத்தாற் கிடைக்கும் பொருளை இந்தத் தத்துவத் திரய நிர்ணயம் என்னும் பிரகரணத்தால் ஆசிரியர் விளக்குகின்றார் என்க. ஆதலினூற்றான், தத்துவ சங்கிரகம் என்னும் பிரகரணத்து இறுதியில் " சுவிர்த்தி என்னும் பிரசித்தி பெற்ற இரௌரவ விருத்தியைச் செய்த சத்தியோஜாத சிவாசாரியர் இவ்வாறு தத்துவங்களைக் கூறினூர் " என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

இந்தப் பிரகரணத்து இறுதியிலும் " உயிர்களுக்கு அநாதியேயுள்ள அறியாமையை நீக்குதற்கு சுவாயம்புவாகம சம்பந்தமாக விருத்திகாரரால் இந்தத் தத்துவத்திரய நிர்ணயம் சொல்லப்பட்டது " என்று சொல்லுகின்றனர்.

எல்லா வுயிர்களாலுஞ் செய்யப்படும் நமஸ்காரத்தைப் பெற்றுக் கொள்ளுபவர் பரமசிவனேயாதலால் நமஸ்காரத்தைப் பெற்றுக் கொள்ளுபவர் என்னும் அப்பதத்தாற் பரமசிவனே கொள்ளப்படுகின்றனர். பரமசிவன் ஒருவனே தான் சர்வேசுவரனு யிருத்தல்பற்றி எல்லோராலும் ஆராதிக்கத் தகுந்தவனுதலால், அந்தப் பரமசிவனு லருளிச் செய்யப்பட்ட சிவாகமங்களினூல் பரமேசுவரன் முதல் இடைவிடாத குருபரம்பரை முறையில் கிடைத்த பொருளினுண்மையை மந்த அறிவினரின் நன்மையின் பொருட்டுச் சொல்லுகின்றேன். (2)

(3) சப்பு என்னும் பரசிவமும், உயிரும், மாயையும் ஆகிய மூன்றும், நித்தமாய், வியாபகமாய், கர்த்திரு சத்தியுடன் கூடினதாய் இருக்கின்றன. ஆதலால், இம்மூன்று தத்

துவங்கள் மாத்திரம் விகாரமான காரியங்களனைத்தும் ஒடுங்குங் காலத்திலும் (ஒடுங்காது) நிலைபெறுகின்றன என்பதாம்.

இவ்விடத்தில், சம்பு என்னும் பதத்தால், இன்னொருவரால் ஏவப்படாமை என்னும் சுகத்தைத் தருகின்றவர் என்கிற காரணம்பற்றிப் பிரிக்க முடியாத சிற்சத்தியுடன் கூடிய பரமசிவன் குறிக்கப்படுகின்றார். உயிர் என்னும் பதத்தால் உயிர்கள் அநேகமாயினும் உயிர்த்தன்மை என்னும் சாதியொருமை பற்றி எல்லா உயிர்களுங்கொள்ளப்படும். மாயையென்றுபொதுவாய்க்கூறப்பட்ட பதத்தால் அசுத்த புவனத்திற்குமுதற் காரணமான அசுத்தமாயையும், சுத்த புவனத்திற்கு முதற்காரணமான சுத்தமாயை யென்னும் விந்துவும் கொள்ளப்படும். அவ்வாறே, இரௌரவாகமத்தில், "மாயைக்கு மேல் மகாமாயை" என்று கூறப்பட்டிருத்தல் காண்க. இந்த மூன்றும் அநாதியாகையால் நித்தமாயுள்ளன. இவற்றை ஆதி என்று கொண்டால் இவற்றின் தோற்றத்திற்குக் காரணம் வேண்டப்பட்டு அவ்வாறே மேலுஞ் சென்று வரம்பின்றியோடுதல் என்னும் குற்றத்திற்கிடனும். இம்மூன்று தத்துவங்களும் நித்தமென்று நூல்களிலும் நன்றாய்க் கூறப்பட்டிருத்தல் காண்க. இன்னும், இம்மூன்றும் வியாபகமா யிருக்கின்றன. இம்மூன்றனுள் சிவமும், உயிர்களும் எவ்விடத்தும் செல்லுதல் என்னும் வியாபகத்தன்மையுடையன அவ்வாறு கொள்ளவில்லையானால் ஆகாயம்போல் வடிவமில்லாத பொருள்களெனப்பட்டு எங்குஞ் செல்லுதல் கூடாது ஆகவின், சிவனுக்கு எல்லாப் பொருள்களுக்கும் நிலைக்களமாயிருக்குந் தன்மையும், உயிர்களுக்கு எல்லா வுலகங்களினுஞ் சென்று புண்ணிய, பாவ, கன்ம பலன்களை யநுபவிக்கும் தன்மையும் கூடாதென்றுணர்ந்து கொள்க. மாயையும் தன் காரியத்தளவில் வியாபகமாயிருக்கின்றது. இவ்விடத்தில் ஆணவ மலத்தைப்பற்றிக் கூறாத கருத்தென்னை யெனின், அவ்வாணவமலம் நித்தியமாயும், வியாபகமாயுமுள்ள உயிர்களை அநாதியே மறைக்கும் பொருளாதலின், அம்மலமும் அவ்வாறே நித்தியமாயும், வியாபகமாயுமிருக்கும்என்பது அருத்தாபத்திப் பிரமாணத்தாற் சித்

தித்தலாலென்க. இவ்வாறு வியாபகமாதல்போலவே, இம் மூன்று தத்துவங்களும் கர்த்திரு சத்தியுடன் * கூடியன. அவற்றுள், சிவமும், உயிர்களும் அறிவுடைப் பொருள்களாதலின், முறையே உலகத்துக்குக் கருத்தாவாயும், போகத்தை அநுபவிப்பதாயும் இருந்தல்பற்றிக் கர்த்திரு சத்தியுடன் கூடியனவாகும். கர்த்திரு சத்தியிருத்தலால், ஞாதிரு ‡ சத்தியையும உடையனவேயாகும். ஞானக் கிரியைகளே அறிவின் சொரூபமாதலால், கிரியா சத்தி யிருத்தல்பற்றி ஞானசத்தியும் உண்டென்றறிந்து கொள்க. அவ்வாறே, அறிவானது ஞானக் கிரியா ரூபமென்று நூல்களினுங் கூறப்பட்டிருக்கின்றது.

மாயையோவெனில், கர்த்தாவான பரமசிவனுடைய சத்தியால் அதிட்டிக்கப்படுதலின், கர்த்திரு சத்தியுடன் கூடியதென்று சொல்லப்பட்டது. ஆதலால், பதி, பசு, பாசம் என்னும் மூன்று தத்துவங்களும் காரியப் பொருள்கள் ஒடுங்கின காலத்தும் ஒடுங்காது விளங்கிக் கொண்டிருக்கின்றன. (3)

(அ—கை) இவ்வாறு, இம்மூன்று தத்துவங்களுக்கும் சமான தர்மத்தோடு கூடியிருக்குந் தன்மையைக் கூறிவிட்டு, இனி வேறுபட்ட தர்மத்தோடு கூடியிருக்குந் தன்மையைக் கூறுகின்றார்.

(4) சிவனும், உயிர்களும் அளவில்லாத எண்ணையுடையவர். மாறுதல் என்னும் பரிணமம் அற்றவர். அறிவுடனும் கூடினவர். மாயாதத்துவமோ எனில் ஒன்றே. மாறுதல் என்னும் பரிணமத்தோடு கூடினது. அறிவில்லாதது என்பதாம்.

உயிர்கள் அனந்தமாகலான், அளவில்லாத எண்ணையுடையனவாயின. சிவனோவெனில், ஒருவனாதலின், அளவில்லாத எண்ணையுடையன் என்றது எவ்வாறு கூடும் எனில், அநேகமாயுள்ள அறிவுடைப் பொருள், அறிவில்லாத பொருள்களுக்கு நிலைக்களமாய் இருப்பதால் உபசாரத்தால் உண்டான பேதத்தோடு கூடியிருத்தல்பற்றி உபசாரமாக அளவில்லாத எண்ணை

* கர்த்திருசக்தி—தொழிற்செய்யுஞ்சத்தி. ‡ ஞாதிருசத்தி—அறியுஞ்சத்தி,

யுடையவன் என்று கூறப்பட்டது. அல்லது, மலமில்லாமையி னால் உண்டான எல்லாப் பொருள்களையும் அறிதலும், எல்லா வற்றையுஞ் செய்தலுமான சிவத்தன்மையோடு கூடிய முத் தான்மாக்களையும் சிவசப்தத்தால் கொண்டு அளவில்லாத எண்ணை யுடையவன் சிவன் என்று கூறப்பட்டதென்பதாம்.

அந்தச் சிவனும், உயிர்களும் விகாரமற்றிருத்தல் பற்றிப் பரிணாம ரூபமான மாறுதலுடன் கூடாதவர். முன் கூறிய வாறுபோல், சைதன்னியத்துடன் கூடினவர். மாயாதத்துவம் என்னும் சுத்தமாயை, அசுத்தமாயைகள் மேலான முதற் காரணமாய் இருத்தல்பற்றி ஒன்றாயிருக்கின்றன. இவற்றை அநேகமெனக் கூறின் சடமாயும், அநேகமாயும் இருத்தலால் (கடம் முதலியனபோல) அநித்தமென்றாகி அவை, தனக்கு வேறான காரணத்தை யுடையனவாகும். அம்மாயா தத்துவம் முதற் காரணமாய் இருப்பதுபற்றியே, காரியரூபமான மாறுத லுடன் கூடினதாயும், மண் முதலியனபோற் சடமாயும் இருக் கின்றது. (4)

(அ—கை) இவ்வாறு, சிவனுக்கும், ஆன்மாக்களுக்கும் மாயாதத்துவத்தைவிட வேறான தர்மமுடைமை யுண்டென்று அறிவித்து இப்பொழுது ஆன்மாக்களைவிடச் சிவனுக்கும், சிவனைவிட ஆன்மாக்களுக்கும் வேறான தன்மை யுண்டென்று கூறுகின்றார்.

(5) எவர் எவ்விடத்துஞ் செல்லுகின்ற சாமர்த்தியமுடை யவரோ, அவரே ஈசுவரர். அவருள், ஒருவனான பரமசிவன் அநாதியாய்ச் சித்தித்த குண சாமர்த்தியமுடையவன்; பதியோடு சமம்பெற்ற முத்தான்மாக்களுக்கும், ஈசுவரர் எனப் படும் வித்தியேசுவரர்களுக்கும் அந்தப் பரமசிவனாலேயே மல மின்மையும், எல்லாப் பொருள்களையும் விஷயமாய்க்கொண்ட ஞானக்கிரியைகளும் உளவாகின்றன என்பதாம்.

எல்லாப் பொருள்களையும் விஷயமாகச் செய்யும் ஞானக் கிரியா சாமர்த்தியமுடையவ ரனைவரும், சுதந்திரர்களாயிருத்

தல்பற்றி "ஈசுவர" என்னும் மொழியால் அழைக்கத் தகுந்தவரே யாவர். அவர்களுள் ஒருவனை பரமசிவன் மாத்திரம் அநாதியாய்ச் சித்தித்த குண சாமர்த்தியமுடையவன் என்று கீழே கூறப்பட்டிருத்தலால், சிவனோடு சாமியம் என்னும் முத்தியடைந்த முத்தான்மாக்களுக்கும், ஈசுவரர்களான வித்தியேசுவரர் முதலியோர்களுக்கும் நிமித்த காரணரான அந்தப் பரமசிவனாலேயே மலமின்மையும், சிவத்தன்மையின் தோற்றமும் உளவாயின என்க.

அவர்களுள், வித்தியேசுவரர் முதலியோர் அதிகார மலத்தின் ஏகதேசச் சேர்க்கையால் பரமசிவனுடைய ஆணையைப் பெற்று அதிகாரஞ்செய்கின்றனர். முத்தான்மாக்களோவெனில், பரமசிவனுடைய ஆணைக்கு விஷயமாகாதவர்களாதலாலும், பரமசிவனாலேயே பரமுத்தி அடைந்தவர்களாதலாலும் ஒரு விதமான காரியத்தின் பொருட்டும் பிரவிருத்திப்பதில்லை. (5)

(அ—கை) அநாதி முத்தனை பரமசிவனுக்கும், சகளர், நிஷ்களர் முதலிய பேதமும், ஈசானர், தற்புருஷர் முதலிய பேதமும் நூல்களிற் கூறப்படுகின்றதே எனில், அதற்குச் சமாதானங் கூறுகின்றார்.

(6) சுத்தாசுத்தமான காரியவர்க்கங்கள் சுத்தாசுத்தமான முதற் காரணங்களை முதன்மையாக வுடையன. ஆதலால், அநாதியாய்ச் சித்தித்த சுவாமியினிடத்தில் நூல்களில்கூறப்பட்ட யாதொரு சகள, நிஷ்களபேதமும், சிருட்டி முதலிய பஞ்ச கிருத்தியத்தை விஷயமாகக் கொண்ட ஈசான முதலிய பேதமும் உபசாரமாகக் கூறப்பட்டன என்பதாம்.

சுத்த காரியத் தொகுதியும், அசுத்த காரியத் தொகுதியும் சுத்த முதற் காரணத்தையும், அசுத்த முதற் காரணத்தையும் முதன்மையாகக் கொண்டு தோன்றுகின்றன. "தோன்றுகின்றன" என்னும் வினைச்சொல் மூலத்திலில்லையாயினும் சேர்த்துக்கொள்ளல் வேண்டும். ஆதலால், அநாதியாய்ச் சித்தித்த அந்தப் பரமசிவனிடத்தில் யாதொரு சகள,

நிஷ்கள பேதமும், சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்னும் பஞ்ச கிருத்தியத்தை எதிர் நிரனிறையாய் விஷயமாகக்கொண்ட * ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோஜாதம் என்னும் பேதமும் கூறப்பட்டனவோ அவையனைத்தும் தனது காரியமான உத்தியோக பேதம் பற்றியும், சிருட்டி முதலிய காரியரூபமான உபாதி பேதம் பற்றியும் நூல்களில் உபசாரமாகக் கூறப்பட்டனவேயன்றி உண்மையிலில்லை. அவ்வாறே நூல்களில் "அதிகார சிவம், போகசிவம். இலயசிவம் என்னும் சிவபேதமானது காரிய பேதம்பற்றி உபசாரமாகக் கூறப்பட்டனவேயன்றி உண்மையிற் கூறப்படவில்லை" என்றும், "ஈசுவரன், சதாசிவன், சாந்தன் என்னும் பேதமும் காரிய பேதம்பற்றியே சம்பவித்தன" என்றும் கூறப்பட்டிருத்தல் காண்க.

பசு வர்க்கங்களுக்குள் உண்டான சகள, நிஷ்கள பேதம் உபசாரமோ, உண்மையோவெனில் உண்மையே. எவ்வாறெனில், சகலர்கள், மும்மலமுடையரென்றும், கலாசம்பந்தமிருந்து ஞானத்தால் கர்மம் நசித்து வாசனா பலத்தால் சிறிது காலம் கலாசம்பந்தத்தோடு இருப்பவரென்றும் இருவகையினர். நிட்கலரும், பிரளயத்தில் கலைகள் ஒடுங்கினமையால் ஆணவமலம் கன்மமலத்தோடு கூடிப் பிரளயாகலரென்றும், ஞான, யோக முதலிய சாதனங்களால் கன்மம் நசித்து ஆணவ மல மாத்திரத்துடன் கூடி விஞ்ஞானகலர் என்றும் இருவகையினர். முத்தான்மாவோவெனில் மலமற்றவனே. இவ்வாறே சுவாயம்புவாகமத்தில், "ஆத்மா மல பந்தமுடையவனாய்ப் பின்னர்த் தீக்ஷையினால் விமலனாய் முத்தனாயிருக்கின்றான். அந்த ஆத்மா கேவலனென்றும், சகலனென்றும், அமலனென்றும் மூன்று அவத்தையை யுடையவனாகின்றான்" என்று கூறப்பட்டிருத்தல் காண்க. (6)

---

* ஈசானம்—அநுக்கிரகத்தையும், தற்புருடம்—திரோதானத்தையும், அகோரம்—சங்காரத்தையும், வாமதேவம்—திதியையும், சத்தியோஜாதம்—சிருட்டியையும் செய்யும்.

(அ—கை). பின்னர், பாசத்தாற் கட்டுப்பட்டிருக்கும் ஆன்மாவின் சொரூபத்தைப்பற்றிக் கூறுகின்றார்.

(7) ஆன்மாக்களுக்கும் சிவனுக்குரிய குணம்போல் எங்குஞ் சென்றிருத்தல் என்னும் வியாபகத் தன்மை முதலிய குணங்களிருக்கின்றன. எல்லா ஆன்மாக்களுடைய அந்தக் குணங்கள் ஒரு மலத்தால் அநாதியே மறைக்கப்பட்டிருக்கின்றன என்பதாம்.

சிவனைப்போல் ஞானக் கிரியா ரூபமாயும், வியாபகமாயும் உள்ள சொரூபமானது, ஆன்மாக்களுக்கும் இருக்கின்றது. அவ்வாறே மிருகேந்திரத்திலும், "யாதொரு காரணத்தால் முத்திக் காலத்தில் ஆன்மாக்களுக்கு எல்லாப் பொருள்களையும் விஷயமாகக்கொண்ட ஞானக்கிரியா சத்திகள் தோனறுகின்றனவோ, அந்தக் காரணத்தால் எப்பொழுதும் ஆன்மாக்களிடத்தில் ஞானக்கிரியைகள் இருக்கின்றன" என்று கூறப்பட்டிருத்தல் காண்க.

எல்லா ஆன்மாக்களுடைய சொரூபமான அந்த ஞானக்கிரியைகள் தன்னுடைய பிரகாசத்திற்கு வேறு துணையை விரும்புகின்றமையால் ஒருவிதமான மலமென்னும் பொருளால் மறைக்கப்பட்டுள்ளன. அந்த மலமானது அநாதியே இருத்தல்பற்றி ஒன்றெனவே கொள்ளல்வேண்டும். அவ்வாறன்றி, அநேகம் எனக்கொள்ளின் அம்மலம் சடமாயிருத்தலால் அநேகமாயும், சடமாயும் உள்ள கடம் முதலியவற்றிற்கு வேறு காரணம் வேண்டப்படுமாறுபோல இந்த மலத்திற்கும் வேறு காரணம் வேண்டப்படும். அவ்வாறாயின், ஆன்மாக்களுக்கு அநாதியாக மறைத்தலைச் செய்தல்கூடாது. இவ்வாறே ஸ்ரீ சுவாயம்புவாகமத்திலுங் கூறப்பட்டிருத்தல் காண்க. (7).

(8) அந்த மலத்தால் சுதந்திரமில்லாதனவாயுள்ள ஆன்மாக்கள், தமது சாமர்த்தியத்தின் விளக்கம் இன்றிச் செயலற்றனவாயும், அறிவில்லாதனவாயும் இருக்கின்றன. அவ்வான்

மாக்கள் தமது சாமர்த்தியத்தை மலத்தால் மறைக்கப்படாத தாகவும், எல்லாப் பொருள்களையும் அறியும் தன்மையுடைய தாகவும் தாமே செய்துகொள்ளுதற்குச் சாமர்த்திய முடையன வாகா என்பதாம்.

ஆன்மாக்கள் மலத்தோடு கூடியிருத்தலால், தமதுசாமர்த் தியமான ஞானக்கிரியா சத்திகளின் விளக்கம் இன்றிச் சுதந்தி ரம் இல்லாதனவாயும், ஞானமில்லாதனவாயும், கிரியையில் லாதனவாயும் ஆகின்றன. ஆதலால், தமது சாமர்த்தியத்தை விளக்கம் செய்யக்கூடிய சிவனை எதிர்டார்க்கின்றன என்பது கருத்து.

சுவோகத்தின் பிற்பாதியால் ஆன்மாக்கள் தமது ஞானத் தினால் தமது சாமர்த்தியத்தின் விளக்கத்தைச் செய்து கொள்ளுமென்றல் கூடாது என்று கூறுகின்றனர்.

அவ்வாறு கூறியதன் கருத்தாவது, மலமானது திரவிய மாயிருத்தலால் கண்ணிலுள்ள திரவியமான படலம்போல் ஞானமாத்திரத்தால் நாசமடைவதில்லை. ஆனால், வேறான கண் வைத்தியன் செயலால் படலம் நசிப்பதுபோல, மலம் ஈசு வர வியாபாரமான தீக்ஷையினாலேயே நசிக்குமென்க. இவ் விஷயம் தத்துவ சங்கிரக லகு வியாக்யானத்தில் நம்மால் விரி வாய்க் கூறப்பட்டிருத்தல் காண்க. (8)

(9) யாதொரு காரணத்தால் ஆன்மாக்களுக்கு மலத்தின் தடையிருத்தலபற்றிச் சிவனால் *வசீகாரம் அநாதியாய்ச் சித் தித்திருக்கின்றதோ, அந்தக் காரணத்தால் இந்த ஆன்மாக்கள் சிவனால் மறைக்கப்படுவனவாகவும், கட்டப்படுவனவாகவும், சோதிக்கப்படுவனவாகவும், போதிக்கப்படுவனவாகவும் இருக் கின்றன என்பதாம்.

---

* வசீகாரம் — தன் வசமாகச் செய்தல்.

ஆன்மாக்கள் மலத்தால் மறைக்கப்பட்டிருத்தலால், மலத்தால் மறைக்கப்படாத பரமசிவனால் அநாதியே தன்வசமாகச் செய்யப்பட்டிருக்கின்றன. அந்தக் காரணத்தினால்தான் இவ்வான்மாக்கள் திரோதான சத்தியால் மறைக்கப்பட்டிருக்கின்றன. கன்ம பலன்களை அநுபவிப்பதற்காகக் கலை முதலிய தத்துவங்களாற் கட்டப்பட்டிருக்கின்றன. இவ்விடத்தில், திரோதானமென்பது, பாசத்துக்குச் சாமர்த்தியத்தை உண்டுபண்ணி, ஆன்மாக்களுக்கு யோக்கியமான போகங்களை அநுபவிக்கச் செய்தல் என்னும் திரோபவமாகும். பின்னர், மலபரிபாகம் வந்து தீக்ஷையினால் மலம் முதலிய பாசம் நசிக்கச்செய்து சோதிக்கத்தகுந்தவராவர். அந்தச் சிவத்தன்மையின் விளக்கத்தால் அறிவிக்கத்தகுந்தவராகவும் ஆகின்றனர்.* (9)

(அ—கை) இவ்விஷயத்தில் பூருவபக்ஷியினுடைய ஆசங்கையைக் கூறுகின்றார்.

(10) ஞானம் முதலிய சாமர்த்தியம் நித்தியமாய்ச் சித்தித்திருந்தால் மலம் முதலியவற்றை ஒப்புக்கொள்ளுவது நியாயமாகும் எனில், அஃதுண்மையே. யாதொரு காரணத்தால் ஈசுவரனிடத்தில் ஞானக்கிரியா சாமர்த்தியம் நித்தியமாய்க் காணப்பட்டிருக்கின்றதோ, அந்தக் காரணத்தால் அதனினும் வேறாய் ஆன்மாவினிடத்து அநித்தியமான ஞானக்கிரியைகளை ஒத்துக்கொள்ளுதல் கூடாது என்பதாம்.

ஞானக்கிரியா சாமர்த்தியம் நித்தியமாகச் சித்தித்திருந்தால் அவற்றை மறைத்தற் பொருட்டு மலம் முதலியவற்றை ஒப்புக்கொள்ளுவது நியாயமாகும். அந்த ஆன்மாவினிடத்துள்ள ஞானக்கிரியா சாமர்த்தியம் அநித்தியமாய்க் காணப்படுகிறபடியால் மறைக்கத் தகுந்த மலம் முதலிய பொருள்களை எதற்காக ஒப்புக்கொள்ளல் வேண்டும்? என்று ஆசங்கை நிகழ, அதற்குச் சமாதானங் கூறுகின்றார். அஃதுண்மையே.

* சிவத்தன்மை விளங்கப்பெறுகின்றனர் என்பது கருத்து.

யாதொரு காரணத்தால் ஈசுவரனிடத்தில் அந்த ஞானக்கிரியா ரூபமான சைதன்னியமானது நித்தியமாகக் காணப்படுகிறதோ, அந்தக் காரணத்தால் ஆன்மாக்களிடமிருக்கும் ஞானக்கிரியைகளும் சைதன்னியமாயிருத்தல் பற்றி நித்தியமேயாகும். அவ்வாறு கொள்ளாவிடில், ஆன்மாக்களுக்கும் விகாரம் ஏற்பட்டுச் சடதன்மை, அநித்தியத்தன்மை முதலிய குற்றங்கள் சம்பவிக்கும் என்க. (10)

(அ—கை) மலம் என்னும் பொருளை ஒத்துக்கொள்ளாவிடின் ஆன்மாக்களுக்குச் சரீர சம்பந்தமும் சம்பவியாது என்று கூறுகின்றார்.

(11) சம்சாரிகளுக்கு மாயாவிகாரமான தேக சம்பந்தத்தில் கன்மத்தோடு கூடிய மலமானது காரணமாய் இருக்கின்றது. மலசத்திகள் ஒவ்வொரு ஆன்மாக்கள் தோறும் வேறு வேறாக இருந்துகொண்டு ஆத்ம குணங்களை மறைக்கின்றன என்பதாம்.

கன்மபலன்களை அநுபவிப்பதன் பொருட்டுச் சரீர முதலியவை அவசியமாதலால், மலமில்லாத முத்தாத்மாக்களுக்குக் கர்மாநுபவம் இல்லாமைபற்றிச் சரீர சம்பந்தம் இல்லை. இவ்வாறே ஸ்ரீ சுவாயம்புவாகமத்தில் "பசுவினுடைய மாயாமயமான எல்லா உள்பொருள்களும் கர்மாநுபவத்திற்காகவே இருக்கின்றன" என்றும், "அவ்வாறேவேறிடத்திலும், உயிர்களுக்குக் கன்மத்தினாலும் அநேகவிதமான சரீரங்கள் உண்டாகின்றன" என்றும் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வாறாயின் மலம் ஒன்றாதலால் ஒரு ஆன்மாவினுடைய மோக்ஷகாலத்தில் எல்லா ஆன்மாக்களும் மோக்ஷம் அடையவேண்டும் என ஆசங்கை நிகழ, மலசத்திகள் என்னும் பிற்பாதியாற் சமாதானங் கூறுகின்றார். அஃதாவது, மலமானது ஒவ்வொரு ஆன்மாக்கள் தோறும் வேறு வேறான அநேக சத்திகளுடன் கூடியிருத்தலால் ஒரு சத்தியானது பரிபாகத்தால் நசிக்க அந்தச்

சத்தியால் மறைக்கப்பட்ட ஆத்மாவுக்குத் தான் மோக்ஷம். அனைவருக்கும் இல்லை யென்பது கருத்து என்க. (11)

(12) மலமானது பக்குவமடையுங் காலத்தில் ஆன்மாக்களினுடைய ஞானக்கிரியைகளை மறைப்பதினின்றும் நீங்குகின்றது பரிபாக விசேடத்தின் சேர்க்கையால் அந்த மலமானது ஒவ்வொரு ஆத்மாவிற்கு ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொருவிதமாக நீங்குகின்றது என்பதாம்.

மலமோ வெனில், பரிபாக மடைவதனால் ஆன்மாக்களினுடைய ஞானக்கிரியைகளை மறைக்கவினின்றும் நீங்குகின்றது. அம்மலம் சடப்பொருளாயிருத்தலால், தானாகவே நீங்குகிறதில்லை ஆயின், எதனால் நீங்குகின்றதெனின், சிவனுடைய செய்கையான தீக்ஷையினாலேயே நீங்குமென்று மேலேசொல்லியிருக்கின்றோம். பரிபாக விசேட சேர்க்கையால் என்னும் பிற்பகுதியால், அந்த மலபரிபாகமானது, முறையே விரிகின்ற சுபாவமுடைய தாமரைபோல நியதமான காலத்தையுடையதில்லை என்று கூறுகின்றார். (12)

(அ—கை) ஆகலால், பரிபாக விசேட சம்பந்தத்தால் பரிபாகத்தின் தாரதம்மியம் நிகழ்ந்து அம்மலபரிபாக விசேஷரூபமான சாதன வேறுபாட்டால் ஆன்மாக்களுக்குப் பரமுத்தி, அபரமுத்தி என முத்தி வேறுபாடுகள் நிகழ்கின்றன என்று கூறுகின்றார்

(13) ஆதலினாற்றான் ஆன்மாக்களுக்குக் காலபேதம், குணபேதம் என்னும் சாதன வேறுபாட்டால் முத்தி வேறுபாடுகள் காணப்படுகின்றன, வேறு காரணத்தாலில்லை. ஒரு காலத்தும் ஈசுவரனிடத்திருந்து முத்தி வேறுபாடு சம்பவிக்காது என்பதாம்.

மதங்கம் முதலிய மூலாகமங்களில் ஏழு விதமாகக் கூறப்பட்ட முத்தியானது பத்தி சிரத்தை என்னும் குண வேறுபாடு,

காலவேறுபாடு முதலிய சாதன வேறுபாட்டால் உண்டாகின்றன. அச்சாதன வேறுபாடானது மலபரிபாக தாரதம்மியத்தினலேயே நிகழ்கின்றன. வேறு விதத்தால் நிகழ்தலில்லை. மலபரிபாகத்தைக் காரணமாகக் கொள்ளாத தனித்த ஈசுவரனிடமிருந்தே இவ்விதமுத்தி வேறுபாடுகள் உண்டாவனவல்ல. இவ்வாறு கொள்ளவில்லையானல், நடுவின்மை முதலிய தோஷங்கள் ஈசுவரனுக்கும் உண்டெனக் கொள்ளவரும். எல்லா ஆன்மாக்களுக்கும் அநுக்கிரகம் செய்யும் ஈசுவரனுக்கு நடுவின்மை உண்டென்றல் கூடாது என்க. (13)

(அ—கை) இம் மலபரிபாக தாரதம்மியம்பற்றியே நைட்டிகம் முதலிய தீக்ஷை வேறுபாடும் பொருத்தமுடையன என்று கூறுகின்றார்.

(14) இவ்வாறு அளவில்லாத மலபரிபாகம் என்னும் நிமித்தத்திற்கு ஏற்ப, ஈசுவரனல் முத்தியின் பொருட்டு நல்ல யுத்தியுடன் சாதன வேறுபாடுகள் கூறப்பட்டன. அவ்வேறுபாடுகள் வேறு காரணத்தாற் கூறப்படவில்லை என்பதாம்.

இதன் கருத்தாவது, மலபரிபாகம் அநேகமன்றி ஒரேவிதமாய் இருந்தால் மல நிவிர்த்திக்கான உபாயமும், நிவிர்த்தியினலுண்டாகும் பயனும் ஒரேவிதமாக இருக்கவேண்டும். அவ்வாறின்மையின், மலபரிபாகம் அநேக விதமென்க. இவ்விதமான தீக்ஷையின் வேறுபாடும் மலபரிபாகத்தின் வேறுபாடும் நம்மால் மிருகேந்திரவிருத்தி தீபிகையில் விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றன. (14)

(அ—கை) சாதனங்கள் அநேகம் என்பதை விரித்துக் கூற ஆரம்பிக்கின்றார்.

(15) மலமானது எந்த ஆத்மாவிற்கு எவ்வகைப்பட்ட பாசங்களோடு எவ்வாறு நின்று தடைசெய்கின்றதோ, அவ்வாறே அந்த ஆன்மாவிற்கு அவ்வகைப்பட்ட பாசங்களோடு

அவ்வாறு நின்று பந்தப்படுத்துந் தன்மையினின்றும் நீங்குகின்றது என்பதாம்.

மலமானது, எக்த விஞ்ஞான கேவலர் முதலிய ஆன்மாக்களுக்கு எத்துணைப்பாசங்களோடு எவ்வாறுநின்று தடைசெய்கின்றதோ, அந்தந்த ஆன்மாக்களுக்குத் தன்னுடனிருக்கும் அத்துணைப்பாசங்களோடு, தான் பந்தப்படுத்தந் தன்மையினின்று நீங்குகின்றது. அஃதாவது, விஞ்ஞான கேவலருக்கு மலம் தான் மாத்திரமாயிருந்து தனது காரியரூபங்களான அறியாமை, செயலில்லாமை, கேடடைதல் என்னும் பாசங்களோடு கூடித் தடைசெய்கின்றது. இவ்வாறே சுவாயம்புவாகமத்திலுங் கூறப்பட்டிருத்தல் காண்க. பிரளயாகலருக்குக் கன்மத்துடன் கூடி மேற்கூறப்பட்ட பாசங்களோடு தடை செய்கின்றது. சகலருக்கு அக்கன்மங்களோடும், அவற்றிற்கு உரிமையான பொது, சிறப்பு என்னும் புவனங்களோடும் மேற்கூறிய பாசங்களோடுங் கூடித் தடைசெய்கின்றது. நீங்கும் பொழுதும் அவ்வவற்றோடு நீங்குகின்றது என்க. (15)

(16) (ஆதலால்) இவ்வாறு மலநாசங்களைச் செய்யக்கூடிய முத்தி சாதனங்கள் யாதொரு காரணத்தாற் சிவசாத்திரங்களான சிவாகமங்களிற் காணப்படுகின்றனவோ, அந்த முத்தி சாதனங்கள்,மலபரிபாகத்தின் தாரதம்மியமான அந்தக் காரண வேறுபாடில்லையாயின் யுத்தியுடன் கூடினவையாகச் சித்திப்பதில்லை என்பதாம்.

வேருயும், உடனும் உள்ள பாசங்களுக்கு நாசத்தைச் செய்வனவாயும், சகலர் முதலிய வேறுபாட்டால் சாதார, நிராதாரமென்னும் பகுப்பினையுடையனவாயும், நைட்டிகம் முதலிய வேறுபாடுகளையுடையனவாயும் விளங்கும் தீக்ஷை என்னும் சாதனங்கள் எந்தக் காரணத்தால் நூல்களிற் சொல்லப்படுகின்றனவோ, அந்தக் காரணத்தால் அந்தச் சாதனங்கள், மலபரிபாக தாரதம்மியமென்னுங் காரண வேறுபாடு இல்லையாயின்

யுக்திக்குப் பொருத்தமாகச் சித்திப்பதில்லை. ஆதலால், நூல்களிற் கூறப்படுஞ் சாதன வேறுபாடு யுக்தியோடு பொருந்த வேண்டுமாயின என்னும் அருத்தாபத்திப் பிரமாணத்தால் முத்தி வேறுபாடும், அதற்குக் காரணமான மலபரிபாக வேறுபாடும் உறுதியாய்க் கொள்ளத்தக்கன.

மலபரிபாகத்திற்கு அடையாளங்கள் நூல்களிற் சொல்லப்படுகின்றன. எவ்வாறெனில், எந்த ஆன்மாவுக்குச் *சத்திநிபாதம் உண்டாகின்றதோ அந்த ஆன்மாவிற்கு அதனடையாளமாக முத்தியில் மிகுந்த விருப்பமும், சமுசாரத்தில் வெறுப்பும், சிவனடியார்களிடத்துச் சிரத்தையும், சிவசாத்திரங்களில் பத்தியும் நிகழும். இவ்வித அடையாளம் இருந்தாற்றான் ஆசிரியரால் தீட்சை செய்யத் தகுந்தவராவர். இல்லையாயின், தீட்சைக்கு உரியராகார் என்க.

(அ—கை) இவ்விஷயத்தில் பூருவபக்ஷியின் ஆசங்கையைக் கூறுகின்றார்.

(17) மலத்தைப் பக்குவமாகச் செய்பவர் எவர்? எனில், எவரொருவர் உயிர்களின் பொருட்டுப் பலவிதமான கன்மங்களுக் கேற்பச் சரீர முதலிய சாதனத்தோடு கூடிய பலவிதமான போகங்களை முதற்காரணமான அசுத்த மாயையிலிருந்து தோற்றுவித்துக் கூட்டுவிக்கின்றாரோ அவரேயாம் என்பதாம்.

மலம், தான் சடமாயிருத்தலால் தானே பரிபாகமடையாது ஆதலால், அதனைப் பாகஞ் செய்பவர் யார்? என்பது வினாவின் கருத்து. இதற்குக் கூறிய சமாதானமாவது எவரொருவர் நானாவிதமான கன்மங்களுக்கு யோக்கியமான நானாவித சுகதுக்கானுபவங்களையும், அச்சுக துக்கானுபவங்களுக்குச் சாதனங்களான சரீர முதலியவற்றையும், அசுத்த மாயாதத்துவத்திலிருந்து தோற்றுவித்து உயிர்களின் பொருட்டுக்

* மலபரிபாகத்தில் நிகழ்வது சத்திநிபாதம்.

கொடுக்கின்றாரோ அவர்தான் பரமசிவன். அந்தப் பரமசிவனே மலத்தையும் திரோதான சத்தியால் பாகமடையச் செய்கின்றார். அவ்வாறு செய்யும் விஷயத்தில் அசுத்தாத்துவாவில் அனந்த தேவரை யதிட்டித்துச் செய்கின்றார். பரமசிவன் நேரே செய்வதில்லை. அவ்வாறே கிரணாகமத்திலும் "சுத்தாத்துவாவில் சிவன் கருத்தா; அசுத்தாத்துவாவில் அனந்தர் கருத்தா" என்று கூறப்பட்டிருத்தல் காண்க. (17)

(18) எவரொருவர் சுவாப காலத்தில் * முதற்காரணத்தைப் பரிணமிப்பதற்கு யோக்கியமாகச் செய்கின்றவராயிருக்கின்றாரோ, அவரே பிரளய காலத்தில் ஆன்மாக்களுடைய இளைப்பு நீக்கத்தின் பொருட்டு அந்த முதற்காரணத்தில் (ஒடுக்கி) வைக்கப்பட்ட உலகத்தையும் போக யோக்கியமாகச் செய்கிறார் என்பதாம்.

சுவாப காலத்தில் பரமசிவன் ஞானவித சத்தியையுடைய மாயையைக் காரிய ரூபமாய்ப் பரிணமிப்பதற்கு யோக்கியமாகச் செய்கின்றான். ஆன்மாக்களையும் மறுபடியும் போக யோக்கியர்களாகச் செய்கின்றான். (18)

(19) கன்மங்களையும் உயிர்களின் போகத்தின் பொருட்டு யோக்கியமாகச் செய்கின்றார் சர்வ வல்லமையைத் தரக்கூடிய பரமசிவன், எப்பொழுதும் தயையுடையவராதலால் உலகமானது காரிய ரூபமாய் விளங்கும் பொழுதும் எப்பொழுதும் மலத்தோடு கூடிய சில கன்மங்களைக் கன்ம நிவிர்த்தியின் பொருட்டுப் போக யோக்கியமாகச் செய்கின்றார் என்பதாம்.

கன[illegible]ம் உயிர்களின் போகத்திற்கு யோக்கியமாகச் செய்கின[illegible]வது, பக்குவமாகச் செய்கின்றானென் பது க[illegible]ிருகேந்திரத்திலும் "சகலாவத் தைன[illegible]ம் மல பரிபாக தாரதம்மி

---

[illegible]க்குங்காலம்.

யத்திற்குத் தக்கவாறு அறிவிக்க வேண்டியவர்களை அறிவித்துக் கொண்டும், மறைப்புச் சத்தியாற் றடுக்கவேண்டியவர்களைத் தடுத்துக்கொண்டும், உயிர்களின் கன்மங்களைப் பக்குவமாகச் செய்துகொண்டும், மாயா சக்திகளைப் பரிணமிப்பதற்குத் தயாராகச் செய்துகொண்டும் தோன்றுதற்குரிய சித்துப் பொருள் சடப்பொருள்களையும் பார்த்துக்கொண்டும் இருக்கின்றார்" என்றும், அவ்வாறே "சம்சாரத்தினால் துன்பமடைந்த சம்சாரிகளுக்கு இளைப்பு நீக்கத்தின் பொருட்டு எல்லா வுயிர் வர்க்கங்களுக்கும் நன்மையைச் செய்பவரான சிவபெருமான், போக சாதனங்களை உயிர்களுடன்கூட மாயையில் ஒடுங்கச் செய்து அந்த மாயையினையும் கடந்து நிற்கின்றார்" என்றும் கூறப்பட்டிருத்தல் காண்க. இவ்வாறு பிரளயகாலத்தில் சிவனுடைய வியாபாரத்தைத் தெரிவித்து திதிகாலத்திலும் சிவனுடைய வியாபாரத்தைக் கூறினார். எவ்வாறெனின், ஆன்மாக்களுக்குச் சர்வஞ்ஞத்துவத் தன்மை, சர்வ கர்த்திருத் தன்மை யென்னும் பெரும் வல்லமையைத் தருபவரான பரமசிவன் எப்பொழுதுங் கருணையோடு கூடியிருத்தலால் உலகம் காரிய ரூபமாயிருக்கும்பொழுதும், மலத்தோடு கூடிய சில கன்மங்களை அநுபவத்தினால் பக்குவமடையச் செய்து நிவிர்த்திக்கு யோக்கியமாகச் செய்கின்றார் என்றவாற்றாலென்க. இதன் கருத்தாவது, மல பரிபாகத்தின் பொருட்டுப் பக்குவமான சில கன்மங்களைத் திதிகாலத்தில் அநுபவிக்கச் செய்கின்றார் என்பது. (19)

(20) மல நிவிர்த்திக்கு முன்னரே மலத்திற்குத் தடை செய்யும் சாமர்த்தியத்தை உண்டுபண்ணுதற் பொருட்டு உயிர்களுடைய ஆற்றலுக்குத் தடையையும், [illegible] ிற்குச் சகாயத்தையும் செய்கின்றவராய் அந்தப் [illegible] காணப்படுகின்றார் என்பதாம்.

மல நிவிர்த்தி ய[illegible] சடமா
யிருத்தலால், அதற்கு[illegible] கரமை

பற்றி அதன் சாமர்த்தியத்தை நிகழச் செய்யும் பொருட்டுத் திரோதான சத்தியால் உயிர்களின் ஆற்றலுக்குத் தடையையும், தடை செய்யும் சத்திக்குச் சகாயத்தையும் செய்கின்றவராய்ப் பரமசிவன் காணப்படுகின்றார். உயிர்களுக்கு அநுக்கிரகம் செய்வதற்காகப் பிரவிருத்தித்த பரமசிவன் அவ்வுயிர்களினுடைய ஆற்றலை மறைத்துப் பாசங்களுக்கு அநுக்கிரகஞ் செய்தல் பொருந்துமோவெனில், இக்கேள்வி பொருந்தாது. எதனாலெனில், கூறுதும்:—மலம் பரிபாகமடையவில்லையாயின் அதனை நீக்கமுடியாது. ஆதலால் அம்மல பரிபாகத்தின் பொருட்டு மாயாகாரியங்களின் சப்பந்தத்தால் போகங்களை அநுபவிக்கச் செய்தல் என்னும் திரோதானத்தை ஈசன் செய்கின்றான். இத்திரோதானம் துக்கத்தைத் தரக்கூடியதாயிருப்பினும், நோய் நிவிர்த்தியின் பொருட்டுத் துக்கத்தைத் தரக்கூடிய காரம் முதலிய மருந்துகளால் பின்னர் துக்க நிவிர்த்தியாகிய சுகத்தை வைத்தியன் தருமாறுபோலென்க. அவ்வாறே மிருகேந்திரதிலும், "எவ்வாறு வைத்தியன் நோயுடையானைப் புல் முதலியவற்றின் கார முதலியவற்றை வைத்துத் துன்புறச் செய்பினும், முடிவில் நன்மையாய் முடிகின்றமையால், துன்பத்தைத் தருபவனாக ஆகின்றானில்லையோ, அவ்வாறே ஈசனும் மல நீக்கத்திற்காகச் செய்யும் துன்பாநுபவத்தைத் துன்பமாக எண்ணக்கூடாது" என்றுகூறப்பட்டிருத்தல் காண்க. (20).

(21) சிவபெருமான், மலம் நிவிர்த்திக்கு யோக்கியமாயிருப்பதை யறிந்து உயிர் வர்க்கங்களின் முத்தியின் பொருட்டு சாதனத்தைச் சேர்க்கின்றார். கேவலத்தில் மாயைக்குப் பரிபாகம் உளவாதல்போல மலத்திற்கும் அசேதனமாயிருத்தலாற் பரிபாகம் கொள்ளப்பட்டிருக்கின்றது என்பதாம்.

மலம் பரிபாகமடைந்து நிவிர்த்திக்கு யோக்கியமானதென்று அறிந்து பரமசிவன் உயிர்களின் முத்தியின் பொருட்டுத் தீட்சையென்னும் பெயருடைய தனது சத்தி ரூபமான சாதனத்தைச் சேர்க்கின்றாரென்பது கருத்து. அவ்வாறாயின்,

கன்மாநுபவத்தையே மல பரிபாகத்திற்குக் காரணமாகக் கூறி யிருத்தலால் பிரளய காலத்தில் மலத்திற்குப் பரிபாகம் சம்பவி யாதென்று வினவ, பிரளய காலத்தில் மாயையைப் போல மலமும் சடப்பொருளா யிருத்தலால் சித்துப் பொருளாகிய பரமசிவனால் அதிட்டிக்கப்பட்டுப் பரிபாகத்தை யடைகின்றது என்று சமாதானம் கூறப்பட்டது (21)

(அ—கை) இவ்விஷயத்தில் பூருவபக்ஷிகளின் ஆசங்கை யைக் கூறுகின்றார்.

(22) பரமசிவன் மலத்தை, நிவிர்த்திக்க யோக்கியமாகச் செய்கின்றார் எனில், அவ்வாறு செய்யுங் காலத்து எல்லா ஆன் மாக்கள் விஷயத்திலும் ஒரேவிதமாக ஏன் செய்கின்றாரில்லை? என்று கேட்கும் பூருவபக்ஷியானவன் அடுத்த சுலோகத்திற் கண்டவாறு நம்மால் வினவத் தகுந்தவனுவன் என்பதாம் (22)

(அ—கை) எவ்வாறு வினவத் தகுந்தவன் என்பதைக் கூறுகின்றார்.

(23) பரமசிவன் அவரவர்களுடைய கன்மங்களை ஒரே காலத்தில் அநுபவிக்க யோக்கியமாகவாவது, கன்மங்களைச் செய்த மறு க்ஷணத்தில் அநுபவிக்க யோக்கியமாகவாவது ஏன் செய்கிறாரில்லை? என்று கேட்போம். அநேகமாயிருத்தலால் வெவ்வேறு காலங்களில் அநுபவிக்க யோக்கியமாயிருக்கின்றது என்று பூருவபட்சி சமாதானங்கூறின், அது சமாதானமாகாது என்பதாம்.

அசுவமேதம், பிரமக்கொலை முதலிய கன்மங்கள் ஒன்றுக் கொன்று மாறுபாடான பயனையுடையனவாயிருத்தல்பற்றி ஒரே காலத்தில் அநுபவங் கூடாதென்று சமாதானங் கூறின், அந் தச் சமாதானம் பொருந்தாது என்றனர். (23)

(அ—கை) அது ஏன் சமாதானமாகாது என்று கேட்ப வனுக்குக் கூறுகின்றார்.

(24–25) யாதொரு காரணத்தால் ஈசுவரனிடத்தில் சர்வ விகாரங்களையும் உண்டுபண்ணுவதில் சாமர்த்தியம் வாய்ந்த சத்தியும், மாயையினிடத்தில் எல்லாக் கன்ம பலன்களுக்கும் வியாபகமா யிருக்குந் தன்மையும், சம்சாரியினிடத்தில் வியாபகத் தன்மையும் போகத்தை யநுபவிக்கும் கர்த்தாவாயிருக்குந் தன்மையும் இருக்கின்றனவோ, அந்தக் காரணத்தால், ஈசுவரன் மாயா தத்துவத்தில் நின்று அநேக விதமான தநுகரணாதிகளை யுண்டுபண்ணி ஒரே காலத்தில் எல்லாக் கன்ம பலன்களையும் உயிரை யநுபவிக்கும்படி செய்யவேண்டும் என்பதாம்.

எல்லா உயிர்களுக்கும் ஒரே காலத்தில் மல பரிபாகத்தை ஈசன் ஏன செய்வதில்லை என்று கேட்கும் பூருவபக்ஷியை, எந்தக் காரணத்தால் சிவனிடத்தில் சாதாரண, அசாதாரணம் என்னும் மாயா விகாரங்களை யுண்டுபண்ணும் விஷயத்தில் சாமர்த்தியம் வாய்ந்த சத்தியிருக்கின்றதோ, அவ்வாறே மாயையினிடத்திலும் எல்லாக் கன்ம பலன்களிடத்திலும் வியாபகமாயிருக்குந் தன்மையும், சம்சாரியினிடத்தில் வியாபகத் தன்மையும், போகத்தை யநுபவிக்கும் கர்த்தாவாயிருக்குந் தன்மையும் இருக்கின்றனவோ, அந்தக் காரணத்தால் ஈசன் மாயா தத்துவத்திலிருந்து ஒரே காலத்திலேயே அநேக சரீரம் முதலியவற்றை யுண்டுபண்ணி எல்லாக் கன்ம பலன்களையும் உயிரை யநுபவிக்கச் செய்தல் வேண்டும் என்று கேட்போம். (24–25)

(அ—கை) மறுபடியும் பூருவபக்ஷியின் ஆசங்கையைக் கூறுகின்றார்.

(26) முற்பிற்பாடான முறையில் அநுபவிக்கப்படும் கன்ம பலன்களைக்கொண்டு (கன்மத்தின் பக்குவமும் ஒன்றன் பின்னொன்றாக உண்டாகும் என்று) அநுமானஞ் செய்கின்றோம். (என்பது பூருவபட்சியின் கூற்று) அவ்வாறே பரமசிவன் மலங்களையும் பக்குவஞ் செய்கின்றான். (என்பது சமாதானம்) ஆத

லால், கன்ம பரிபாகத்திற்கு நீ கூறுஞ் சமாதானமே மல பரிபாகத்திற்குமாம் என்பதாம்.

கன்ம பலத்தின் அநுபவம் ஒன்றன்பின் ஒன்றாய் நிகழக் காண்கின்றமையால், சூரியனால் தாமரையிதழ்கள் ஒன்றன்பின் ஒன்றாய் விரியப்படுமாறுபோல, சிவபெருமானால் கன்ம பரிபாகமும், அதன் பலன்களை யநுபவிப்பவனுடைய தகுதிக்குத் தக்கவாறு ஒன்றன்பின்னொன்றாய்ச் செய்யப்படுமென்று அநுமானஞ் செய்கின்றோம் எனில், நன்று சொன்னாய். நீ சொல்லியவாறுபோலவே, ஆன்மாக்களுக்கு ஒன்றன் பின் ஒன்றாய் நிகழக்கூடிய சம்சாரத்தில் வைராக்கியம், சிவபத்தி முதலிய சத்திநிபாதக் குறிகளைக்கொண்டு அந்தச் சத்திநிபாதத்திற்குக் காரணமான மல பரிபாகமும் ஒன்றன் பின் ஒன்றாய் உண்டாகின்றதென்று நம்மாலும் அநுமானஞ் செய்யப்படுகின்றது. ஆதலால், உன்னால் ஒரே காலத்திலுயிர்களனைவருக்கும் மல பரிபாக முண்டாகட்டும் என்ற ஆசங்கை நம்மிடஞ் செய்யத் தக்கதன்று. அவ்வாறே, வேறு நூல்களிலுங் கேள்வியுஞ் சமாதானமும் வாதி பிரதிவாதிகளுக்குப் பொதுவாயிருந்தால் அவ்விஷயத்தில் ஒருவனை ஒருவன் கேள்வி கேட்கத் தகாதென்று கூறப்பட்டிருத்தல் காண்க. (26)

(அ—கை) இவ்விஷயத்தையே வெளிப்படையாகக் கூறுகின்றார்.

(27) மேலே கூறப்பட்ட சத்திநிபாதத்திற்குக் காரணமான தீக்ஷை செய்தல் முதலிய காரியங்களைக்கொண்டு மல நாசம் ஊகித்தறியப்படுகின்றபடியால் பரமேசுவரனும் மலத்தைப் பரிபக்குவமாகச் செய்வதற்குச் சமர்த்தனாகின்றான் என்பதாம்.

மேலே கூறப்பட்ட தீக்ஷை செய்தல் முதலிய சத்திநிபாதக் குறிகளைக்கொண்டு மல நிவிர்த்தி யறியப்படுகின்றது. படவே, ஒன்றன்பின்னொன்றாய்க் காரியங்கள் காணப்படுகின்ற

மையால் அவ்வாறே மல பரிபாகத்தையும் சிவன் செய்கின்றான். ஒரே காலத்திற் செய்கிறதில்லை யென்று அநுமானஞ் செய்கின்றோம். (27)

(அ—கை) இவ்வாறு திதிகாலத்தில் மல பரிபாகம் கிரமமாய்க் காணப்படுவதுபோலச் சங்கார காலத்தும் மல பரிபாக யோக்கியர்களுக்குத் தகுந்தவாறு மல பரிபாகம் உண்டாகின்றது. அவ்வாறின்றி ஒரே காலத்தில் அனைவருக்கும் மல பரிபாகம் உண்டாகின்றதில்லை. ஆதலால், சங்காரகாலத்தில் ஒரேவிதமாக மல பரிபாகத்தை ஈசுவரன் ஏன் உண்டுபண்ணவில்லை? என்னுங்கேள்வி உன்னாற் கேட்கத்தக்கதில்லை. கேட்பினை, நீயே சமாதானங் கூறத்தகுந்தவனுவாய் என்று கூறுகின்றார்.

(28) திதிகாலத்தில் இருவருக்குஞ் சமாதானம் ஒன்றான விடத்து சங்கார காலத்திலும் மாயைக்கும் கன்மத்திற்கும் பரிபாகமுண்டாகும் விஷயத்தில் (இவ்வாறு)கேட்பாயாகில் நீயே சமாதானங் கூறத்தகுந்தவனுவாய் என்பதாம்.

மாயைக்குப் பரிபாகமாவது காரியப்படுஞ் சாமர்த்தியத்தை யுண்டுபண்ணுதல். கன்மத்திற்குப் பரிபாகமாவது பலன்றரச் செய்தல். ஏனைய வெளிப்படை. (28)

(அ—கை) எவ்வாறு சமாதானஞ் சொல்லத் தகுந்தவன் என்பதைக் கூறுகின்றார்.

(29–30) நியமமற்றதான சிருட்டியாரம்பத்தில் மாயாப் பிரவாகத்தின் மத்தியில் எந்தப் பொருள் எந்தக் காலத்தில் எந்தவிதமாக உண்டாகின்றதோ, அந்தப் பொருள் அந்தக் காலத்தில் அந்தப் பிரகாரமே ஈசுவரனால் தோற்றுவித்தற்கு உரியதாகின்றது. இச்சமாதானம் முத்திவிஷயமான கேள்வியிலும் அந்த முத்திக்குக் காரணமான மல பரிபாக விஷயமான கேள்வியிலும் ஒக்கும் என்பதாம்.

ஒரே காலத்தில் மாயா காரியங்கள் உண்டாகட்டுமே யென்று பூருவபட்சியைக் கேட்டவிடத்து, இன்னதன் பின் இன்னதுண்டாக வேண்டுமென்னும் நியமமில்லாத சரீர முதலியவற்றின் சிருட்டி திதி சங்காரம் காணப்படுகின்றமையால் மாயாப்பிரவாஹத்தின் மத்தியிலிருந்து எந்தப்பொருள் எந்தக் காலத்தில் எந்த முறையாக உண்டாகின்றதோ அந்தப்பொருள் அந்தக் காலத்தில் அந்தப் பிரகாரம் ஈசுவரனால் தோற்றுவித்தற்கு உரியதாகின்றது என்று அப்பூர்வபட்சி விடை கூறுவனாயின் இவ்வாறு கர்ம பரிபாகமும் ஒரே காலத்தில் உண்டாகட்டும் என்று கேட்டவிடத்தும் சமாதானம் சொல்லத் தகுந்தவனாவன். இச்சமாதானமே ஒரே காலத்தில் அனைவருக்கும் மோட்சத்தை ஈசுவரன் ஏன் கொடுக்கக் கூடாது என்னுங் கேள்விக்கும் அந்த மோட்சத்திற்குக் காரணமான மல பரிபாகம் அனைவருக்கும் ஒரே காலத்தில் ஏன் உண்டாகக் கூடாது என்னுங் கேள்விக்கும் விடையாகும். (29)

(அ—கை) இந்த மலத்திற்குப் பொருளாயிருக்குந் தன்மையும், ஒன்றாயிருக்குந் தன்மையும் உண்டென்று நூல்களில் விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றன என்று கூறுகின்றார்.

(30–31) அசுத்தியைச் செய்யும் ஆணவ மலத்திற்குப் பொருளாயிருக்குந் தன்மையும், ஒன்றாயிருக்குந் தன்மை முதலியனவும் நூல்களில் விரிவாகவும் நன்றாகவுங் கூறப்பட்டிருக்கின்றன. அந்த மலத்திற்கு அநேக சத்திகள் உண்டென்று ஒத்துக்கொள்ளாவிடில் அதற்கு நிவிர்த்தியில்லை. மலத்திற்கு அநேக சத்தி முதலியன உண்டென்பது நூலோடு பொருந்திய யுத்தியினால் சித்தித்திருக்கின்றது என்பதாம்.

அந்த மலம் ஒன்றாயும், அநாதியாயும், வலிமையாயும், வியாபகமாயும், பரிபாகத்தில் நசிக்கும் அநேகசத்திகளையுடையதாயும், எல்லா வுயிர்களிடத்தும் இருக்கின்றதென்று நூல்களிற் கூறப்பட்டிருக்கின்றது. அந்த மலத்தின் சொரூபமானது மேலே கூறியவாறு அநேக சத்திகளையுடையதாகும். அவ்

வாறு ஒத்துக்கொள்ளவில்லையாயின், மலம் ஒன்றுயிருத்தலால் உயிர்களிடத்திலிருந்து அம்மலத்தை விலக்க முடியாது. எவ்வாறெனில், மலம் ஒன்றாயிருந்தால் ஒருவன் முத்தியடையும் பொழுது அனைவரும் முத்தியடைய வேண்டும். அல்லது, முத்தியென்பதே இல்லாமற் போகவேண்டும் என்ற ஆசங்கை நிகழும். ஆதலால், அநேக சத்திகளையுடையதா யிருக்கின்றது என்றனர். மலத்திற்கு அநேக சத்திகளுடன் கூடியிருக்குந் தன்மை முதலிய சொரூபம் நூலொடு பொருந்திய யுத்தியினால் நிர்ணயிக்கப்படுகின்றது. முதலிய என்னும் சொல்லால் அநாதித்தன்மை கிரஹிக்கத் தகுந்தது. நூல்களிலும் அவ்விதமே. அந்த மலம் ஆன்மாக்களுக்கு அநாதி காலத்திலேயே இருக்கின்றதென்று சொல்லல் வேண்டும்; நடுவில் வந்ததென்றால் வந்ததற்குக் காரணங் கூறவேண்டும்; காரணமின்றி வருமென்றால் சுவபாவமானபடியால் முத்தான்மாக்களையும் மறைக்கும்; மறைத்தாலென்னவெனில், மோக்ஷப்பிரயத்தனம் வீணாகும் என்று கூறப்பட்டிருத்தல் காண்க. அந்த மலத்தைப்பற்றிய ஆராய்ச்சி நம்மால் மிருகேந்திரவிருத்தி தீபிகையில் விரிவாய்ச் செய்யப்பட்டிருக்கின்றது. விரிவை அவ்விடத்துக் காண்க. விரியுமென றஞ்சி இவ்விடத்தில் விரிக்கவில்லை. (30—31).

(அ—கை) நூலைப் பூர்த்தி செய்கின்றார்.

(32) இரௌரவாகமத்திற்கு விருத்தியுரை செய்த காரணத்தால் விருத்திகாரரென் றழைக்கப்படும் சத்தியோஜோதி சிவாசாரியரால் உயிர்களுக்கு அநாதியாகவே சித்தித்திருக்கும் சுவாயம்பு வாகம சம்பந்தமான பொருள்களை அறியாதிருக்குந் தன்மையை நீக்குதற் பொருட்டுச் சுருக்கமாய்த் தத்துவத்திரயநிர்ணயஞ் சொல்லப்பட்டது என்பதாம்.

அநாதியே மலத்தால் மறைக்கப்பட்ட ஞானக்கிரியா சத்திகளோடு உயிர்கள் கூடியிருத்தலால், நையாயிகர்களால் உண்டு

பண்ணப்படும் அறியாமையை அவ்வுயிர்களிடமிருந்து நீக்குதற்கு இந்நூல் செய்தாரென்பது கருத்து. உயிர்கள் விகாரமற்றிருத்தலால், அவற்றை மறைக்கும் மலமும், மலமிருத்தலினால் இருக்கின்றதெனச் சித்திக்கும் மாயையும், மல நிவிர்த்தியைச் செய்யும் சிவனும் இப்பிரகரணத்தில் சுருக்கமாய்க் கூறப்பட்ட விஷயங்களாகும்.

தத்துவத்திரய நிர்ணயம்
முற்றுப் பெற்றது.

சோழதேசத்தில் குண்டின குலத்தில் உதித்தவராயும் ஸ்ரீசர்வாத்ம சிவனுடைய தாமரை மலர்போன்ற பாதங்களின் தூளிகளை ஆராதிக்கின்றவராயும் உலகமெங்கும் பிரசித்தி பெற்றவராயும் உள்ள ஸ்ரீமத் அகோரசிவாசாரியரால் ஸ்ரீ ஜன்மையென்னும் இவ்வியாக்யானத்தால் தத்துவத்திரய நிர்ணயத்தின் விளக்கம் சுருக்கமாய்ச் செய்யப்பெற்றது.

அகோரசிவாசாரியரா லியற்றப்பெற்ற
தத்துவத்திரய நிர்ணயத்தின் விருத்தி
முற்றுப் பெற்றது.
சிவபெருமான் திருவடி வாழ்க.

---

உ

# விஷய அகராதி.

அ



ஆ



இ



உ



க

கா



கே



ச



சி



சு



ஞா

த



தா



தி



தீ



நா



ப



பா



பி

பு



பூ



போ



ம



மா

வி



வே

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 5 | 22 | அறியவில்லே போ | அறியவில்லேயோ. |
| 34 | 9 | யுன்ளவராய் | யுள்ளவராய். |
| 58 | 17 | சபதம | சப்தம். |
| 79 | 13 | சமரபபம் | சம்ரம்பம். |
| 81 | 8 | பண்ணபபடு | பண்ணப்படு. |
| 102 | 31 | சரம் சிருட்டி ரீதரொடங்கி | சரீரம் சிருட்டி தெ |
| ... | ... | அமன்த்த | அதன்மத் |
| 115 | 18 | சத்தியோ | அசத்தியோ |
| 123 | 25 | தென் னும். | தென் றதே |
| 138 | 11 | தனவயத்தஞ | தன்வயத்தஞ |
| 153 | 1 | அவாதான் | அவர்தான் |
| 158 | 2 | பாகத்திற்குமா | பாகத்திற்கு மாகும் |